

# பந்தாடப்படுகிறதா?

**உ**லகக் கோப்பை கால்பந்து போட்டி ஆசியாவில் முதன் முதலாக நடக்கிறது என்பதற்காக ரொம்பவே பெருமைப்பட்டுக் கொள்ளாதீர்கள். கொஞ்சம் ஆராய்ந்தால் பந்தாடப்படும் குள்ள நரித்தனம் அதில் புதைந்திருப்பது தெரியும்!

கால்பந்து என்பது உலகெங்கும் ஆடப்பட்டு வரும் ஒரு விளையாட்டு. என்றாலும் அதில் தலைசிறந்து விளங்குபவை ஐரோப்பிய, மற்றும் தென்னமெரிக்க நாடுகள்தான்.

இப்போது சர்வதேச விளையாட்டுகளில் பொருளாதாரத்தின் பங்கு கணிசமானது. நுழைவுக் கட்டணம் வாங்கிக் கொண்டு போட்டிகளை ரசிப்பவர்களால் கிடைக்கும் வருமானத்தைவிட பல மடங்கு அதிகம் இந்தப் போட்டிகளுக்கான டீ.வி.


கல்கி இண்டர்நெட் முகவரி :
www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

உரிமையை விற்பதால் கிடைக்கும் தொகை. பல நாடுகளில் பல கோடி மக்களால் பார்க்கப்பட்டால்தானே மேலும் அதிக விலைக்கு டி.வி. உரிமையை விற்கலாம்?

பிற நாடுகள் போட்டியிடும்போது அதை டி.வி.யில் பார்ப்பவர்கள் நூறு பேர் என்றால், தனது நாடும் அதில் கலந்து கொள்ளும்போது அந்தப் போட்டிகளைச் சின்னத்திரையில் பார்ப்பவர்களின் எண்ணிக்கை லட்சமாகப் பெருகிவிடுமே. இதை மனத்தில் கொண்டு தான் பல்வேறு திட்டங்களைத் தீட்டியிருக் கிறது சர்வதேச கால்பந்து கூட்டமைப்பு.

ஆப்பிரிக்க நாடுகளில் மட்டும் டி.வி. உரிமையை இம்முறை இலவசமாகத் தந் திருக்கிறது. இதனால் 43 ஆப்பிரிக்க நாடுகள் ஜப்பானிலும் தென் கொரியாவிலும் நடை பெறும் கால்பந்து போட்டிகளை ஒளிபரப்ப வுள்ளன. இதனால் அங்கெல்லாம் கால்பந்து மோகம் வருங்காலத்தில் அதிகரிக்க வாய்ப்பு அதிகம். டிமாண்ட் அதிகமானால் அடுத்த கால்பந்து உலகக்கோப்பை போட்டிகளுக் கான டி.வி. உரிமையை அசாத்திய விலைக்கு ஆப்பிரிக்காவிலும் விற்று விடலாமே!

என்றுமில்லாத அதிசயமாக, இரண்டு நாடு களில் கால்பந்து உலகக் கோப்பை போட்டி களை நடத்த அனுமதித்ததற்கும் அடிப்படை இதுதான். தென்கொரியா, ஜப்பான் ஆகிய இரு நாட்டு மக்களும் இந்தப் போட்டிகளில் மிகத் தீவிர ஆர்வம் காட்டுவார்களே!

கால்பந்து உலகக் கோப்பை போட்டி களிலும் இட ஒதுக்கீட்டு முறை வந்ததற்குப் பொருளாதாரக் காரணங்களும் முக்கிய காரணம். தகுதிச் சுற்றிலேயே ஒரு கண்டத்தில் உள்ள அத்தனை நாடுகளின் அணிகளும் தோற்றுவிட்டால், அந்த நாட்டு மக்களின் பெரும்பாலானவர்களுக்கு இந்தப் போட்டி களைப் பார்ப்பதில் சுவாரஸ்யம் இருக்காது என்பதுதான்.

பெரும்பாலான தலைசிறந்த கால்பந்து அணிகள் ஐரோப்பாவில் இருந்தாலும் இப் போதைய விதிமுறைகளின்படி பதினான்கு ஐரோப்பிய அணிகளால் மட்டும்தான் தகுதிச் சுற்றுகளைத் தாண்டி வர முடியும். இந்த முறை அப்படி வந்திருக்கும் நாடுகள் பெல்ஜியம், குரேஷியா, டென்மார்க், போலந்து, அயர் லாந்து, ஸ்லோவேனியா, ஸ்வீடன், இங்கி லாந்து, ஜெர்மனி, இத்தாலி, போர்ட்சுகல், ரஷ்யா, ஸ்பெயின், துருக்கி.

இந்தப் பதினான்கு என்ற எண்ணிக்கை கூட வருங்கால கால்பந்து உலகக் கோப்பை போட்டிகளில் குறைக்கப்படலாம் என்று செய்தி கசிய, உலகக் கால்பந்து கூட்டமைப் பின் தலைவரான ஸெப் ப்ளாட்டர்மீது கடும் கோபம் கொண்டுள்ளது ஐரோப்பிய கால்பந்து கூட்டமைப்பு.

ஐரோப்பிய நாடு இழந்த வாய்ப்பை வேறொரு ஆசிய அல்லது ஆப்பிரிக்க நாட்டின் அணிக்கும் கொடுத்தால் தானே அங்கு கால்பந்து ஜுரமும், அதை டி.வி. யில் பார்க்கும் தாகமும் காட்டுத் தீபோல் பரவும். கத்தை கத்தையாக கரன்ஸிகள் கொட்டும்!

— குல்லூ



"உன்னால டிபார்ட்மெண்டுக்குக் கெட்ட பேரு; போலீஸ்காரனா இருந்துட்டு, மப்டில போயி பிக்பாக்கெட் அடிச்சியாமே..."

"நீங்கதானே ஸார், குற்றவாளிங்களை அவங்க வழியிலேயே போய்த் திருத்தணும்னு சொன்னீங்க!"

– சீர்காழி வி ரேவதி

"தேர்வு எல்லாம் நல்லாத்தான் எழுதி இருக்கேன்னு சொல்றே! அப்புறம் என்ன கவலை?"

"பேப்பர் திருத்தறவருக்கு அது சரியாப்படணுமேங்கற கவலைதான்!"

– கோமாகுடி இராசரத்தினம்





''டாக்டர்! நீங்கதான் எப்படியாவது இந்தக் கதைக்கு க்ளைமாக்ஸ் தரணும்!''

''அதுக்கு எங்கிட்ட எதுக்கு வர்றீங்க?''

''நீங்கதான் நிறையபேர் 'கதையை' முடிச்சு வச்சதா கேள்விப்பட்டேன்!''

- முத்துக்கண்ணு



"இதென்ன! மன்னர் மார்புக் கவசத்தை முதுகில் கட்டிக் கொண்டு போருக்குப் புறப்படுகிறார்?"

''போரில் புறமுதுகிட்டு, முதுகில் குத்துப்பட்டு வந் தார் என்ற அவப்பெயர் வந்து விடக் கூடாதே என்றுதான்!''

– எல். கோபாலகிருஷ்ணன்



# யுத்தம் வந்தால்?

"அமைதியான வழி முறைகளுக்காகத்தான் இதை உபயோகிப்பதாக இருக்கிறோம். ஆனால் வேறு காரணங்களுக்காக இதைப் பயன்படுத்த வேண்டிய நிலை ஏற்பட்டால் அதற்கும் தயங்க மாட்டோம்". இந்தியாவின் முதல் பிரதமர் நேரு 1948ல் அணுசக்தி ஆராய்ச்சிக் கழகத்தைத் துவக்கியபோது கூறியது இது. அந்தவேளை நெருங்கி விட்டதோ என்ற கேள்வி பிரம்மாண்டமாக எழுந்து அச்சுறுத்துகிறது இப்போது.

ஜம்முவில் பயங்கரவாதிகள் நடத்திய படுகொலைகள் தேசபக்தி குறித்தெல்லாம் பெரிதாக அலட்டிக் கொள்ளாத இந்தியர்களைக் கூட உசுப்பி விட்டிருக்கின்றன.

பல்வேறு இதழ்கள் நடத்திய கருத்துக் கணிப்புகளில் மிகப் பெரும்பாலானவர்கள் பாகிஸ்தானுடன் இந்தியா யுத்தம் செய்து, அந்த நாட்டிற்குப் பாடம் கற்பிக்க வேண்டுமென்று கூறியிருக்கிறார்கள். அமெரிக்கா போருக்கெதிராக ஆலோசனை கூறினாலும் அதை மதிக்க வேண்டாமென்பது பெரும்பாலானவர்களின் கருத்தாக இருக்கிறது.

'தொடர்ந்து அவமானப்படுவது அல்லது போர் இந்த இரண்டே வழிகள் தான் இப்போதைக்கு உள்ளன. அப்படியிருக்க தன்மானம் உள்ளவர்கள் எதைத் தேர்ந்தெடுப்பார்கள்?' என்கிற உணர்ச்சியான கேள்விகள் உலுக்குகின்றன.

பாகிஸ்தானின் குள்ள நரித்தனம் எந்தவொரு இந்தியனின் தன்மானத்தையும் உலுக்கிப் பார்ப்பதாகத்தான் இருக்கிறது. பயங்கரவாத இயக்கங்களைச் சேர்ந்தவர்களைக் கைது செய்வது போல் செய்து மூன்று மாதங்கள் முடிவதற்கு முன்பே அவர்களை விடுவித்து விட்டனர். போதாக்குறைக்குச் சிறையில் இருந்தபோதே அவர்களுக்குறிய சலுகைகள் அளிக்கப்பட்டன. பயங்கரவாத இயக்கங்களின் கணக்குகளை இயங்கவிடாமல் செய்துவிட்டதாக சர்வதேச அரங்கில் அறிவித்தது பாகிஸ்தான். ஆனால் அந்தக் கணக்குகளில் இருப்புத் தொகையாக உள்ளவை எழுபதிலிருந்து இருநூற்று ஐம்பது டாலர்கள் வரை மட்டுமே! (அதாவது முன்னதாகவே எச்சரிக்கை செய்து பணத்தை வெளியேற்ற உதவி செய்திருக்கிறது பாகிஸ்தான்.)

யுத்தம் என்று வந்துவிட்டால் ஒருங்கிணைந்துதான் நிற்போம். ஆனால் யுத்தம்

தேவையா? என்பது வெகு துல்லியமாக அலசிப் பார்க்க வேண்டிய கட்டம் இது. போர்ப் பகுதிகளுக்கு வெகு தூரம் தள்ளியுள்ள மாநிலங்களில் உள்ளவர்களும், ராணுவப் பணியின் கொடூரங்களையும் அபாயங்களையும் அறியாதவர்களும் கூறும் மேம்போக்கான கருத்துகளைக் கொண்டு தீர்மானிக்க வேண்டிய விஷயம் அல்ல இது.





யுத்தம் என்ற ஒன்று நடந்தால் பொருளாதாரம் மிக மோசமாக அடிபட்டுப் போகும்.

பதினோரு லட்சம் பேர் கொண்ட ராணுவத்திற்கான செலவு கொஞ்ச நஞ்சமாக இருக்கப் போவதில்லை. சமீப காலமாக எல்லைப் பகுதியில் அவர்களைக் குவிக்க வைத்த நடவடிக்கைக்கே நான்காயிரம் கோடி ரூபாய் செலவானது என்கிறது ஒரு கணக்கு.



செலவு ராணுவத்தினருக்கு மட்டுமல்ல. எல்லைப் பகுதிகளில் வசிக்கும் மக்களை வேறு பகுதிக்கு மாற்றுவதற்கு ஆகும் தொகையும் கணிசமானது. இதற்காக இவர்களுக்கு ஓரளவு நஷ்ட ஈடு தர வேண்டியிருக்கும். அந்தச் சிறுதுளிகளே வெள்ளத் தொகையாகிவிடும்.

நாட்டின் பிற உள்ளூர்ப் பிரச்னைகள் அடிபட்டுப் போகும். முன்னேற்றப் பணிகள் நின்று போகும்.

போர் நிச்சயமானால் தனி நபர் முதலீடுகள் மிகக் குறைந்துவிடும். அதுவும் பகிரங்கமான போர் நீண்டநாள் நீடித்தால் சரிந்த பொருளாதாரத்தைத் தூக்கி நிறுத்துவது மிகக் கடினமானதாகவும், இயலாததாகவும் போகலாம்.

பாகிஸ்தானில் நடப்பது ராணுவ ஆட்சி. அவர்களால் உடனடியாக எந்த முடிவையும் எடுக்க முடியும். முரட்டுத்தனமான முடிவுகளை அவர்கள் நொடியில் எடுக்கக் கூடும். நாம் அப்படியல்ல.

இவை எல்லாவற்றையும்விட மிகப் பெரிய பயங்கரம், போரில் அணுஆயுதங்கள் பயன்படுத்தப்பட்டால் ஏற்படுவதாக இருக்கும்.

'அமைதியான வழிக்கு மட்டுமே' என ஆரம்பித்த அணு ஆராய்ச்சி இப்போது அண்டை நாடுகளை எச்சரித்து வைக்க ஆயுத உற்பத்தி செய்யும் நிலைக்கு முன்னேறி விட்டது.

1962 சீனாவுடன் நடந்த எல்லைப் போரில் நாம் அடைந்தது வெற்றி அல்ல. இதைத் தொடர்ந்து 1964ல் சீனா அணுஆயுத சோதனையில் ஈடுபட, நாமும் அதில் இறங்கினோம். 1974ல் நம் நாட்டின் முதல் அணு ஆயுத சோதனை நடந்தது.

உடனே பாகிஸ்தானுக்கும் உத்வேகம் ஏற்பட்டது. அதன் பிரதமராகப் பின்னாளில் பதவியேற்ற புட்டோ "பாகிஸ்தானியர்கள் புல்லைத் தின்ன வேண்டிய நிலை ஏற்பட்டாலும் பரவாயில்லை நம் நாடு அணு ஆயுதங்களைத் தயாரித்தே ஆக வேண்டும்" என்று அறிக்கை விட்டார்.

ஆக, இரு நாடுகளிலுமே இப்போதைக்கு அணு ஆயுதங்கள் தயார் நிலையில் உள்ளன. நம்மிடம் படைபலம் அதிகம். தரைவழி, வான்வழி, நீர்வழி இப்படி எந்தக் கோணத்தில் எடுத்துக் கொண்டாலும், வழக்கமான

முறைப் போரில் தன்னால் வெல்ல முடியாத நிலை ஏற்பட்டால், பாகிஸ்தான் அணு ஆயுதங்களைப் பயன்படுத்தும் என நம்பலாம்.

ஒரு ஏவுகணையை இயக்கினால், குறி வைக்கப்பட்ட பகுதியை அடைய அது பத்து நிமிடங்களே எடுத்துக்கொள்ளும். மும்பை, பெங்களூர், டெல்லி ஆகியவை பாகிஸ்தானின் முக்கிய இலக்குகள் என்கிறார்கள். நமது குறி, ராவல்பிண்டி கஹூதா, இஸ்லாமாபாதாக இருக்க வாய்ப்பு உண்டு.



## ஊர் விட்டு ஊர்!

ஆந்தை ஒன்று கவலையோடு உட்கார்ந்து இருந்தது. அதைக் கண்ட சிட்டுக் குருவி ''ஏன் அண்ணா இப்படி சோகமாயிருக்கிறீர்கள்?'' என்றது.

ஆந்தை ''நான் இந்த ஊரை விட்டுப் போக முடிவு செய்துவிட்டேன். பழகிய ஊரை விட்டுப் போக வருத்தமாயிருக்கிறது'' என்றது.

அணு ஆயுதப் போரென்றால் பாகிஸ்தானைவிட நம்மிடம் பலம் வாய்ந்த அணுகுண்டுகள் இருக்கலாம். பாகிஸ்தான் நமது சில நகரங்களை ஒட்டு மொத்தமாக அழித்தால், நம்மால் பதிலுக்கு அவர்களது நாட்டின் பெரும் பகுதிகளை அழித்துவிட முடியும். ஆனால் அழியக்கூடிய நமது நகரங்களையும், இழக்கக்கூடிய உயிர்களையும் எண்ணிப் பார்க்க வேண்டாமா? நூறாண்டுகளானாலும் ஈடு செய்ய முடியாத இழப்புகள் இவை.

தென்னகத்தின் பக்கமாகவும் பாக்.கின் அணு ஆயுதம் அடங்கிய ஏவுகணைகள் திசை திருப்பப்படாலம். (பாகிஸ்தானிலுள்ள ஷாஹீன் - III ஏவுகணைகளால் 2,500 கிலோமீட்டர் தொலைவு வரை பாதிப்பை ஏற்படுத்த முடியும்). இதனால் கல்பாக்கம் அணு ஆராய்ச்சி நிலையமும் அணுசக்திக்கலனும் பாதிப்புக்கு உள்ளானால்...? செர்னோபில் விஷவாயுக் கசிவால் ஏற்பட்ட ஆயிரக்கணக்கான மனிதர்களின் இழப்பு நினைவுக்கு வருகிறது!

இந்தியாவும் பாகிஸ்தானும் அணு ஆயுதப் போரில் ஈடுபட்டால் முதல் நாளே நூற்று இருபது லட்சம் பேர் இறந்து விடுவார்கள் என்று கணக்கு காட்டுகிறது, அமெரிக்காவின் ராணுவ அமைப்பான பென்டகன். இது உடனடி அழிவு. அணு ஆயுதப் போரினால் உண்டாகும் கதிரியக்கத்தினால் காலப் போக்கில் ஏற்படக் கூடிய இழப்புகள் தனி. போதாக்குறைக்குச் சமூகவிரோத சக்திகள் வேறு புகுந்து விளையாடுவார்கள்.

பாகிஸ்தானிடம் சில டஜன் அணு ஆயுதங்கள் உள்ளன என்றும் இந்தியாவிடம் பல டஜன் கணக்கான அணு ஆயுதங்கள் உள்ளன என்றும் கூறுகிறது பென்டகன். பாகிஸ்தானில் உள்ளவை ஹிரோஷிமா அணுகுண்டு ஏற்படுத்திய அளவுக்கு நாசம் விளைவிக்கக் கூடியவை. நம்முடையவை அதற்கும் மேல் நாசம் விளைவிக்கக் கூடியவை. (சமாதானம் அளிக்கக்கூடிய செய்தியா இது?) 1974ல் நம் நாடு உருவாக்கிய ப்ளூட்டோனிய அணு ஆயுதக் கருவியே சுமார் பத்து கிலோ டன் அழிவுச் சக்தியை வெளிப்படுத்தக்கூடியது (ஹிரோஷிமாவை நிர்மூலமாக்கிய அணுகுண்டிலிருந்து வெளிப்பட்டது பதிமூன்று கிலோ டன் அழிவு சக்தி)

''ஏன் போகிறீர்கள். எங்கே போகப் போகிறீர்கள்'' என்றது சிட்டுக்குருவி.

ஆந்தை, ''நான் போடுகிற சப்தம் இந்த ஊர் மக்களுக்குப் பிடிக்கவில்லை. எல்லோரும் என்னைத் திட்டுகிறார்கள். அதனால் பக்கத்து ஊருக்குப் போய்விடப் போகிறேன்'' என்றது.

சிட்டுக்குருவி யோசித்துவிட்டு ''உன் சப்தம் இந்த ஊர் மக்களுக்குப் பிடிக்கவில்லை என்றால் நீ மாற்றிக் கொள்ள வேண்டியது குரலைத்தானே தவிர, ஊரை அல்ல. எந்த ஊர் போனாலும் உன் குரல் மாறாது என்றால் ஊரை மாற்றிக் கொண்டு என்ன பயன்?'' என்றது.

பதில் சொல்ல முடியாத ஆந்தை தனது முடிவை மாற்றிக் கொண்டது.

**- இந்த இதழில் இடம் பெற்றுள்ள குட்டிக்கதைகள் தொகுப்பு: சுந்தரானந்தா**

அணு ஆயுதங்கள் இயக்கும் கருவிக் கருகே பாகிஸ்தானின் விரல்கள் வந்தாலே, அமெரிக்க ராணுவம் அதைத் தடுத்து விடும் என்பது சிலரது நம்பிக்கை. ஆனால் அப்படித் தடுக்க ஓரிரு மணி நேரம் தாமத மானாலே போதும், ஏவுகணைகள் பறந்து வந்து நம்மைத் தாக்கிவிடும்.

அமெரிக்கா இந்த விஷயத்தில் இரட்டை வேடம் போடும் என்பதை நாம் எதிர்பார்த்துத் தயாராகத்தான் இருக்க வேண்டும். தன் நாட்டில் இரட்டை கோபு ரங்கள் தகர்க்கப்பட்டபோது மற்றொரு நாடான ஆப்கானிஸ்தானுக்கு ராணு வத்தை அனுப்பியது. நம் பாராளுமன்றத் தில் தாக்குதல் நடந்தபோது வெறுமனே வருத்தப்பட்டு அமைதி காக்கச் சொன் னது. தவிர ஆப்கானிய பயங்கரவாதி களை ஒழிக்க, பாகிஸ்தானின் களம் இன் னமும் அமெரிக்காவுக்குத் தேவைப்படு கிறது. இவற்றிற்கு நடுவே பாகிஸ்தானைப் போரில் வென்றால், ஆசியாவின் மிகப் பெரும் சக்தியாக இந்தியா உருவாகி விடுமோ என்ற கவலையும் அமெரிக் காவுக்கு இருக்கும்.

ஆனால் மிகவும் வெளிப்படையாக வார்த்தைகளினாலோ, போர்ப்படைகளை அனுப்பியோ அமெரிக்கா ஆதரவு காண் பிக்க முடியாது. காரணம் தனது பெயரை உலக அரங்கில் அந்த அளவு கெடுத்துக் கொள்ள அமெரிக்கா முன் வராது.

நாமும் நமது நற்பெயரைத் தக்க வைத்துக் கொள்ள வேண்டியது அவசி யம். பாகிஸ்தானின் மீது போர் புரிவதன் மூலம் பல உலக நாடுகளின் ஆதரவை நாம் இழந்து விடுவோம். ஏன், பொருளா தாரத் தடைகள் கூட நம்மீது சுமத்தப் படலாம்.

எல்லா அழிவுகளும் நம்மைவிட பாகிஸ்தானுக்கு அதிகம் இருக்க வாய்ப்பு உண்டு. பொருளாதாரச் சீரழிவை ஏற் கெனவே கண்டிருக்கும் நாடு அது. (சமீபத் தில் கராச்சி பங்குச் சந்தை, 171 பாயிண் டுகள் சரிவைக் கண்டது). ஆனால் 'நமக்கு ஒரு கண் போனாலும் எதிரிக்கு இரு கண் கள் போக வேண்டும்' என்று நினைப்பது விவேகம்தானா! போரில் நாம் வெல்ல லாம். ஆனால் அதை உணர நம்மில் எவ்வளவு பேர் உயிரோடு இருப்போம் என்பது கேள்விக் குறி இல்லையா?

இந்த நிலையில் என்ன செய்வது? நடக்கும் அநீதிகளைப் பார்த்துக்கொண்டு சும்மா இருப்பதா?

பயங்கரவாதத்தையும் அதைத் தூண்டி விடுபவர்களையும் கிள்ளி எறிய வேண் டும் என்பதில் இரு கருத்துகளுக்கு இட மில்லை. ஆனால், யுத்தம் தவிர்க்கப்பட வேண்டும். அவ்வளவுதான். பிற நடவடிக் கைகள் கடுமையாக இருக்கலாம். எல் லைக்கு மறுபுறம் இருக்கும் பயங்கரவாதி களின் முகாம்களின் மீது (இப்படி 136 முகாம்கள் உள்ளனவாம்) கடும் நடவடிக் கைகள் எடுக்கலாம்.

ஜம்மு காஷ்மீரில் அமைதியான முறை யில் தேர்தல் நடத்தினாலே உலக அரங் கில் நமக்கு அது பெரும் வெற்றிதான். தேர்தல்கள் நடக்க விடாமல் செய்ய பாகிஸ்தான் மறைமுகமாகப் பல வழி களைத் தேர்ந்தெடுக்கும். அவற்றை முன்புணர்ந்து முறியடிப்பது நமது முதல் இலக்காக இருக்க வேண்டும். ○

**— ஜி.எஸ்.எஸ்.**

# பயிரை மேயும் வேலிகள்!



● தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் ஒரு சிக்கலில் மாட்டிக் கொண்டு தவிக்கிறது. அங்கு இணைப் பேராசிரியராக இருக்கும் டாக்டர் ப. குருநாதன், 'சங்க கால அரச வரலாறு' என்ற புத்தகத்தை எழுதியுள்ளார். அதை பல்கலைக் கழகம் வெளியிட்டிருக்கிறது. அந்தப் புத்தகத்தைப் பார்த்த தினமலர் ஆசிரியர் கிருஷ்ணமூர்த்திக்கு ஷாக். காரணம் அவர் எழுதி வெளியிட்ட "சங்க கால தமிழ் நாணயங்கள்" என்ற புத்தகத்தின் அட்டையை அப்படியே தன் புத்தகத்துக்குப் பயன்படுத்தியிருந்தார் குருநாதன். உடனே துணை வேந்தரோடு கடிதத் தொடர்பு கொண்டு நடந்திருக்கும் 'தவறை' எடுத்துக் காட்டியிருக்கிறார் தினமலர் ஆசிரியர். இப்போது தமிழ்ப் பல்கலைக் கழகம், தவறுக்கு வருத்தம் தெரிவித்திருக்கிறது. இனி மிச்சம் இருக்கும் முதல் பதிப்பு பிரதிகளிலும், வரும் பதிப்புகளிலும் அட்டைக்கான நன்றியை புத்தகத்தில் பதிப்பிப்பதாகச் சொல்லியிருக்கிறார் துணைவேந்தர். மற்றொரு புத்தகத்தின் அட்டையைத் தம் வசதிக்குக் கையாண்ட பேராசிரியர் மேல் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது என்பது பற்றியும் இரண்டாம் பதிப்பில் அட்டையை மாற்றிக் கொள்வது பற்றியும் மூச்சு விடவில்லை.

● கோயில் நிலங்கள் மற்றும் சொத்துக்களிலிருந்து வருமானத்தைப் பெருக்கவும் நிலப்பிரச்னைகளைத் தீர்க்கவும் ஓர் உயர்மட்டக் கமிட்டியை அமைத்திருக்கிறது தமிழக அரசு. அதில் பல மடங்களின் ஆதீனகர்த்தாக்கள், அரசு அதிகாரிகள் உள்ளனர். ஆனால் இந்த கமிட்டியில் இடம் பெற்றுள்ள சில மடங்களின் சொத்துக்களே முறை கேடாக விற்கப்பட்டிருப்பதாக முணுமுணுக்கிறார்கள் சில ஆஸ்திகப் பெரியவர்கள். மடங்களின் சொத்துக்களை விற்பதென்றால் அரசின் முன் அனுமதியைப் பெற வேண்டும். ஆனால் மடங்கள் தங்கள் வசதிப்படி விற்றுவிட்டு பின்னர் அறநிலையத் துறைக்கு எழுதி "முறைப்படுத்திக்'' கொள்கிறார்களாம்! சென்னைக்கு வெளியே இருக்கும் ஒரு மடத்துக்குச் சென்னையின் மையப் பகுதியில் கோடிக் கணக்கான மதிப்புள்ள நிலம் இருந்தது. விதிமுறைகள் படி பத்திரிகைகளில் அறிவித்து, டெண்டர் கேட்டோ, பொது ஏலத்திலோ தான் அந்த நிலத்தை விற்க வேண்டும். ஆனால் மடத்தின் ஆதீனகர்த்தா தன்னிச்சையாக வேண்டியவர்களுக்கு நிலத்தைச் சகாய விலைக்கு விற்றுவிட்டார். இதற்குக் கடந்த கால கலைஞர் ஆட்சியும் துணை போயிருக்கிறதாம்.





● சென்ற மாதம் தங்கபாலு, வாழப்பாடி ஆகியோர் சோனியாவைச் சந்தித்தனர். த.மா.கா. காங்கிரஸோடு இணைந்த பிறகு இளங்கோவனே தலைவராக நீடிக்கும் பட்சத்தில் எங்கள் ஆதரவாளர்களுக்கும் கணிசமான கட்சிப் பொறுப்புகள் கிடைக்க உறுதி செய்ய வேண்டும் என்பது அவர்கள் கோரிக்கை. ஆனால் த.மா.கா. இணைப்பை அவர்கள் விரும்பவில்லை என்ற செய்தி கிளப்பி விடப்பட்டது. அவர்களிடம் மனுவைப் பெற்றுக் கொண்ட சோனியா போகிற போக்கில் "உங்களுக்குக் கட்சிப் பணி செய்ய நேரம் கிடைக்கிறதா" என்று இரு பொருள்பட கேட்டுச் சென்றாராம். சட்டமன்ற உறுப்பினர் யசோதாவை சோனியா கண்டு கொள்ள வில்லையாம்!

— சஞ்சயன்

# கம்பராமாயணம்

மூலமும் தெளிவுரையும்-5000 பக்கங்களில் 9 தொகுதிகள்

விலை 1000.00 **சலுகை விலை 600.00**

இலவச நூல் : **உத்தர காண்டம்**

மூலமும் தெளிவுரையும்-800 பக்கங்களில்

2 தொகுதிகள் ரூ.200

பல பதிப்புகளைக் கண்ட எமது **"கம்பராமாயணம்"** (மூலமும் தெளிவுரையும்) மீண்டும் வெளிவருகிறது.

**கம்பர் அருளிய இராமாயணம், ஒட்டக் கூத்தர் அருளிய உத்தரகாண்டம் நூல்களைப்பற்றிய ஒரு குறிப்பு**

---

இந்தியாவில் எத்தனை மொழிகள் உண்டோ அத்தனை மொழிகளிலும் இராமாயணம் உண்டு. இது தவிர, ஒரே மொழியிலேயும் பல இராமாயண நூல்கள் தோன்றியிருக்கின்றன. இதிலிருந்தே இந்திய மக்கள் மீது இராம கதைக்கு உள்ள செல்வாக்கைப் புரிந்து கொள்ளலாம். எத்தனை இராமாயண நூல்கள் இருந்தாலும் அவை அத்தனைக்கும் ஊற்றாக இருப்பது வால்மீகி முனிவர் இயற்றிய இராமாயணம் தான் !

அந்த மாமுனிவரின் கதையை அடிப்படை யாகக் கொண்டே பிற்காலப் புலவர்கள் தங்கள் தங்கள் மொழி மரபுக்கேற்ப, பண்புக்கேற்ப நிகழ்ச்சிகளைக் கூட்டியும், குறைத்தும், மாற்றியும் இராம கதையை வகுத்தனர். இந்த வகையில் கம்பரின் காப்பியத்தில் கவிதைப் பிரவாகத்தையே காணலாம் ! பார காவியம் பாடிய அம் மாபெரும் புலவர் ஓர் எல்லையில் இராமபிரானின் கதையை நிறுத்திக் கொண்டார். இராவணனை வீழ்த்தி அயோத்தி சென்று ஆட்சிப் பொறுப்பை ஏற்ற இராமபிரான், அனுமன் முதலானோர்க்கு விடை கொடுத்தனுப்புவதோடு கம்பராமாயணம் முடிகிறது. இராகவனின் பிற்கால நிகழ்ச்சிகளைப் பற்றிக் கம்பர் எதுவும் கூறவில்லை.

கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் அந்தப் பணியைச் செய்து முடிக்கிறார். மகாகவி கம்பர் குறிப்பாகச் சொல்லிவிட்டுப் போகும் பல நிகழ்ச்சிகளை உத்தர காண்டம் விரிவாகப் பேசுகிறது. சில நிகழ்ச்சிகளை இங்குச் சுட்டிக் காட்ட விரும்புகிறோம்.

இராமபிரானின் ஆட்சியின் மாட்சி (இராம ராஜ்யம்) உத்தரகாண்டத்தில் தான் கூறப்படுகிறது.

இராவணனின் பிறப்பு, தவம், அவன் பெற்ற வரங்கள், சாபங்கள் ஆகியவை இவ்வுத்தர காண்டத்தில் விரிவாக இடம் பெற்றுள்ளன. இராவணன் தவம் உடையவன்; மூன்று கோடி ஆண்டு வாழ்நாளையுடையவன்; சில சாபங்களும் அவனுக்கு உண்டு என்ற செய்திகள் கம்பராமாயணத்தில் கூறப்படுகின்றன என்றாலும் இவை பற்றிப் படலம் படலமாகப் பாடுவது உத்தர காண்டம் தான்! பல கன்னியரை, திருமணமான மகளிரைக் கற்பழித்த கொடியவன் இராவணன். இந்தக் கொடுமையில் அவன் பெற்ற பயிற்சிதான் சீதையைக் கவர்ந்து செல்லும் அளவுக்கு அவனைக் கொண்டு போய் நிறுத்தியது. வேதவதியும், அரம்பையும், பல கன்னியரின் தாயரும் இட்ட சாபக் கணைகள் அவன் மீது எந்த நேரத்திலும் பாயக் காத்திருந்த செய்தியை உத்தரகாண்டம் தெரிவிக்கிறது.

இராமபிரான் வைகுண்டம் அடைவதுடன் உத்தர காண்டம் நிறைவு பெறுகிறது.

---

தபாலில் பெறக் கடிதம் எழுதுக. 11 தொகுதிகளையும் V.P.P. யில் அனுப்புகிறோம். நூல்களின் சலுகை விலை ரூ.**600** +தபால் மற்றும் கட்டுச் செலவுரூ.75 சேர்த்து ரூ. **675** மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெற்றுக் கொள்ளலாம். **நேரில், ரூ 600** மட்டும் செலுத்தி 11 தொகுதிகளையும் உடனே பெற்றுக் கொள்ளலாம். நேரம் : காலை 10 மணி முதல் இரவு 8 மணி வரை. இடைவேளையின்றி. ஞாயிறு மற்றும் தமிழக அரசு விடுமுறை நாட்களில் விற்பனை இல்லை.

கடிதம் எழுத வேண்டிய முகவரி : **வர்த்தமானன் பதிப்பகம்**

15. சரோஜினி தெரு, தியாகராயநகர், சென்னை-17. (உஸ்மான் சாலை - கீதாஞ்சலி ஹோட்டல் அருகில்)

# அக்கிரம கான்!

● பங்களாதேஷிலிருந்தும் கொல்கத்தாவி லிருந்தும் வந்து கொத்தடிமைகளாக பெங்களூரில் இருந்த சுமார் 400 சிறுவர்கள் மீட்கப்பட்டனர். இச்சிறுவர்கள் அனுபவித்த கஷ்டங்கள் கொடுமைகள் கொஞ்ச நஞ்ச மல்ல. ஊதியமே இல்லாமல் ஐந்து வருடங் களுக்கும் மேலாகப் பணி செய்துள்ளனர். பத்துக்குப் பத்து அறையில் ஆறு குழந்தை கள் இருக்க வேண்டும். குத்துக் காலிட்டு உட்கார்ந்த நிலையில் நாள் பூரா வேலை. ஒவ்வொருவருக்கும் காஸ் அடுப்பு, சமை யலுக்கோ டீ காபிக்கோ அல்ல! காட்மியம் என்ற ரசாயனத்துடன் மல்லுக் கட்டிக் கொண்டு இடுப்பொடிய வேலை. தங்கத்தின் கனத்தைக் குறைக்க பயன்படுவது காட்மியம். இதிலிருந்து வரும் புகையை உள்ளுக்கிழுத்து இச்சிறுவர்கள் டீ.பி. மற்றும் பல்வேறு நுரையீரல் உபாதைகளினால் தவித்திருக் கிறார்கள். உடல் பூரா கொப்புளங்கள் வேறு. நகைக் கடைக்குப் போய் தாய்க் குலங்கள் ''இது காட்மியம் கோல்டா? 916ஆ...'' என்று கேள்வி கேட் கும் போது ஏதோ ஒரு இருட்டறையில் நஞ்சை உள்ளுக் கிழுத்துக் கொண்டு எந்தக் குழந்தை செய்ததோ' என் பதையும் நினைவு கொள்ளவும்!



• கரியா



● கிரிக்கெட்டை மையமாக வைத்து லகான் ஹிட் ஆனாலும் ஆச்சு திரைக் கதாசிரியர்களின் கற்பனை எக்கச்சக்கமாகப் பரந்து விரிந்து கொண்டிருக் கிறது. 'கரியா' என்றொரு படம். முழுக்க முழுக்க கலப் படமே இல்லாத ரியல் தாதாக்களே நடிக்கிறார்கள். அன்டர் வேர்ல்ட் கதையாம். "கரியா என்று நிஜமான தாதா. இது ஒன்றும் கற்பனை பாத்திரமோ கதையோ அல்ல. இதில் நடிக்கும் தாதாக் களுக்கு நான் ஒன்றும் நடிப்பு கற்றுத் தர வில்லை. அவர்கள் தங்கள் அனுபவங் களைப் பற்றிச் சொல்லும்போது அப்படியே படம் பிடித்துள்ளேன்" என்கிறார் இயக்குநர் ப்ரேம். இதில் சுமார் 23 தாதாக்கள் 'நடிக் கிறார்கள்' என்கிறது செய்தி! இதில் சுவா ரஸ்யமான விஷயம் என்னவென்றால் பெயிலில் வெளிவந்த மூன்று பேரில் ஒருவர் விவகாரமான கேஸில் மாட்டிக் கொள்ள, திரும்பவும் 'உள்ளே போய் விட்டாராம்!

● அக்ரம்கான் என்றொரு விளையாட்டு வீரர். இவர் 20 மெடல்கள் மற்றும் பத்தா யிரம் ரூபாய் இலங்கையிலிருந்து தட்டிக் கொண்டு வந்திருக்கிறார். சொந்த சாதுர்யத் தாலும் திறமையினாலும் இவர் இதைப் பெற்றிருந்தால் பாராட்டியிருக்கலாம். ஆனால் சர்வதேச வீராங்கனையான மிஸ் அனோமாவின் மெடல் களைச் சுட்டுக் கொண்டு நாடு திரும்பி யிருக்கும் 'அக்கிரம' கானை என்னவென் பது? கடந்த வருடம் பெங்களூரில் நடந்த ஆசிய அத்லெடிக் சாம்பியன்ஷிப் பந்தயத்தில் அனோமாவின் தாய் ரோஹிணி பெரிஸ் கலந்து கொள்ள வந்திருக் கிறார். அப்போது அவருடன் நட்பு கொண்டு இலங்கையில் தான் தங்குவதற்கான ஏற்பாடு களைத் தந்திரமாக பண்ணிக் கொண்ட அக்ரம் அங்கிருந்து மெடல்களைச் சுருட்டியிருக் கிறார். இன்னும் கொஞ்சம் விவரமாக இருந்திருக்கலாமே 'பெரிஸ்'!

— லதா சேகர்

# கல்கி வைரவிழா
# தமாஷ் ஹைகூ
# கவிதைப் போட்டி!

தமாஷ் ஹைகூன்னாலும் சும்மா தமாஷுக்கு எழுதிப் போட முடியாதுங்க..!

பாசாங்கில்லாத, உருவகம், உவமையில்லாத நேரடிக் கவிதை... வருணனை, கட்டுப்போட்டாலும் கிடையாது. பிலாசபி போதனை எல்லாம் இல்லை. ஒரு படிமம் அல்லது ஒன்றுடன் ஒன்று உதவும் இரண்டு படிமங்கள். அத்தனைதான். அதிலிருந்து இணைத்து எழும் எண்ணங் கள் வாசகன்பாடு!

- ஹைகூவுக்குச் சுஜாதா வரைந்துள்ள இலக்கணம் இது. பாரம்பரிய ஜப்பானிய மூன்று வரி ஹைகூக்கள் இப்படித்தான் இருக்கும்.

● போட்டிக்கு நீங்கள் அனுப்பும் ஹைகூவும் இப்படித்தான் இருக்க வேண்டும். ஆனால், எண்ணங்களுடன் கூடவே சிரிப்பையும் ஏற்படுத்த வேண்டும். பின்னே முதல் பரிசு ரூ.1000/- என்றால் சும்மாவா! இரண்டாம் (ரூ.750/-), மூன்றாம் (ரூ.500/-), ஆறுதல் பரிசுகளும் (ரூ.250/-) உண்டு.

● சொந்தக் கற்பனை என்பதற்கான உறுதி மொழியுடன் கவிதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 15.

● ஒருவர் பல கவிதைகள் அனுப்பலாம். தேர்வாகாத வற்றைத் திருப்பியனுப்ப போதுமான தபால் தலைகள் இணைக்க வேண்டும்.

● முடிவு வெளியாகும்வரை கடிதப் போக்குவரத்து, தொலைபேசி விசாரிப்புகள் கூடாது.

● உறையின் மேல் **'அமரர் கல்கி நினைவு ஹைகூ கவிதைப் போட்டி 2002'** என்று கட்டாயம் குறிப்பிட்டு

**ஆசிரியர் - கல்கி**
**47, ஜவஹர்லால் நேரு சாலை,**
**சென்னை - 97**

என்ற முகவரிக்கு அனுப்புங்கள். ஆசிரியர் தீர்ப்பே இறுதி. நடுவர்கள் நிச்சயிக்கும் போட்டி முடிவும் பரிசுக் கவிதையும் ஆகஸ்ட் 4 ஆண்டு மலரில் வெளியாகும்.

பரிசுகள் கல்கி வைர விழா நிகழ்ச்சி மேடையில் ஆகஸ்ட் 4, 2002 அன்று வழங்கப்படும்.

**கல்கி** வைரவிழா சிறுகதைப் போட்டியும் உண்டு! விவரம் அடுத்த இதழில்






2002 ஜூன் 9
சித்ரபானு வைகாசி 26
மலர் : 60
இதழ் : 45

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# தப்பிய வீரப்பன்; சிக்கிய கோபால்!

ராஜ்குமார் கடத்தல் வழக்கில் நக்கீரன் கோபால் குற்றம் சாட்டப் பெற்றிருப்பது காவல்துறையின் இயலாமையையும் தமிழக அரசின் பழி வாங்கும் போக்கையும் ஒருங்கே வெளிப்படுத்துகின்றன.

ராஜ்குமாரை விடுவிப்பதற்காக வீரப்பனிடம் தூது செல்லுமாறு கேட்டுக்கொண்டபோது, தமிழக அரசு கோபால் பேரிலும் அவருடன் சென்ற சிவசுப்ரமண்யம் பேரிலும் எவ்வித சிவில்/கிரிமினல் நடவடிக்கையும் தொடரப்பட மாட்டாது என உறுதி அளித்தது. முன்னெச்சரிக்கையாக இந்த உறுதிமொழியை எழுதி வாங்கிக்கொண்ட பிறகே, நக்கீரன் கோபால் வீரப்பனைச் சந்திக்கப் பயணப்பட்டார். தமிழக அரசைப் போலவே கர்நாடக அரசும் எழுத்து வடிவ உறுதிமொழி அளித்தது. ஆனால், அந்த வாக்குறுதியை கர்நாடக அரசும் தமிழக அரசும் இன்று அப்பட்டமாக மீறியிருக்கின்றன. 'காரியம் ஆகும்வரை காலைப் பிடி, அப்புறம் மென்னியைப் பிடி' என்கிற கதைதான்.

'அன்றிருந்த சூழல் வேறு, இன்றுள்ள சூழல் வேறு; ஒரு குறிப்பிட்ட நிலைமைக்குத் தரப்பட்ட உறுதிமொழி வேறு ஒரு நிலைமைக்குப் பொருந்தாது; தி.மு.க ஆட்சி வழங்கிய




வாக்குறுதிக்கு அ.தி.மு.க ஆட்சி பொறுப்பாக முடியாது' என்றெல்லாம் வாதங்கள் அடுக்கப்படுகின்றன. இந்த வாதங்கள் தவறானவை. வாக்குறுதிகள் ஆட்சியின் சார்பில் வழங்கப்பட்டனவேயொழிய கட்சியின் சார்பில் அல்ல.

வீரப்பன் பிரச்னை என்பது, எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் தொடர்கிற பிரச்னையாய் இருந்து வருகிறது. காவல் துறையினரால் அவனை நெருங்கிப் பிடிக்க முடியவில்லை. கோடி கோடியாய்ச் செலவழித்ததும் இன்னும் செலவழித்துக் கொண்டிருப்பதும்தான் மிச்சம்! ராஜ்குமார் விடுதலையைத் தொடர்ந்து வீரப்பன் இலங்கைக்குத் தப்பிவிட்டான் என்று பேசிய அன்றைய எதிர்க்கட்சி, இன்று ஆளுங்கட்சியாகி, மீண்டும் சிறப்புக் காவல் படை நிறுவி, தேவாரத்தைத் தலைவராக்கி, வீரப்பன் வேட்டையைத் தொடர்கிறது.

இந்த நிலைமையில், தனிப்பட்ட பத்திரிகையாளர் ஒருவரால் வீரப்பனைச் சந்திக்க முடிந்திருக்கிறது; பேட்டி காண முடிந்திருக்கிறது; படம் பிடித்து எடுத்து வர முடிந்திருக்கிறது, என்னும்போது அது அரசின் கையாலாகாத்தனத்தையும் காவல் துறையின் தோல்வியையும் பளிச்சென்று அடிக்கோடிட்டுக் காட்டுகிறது. இதனால் விளையக்கூடிய ஏமாற்றத்தினாலும் ஆத்திரத்தினாலும் அதிகார மையம் நக்கீரன் தரப்புக்கு நிறைய தொந்தரவு கொடுத்து வந்திருக்கிறது. கைதான நிருபர் சிவசுப்ரமண்யம் பரிதாபமாகத் தனிச்சிறையில் வைக்கப்பட்டிருக்கிறார். அவர் பேரிலான வழக்குகள் இழுபறியிலிருக்கின்றன. அவரது குடும்பத்தினர் விசாரணை என்ற பெயரில் வதைக்கப்படுகிறார்கள். இப்போது அதே கதி நக்கீரன் கோபாலுக்கும் நேரும் போலிருக்கிறது. சத்தியமங்கலம் நீதிமன்றத்தில் அவர் இன்னும் பத்து நாட்களுக்குள் சரணடைய வேண்டும் என்றும் தளவாடி காவல் நிலையத்தில் 15 நாட்கள் விசாரணை செய்யப்படுவதற்குத் தினமும் வந்து செல்ல வேண்டுமென்றும் ஆணை பிறப்பிக்கப்பட்டிருக்கிறது.

நக்கீரன் பாணி இதழியல் என்பது நமக்குப் பல விதங்களில் ஏற்புடையதில்லைதான்.




எனினும் எந்த பத்திரிகையாளராயினும் சரி, அவருக்கு அரசு வழங்கிய தனிப்பட்ட பாதுகாப்பு உறுதிமொழி என்பது காப்பாற்றப்பட வேண்டும்.

அது மட்டுமல்ல, செய்திகள் சேகரிப்பிலும் புலனாய்வின் போக்கிலும் தலையிடும் உரிமை அரசுக்கோ காவல் துறைக்கோ கிடையாது. ஜனநாயக நாட்டில், தகவல் தந்த நபரின் அடையாளத்தை வெளிப்படுத்தும் அல்லது காட்டிக் கொடுக்கும் கட்டாயம் பத்திரிகையாளர்களுக்குக் கிடையாது. பத்திரிகையாளர்களுக்குத் தரப்பட்டிருக்கும் மிகப் பெரிய உரிமை இது. பத்திரிகைத் துறை என்பது, சமுதாய நலனுக்காக இயங்கும் நான்காவது தூண் என்பதாலேயே இந்த உரிமை தரப்பட்டிருக்கிறது.

நக்கீரன் இதழ் எப்போதும் எல்லா விதத்திலும் சமுதாய நலனை நாடிச் செயல்படுகிறதா என்பது கேள்விக்குரியதாக இருக்கலாம். ஆனால், ராஜ்குமார் கடத்தல் விவகாரத்தைப் பொறுத்தவரை, ஒரு பொதுப் பிரச்னையில் பத்திரிகையை, பத்திரிகையாளரை உதவி கேட்க அரசே முடிவு செய்தது; முழு பாதுகாப்புக்கான உறுதியும் அளித்தது. இப்போது அந்த உறுதிமொழியிலிருந்து பின்வாங்கும்போது, பத்திரிகைத் துறையையும் அதன் உரிமைகளையும் இவ்வரசு துச்சமாக மதிப்பதாகவே முடிவுக்கு வர வேண்டியிருக்கிறது.

இன்று நக்கீரனுக்கு நடப்பது நாளை வேறு எந்த பத்திரிகைக்கும் நடக்கலாம். இன்று கோபாலுக்கு இழைக்கப்படும் அநீதி நாளை எந்த பத்திரிகையாளருக்கும் நேரலாம்.

பத்திரிகை சுதந்தரத்துக்கு ஏற்படும் அச்சுறுத்தலோ அபாயமோ தனிநபர் சுதந்தரத்துக்கு விளையக்கூடிய அபாயத்தைக் காட்டிலும் பயங்கரமானது. தனி நபர்களுக்குக் குரல் கொடுக்கவும், தட்டிக் கேட்கவும், நியாயம் பேசவும் பத்திரிகைகள் இருக்கின்றன. அவற்றின் வாயை அடைப்பதும் கையை முறிப்பதும் சமுதாய மற்றும் தனி மனித உரிமைகளுக்கே கேடு விளைவிப்பதாகும். ஜனநாயகத்துக்கே வேட்டு வைப்பதாகும்!



# ஓடி ஒளிந்த உடன்பிறப்புகள் – கோபத்தில் கலைஞர்!

சைதாப்பேட்டை இடைத்தேர்தல் வோட்டுப்பதிவு தினத்தன்று, ஆளும் கட்சியால் நடத்தப்பட்ட அராஜகம் மற்றும் கள்ள வோட்டு தில்லுமுல்லுகளைக் கண்டித்து, தனது பிறந்த நாள் கொண்டாட்டங்களை ரத்து செய்திருக்கிறார் கருணாநிதி! ஆனால் அவரது கோபம் ஆளும் கட்சியினர் மீது மட்டுமல்ல. தி.மு.க தொண்டர்கள் மீதும்கூட என்கிறது அறிவாலய வட்டாரம். தி.மு.க தொண்டர்கள் எந்தவிதத் தியாகத்துக்கும் தயாரானவர்கள் என்ற எண்ணம் உடைபட்டிருப்பதுதான் கலைஞரின் கோபத்துக்குக் காரணம்.

தேர்தலுக்கு முன்பு கே.கே. நகரில் நடந்த ஒரு கூட்டத்தில் கலைஞர் பேசும்போது, "பத்து தொண்டர்கள் உயிரை விடத் தயாராக இருந்தால் போலீஸ் என்ன செய்யும்?" என்று கேட்டார். அவர் அப்படிப் பேசியதற்குக் காரணம், ஆளும் கட்சியின் அதிகாரத் துஷ்பிரயோகங்களுக்குக் கொஞ்சமும் அஞ்சாமல் களத்தில் தி.மு.க தொண்டர்களும், பிரமுகர்களும் நிற்பார்கள் என்ற நம்பிக்கைதான். ஆனால் தேர்தல் தினத்தன்று ஆளும் கட்சியின் ஆள் பலமும், போலீஸ் துணையுடன் நடந்த வெறியாட்டமும் தி.மு.க உடன் பிறப்புகளைத் தொடை நடுங்க வைத்துவிட்டது என்பதுதான் நிஜம். தேர்தல் அன்று தி.மு.க சார்பாக, பொன்முடியும் கே.எஸ். ராதாகிருஷ்ணனும் மட்டுமே களத்தில் இருந்தார்களே தவிர, மற்றவர்களைத் தேட வேண்டியதாகிவிட்டது.

ஆளும் கட்சியின் மிரட்டல்(?) காரணமாக எந்தவித எதிர்ப்பும் தெரிவிக்காமல் வெளியே வந்து மறைந்து விட்டார்கள் தி.மு.க ஏஜெண்டுகள்.

இப்படிப்பட்டத் தொண்டர்களை வைத்துக்கொண்டு, நான்கு வருடம் ஜெ அரசை எப்படி எதிர்ப்பது? என்பதுதான் கலைஞரின் கோபம். "வெறும் எலும்புக்கூடாக, பெருங்காய டப்பாவாக மாறிவிட்டது தி.மு.க" என்கிறார்கள் சில டென்ஷன் உடன்பிறப்புகள்.

"இடைத்தேர்தல்களில் கள்ள வோட்டு, அதிகாரவீச்சு என்பதைக் கலையாக கற்றுத் தேர்ந்துவிட்டது அ.தி.மு.க. இனி தமிழ்நாட்டிலுள்ள மற்ற கட்சிகள் இடைத்தேர்தல்களில் பங்கெடுத்து எந்தப் பயனும் இல்லை. மத்திய அரசும் ஒப்புக்குச் சப்பாணியாக இருப்பதால் தமிழகத்தில் ஜனநாயகத்திற்குப் பல சோதனைகள் காத்திருக்கின்றன!" என்கிறார்கள் அரசியல் விமர்சகர்கள்.

– சஞ்சயன்

# பாவனைகளும் கனவுகளும்



துண்டொன்றை புடைவையாகக்
கட்டிக் கொண்டு
அம்மாவாக முடிகிறது
குழந்தைகளால்.
அம்மாவாக முடியாமல்
அல்லற்பட்டுக் கொண்டிருப்பது
அம்மாக்கள்தான்.

குழந்தைகள் வைத்து
விளையாடிக் கொண்டிருந்த
சொப்புகளில்
நிரம்பி வழிந்து கொண்டிருக்கின்றன
குழந்தைகளின்
பாவனைகளும் கனவுகளும்.
தளும்பி விடுமோவென பயந்து
நகர்த்தி வைக்காமலேயே
கூட்டித் தள்ளுகிறேன் வீட்டை.

இரை தேடி தோற்ற
கொடிய விலங்கொன்றின்
கண்ணீராய்
கொட்டும் கோடை மழையில்
அம்மாவின் கை உதறி
நனைந்தோடும் சிறுவனைப் போல்
தலை சிலிர்த்து
விளையாடுகிறது
தேன் சிட்டொன்று.

- அ. வெண்ணிலா

# காணாமல் போகும் கோ-எட் ஸ்கூல்ஸ்!

"வயசாச்சு இனிமே முடியாது"ன்னு யாராவது சொன்னா இந்த ட்ரு லைஃப் ஸ்டோரியைச் சொல்லுங்க. யூ.எஸ்ல ஒரு 92 வயசு பாட்டி, பட்டப் படிப்பு படிச்சு டிகிரி வாங்கியிருக்காங்க. டீச்சராயிருந்து ரிட்டயராகி, அதன் பிறகு குழந்தைகளுக்காக புக்ஸ் எழுதிட்டிருந்தவங்க இந்த வயசுல எதுக்கு டிகிரிக்கு ஆசைப்பட்டாங்களாம்..? "இனிமே வேலை தேடும்போது பயோடேட்டால சேர்த்துக்கலாமில்லியா" - இது பாட்டியோட கூல் பதில்!

இன்னொரு கூல் யூ.எஸ். கவர்ன்மெண்ட் போட்டிருக்கு - இனிமே அரசுப் பள்ளிக்கூடங்கள் பாய்ஸ் ஆர் கர்ல்ஸ்க்கு மட்டுமான ஸ்கூலா மாறிக்கலாமாம்! இத்தனை நாளா கோ-எட்தானே அங்கே சகஜம்..? இப்போ அது மாறி தனித்தனியா படிச்சா பையன்கள் ஆரோக்கியமான சூழல்ல, கவனம் சிதறாம படிக்கலாம்னு முடிவுக்கு வந்திருக்கு அரசு. பெண்களும் இன்னும் சுதந்தரமா இருக்க முடியும்னு கருத்து ஏற்பட்டிருக்கு.

ஆனா, "நாங்களா பையன்கள் கவனத்தைச் சிதறடிக்கறோம்.. வேற காரணமிருந்தா சொல்லுங்க."ன்னு கர்ல்ஸ் உடனே சண்டைக்கு வர ஆரம்பிச்சுட்டாங்களாம்.

பத்திரிகை நிறுவனங்கள் டீவி. மீடியால பிரவேசிக்கறதுன்றது இன்னிக்குச் சகஜமாயிருக்கு. பட் தினமலர் க்ரூப் வான்ட்ஸ் டு பி டிஃப்ரன்ட்! கே.எல். ரேடியோன்னு ஒரு முயற்சில இறங்கியிருக்கு இந்த நிறுவனம். சாட்டிலைட் தொழில் நுட்பம், டிஜிடல் டெக்னாலஜி இரண்டையும் இணைச்சு டுவெண்டிபோர் அவர்ஸ்"ம் ஜோரான மியூசிக் ப்ரோக்ராம்ஸ் கொடுக்கிறது கே.எல்லோட எய்ம். ஆனா நம்மோட சாதா ரேடியோ டிரான்ஸிஸ்டர் செட்ல கே.எல். கேட்காது. 'வோர்ல்ட் ஸ்பேஸ் ரேடியோ'வுக்கான ஸ்பெஷல் எலக்ட்ரானிக் ரிசிவர் வாங்கிப் பொருத்திக்கணும் (விலை ரூ.1990லேருந்து 11,990 வரை பல ரகங்கள் உண்டு.) அலைவரிசை : 1418, கிளாஸிகல், லைட், சினிமா மியூ



# சுமி சூப்பர் மார்க்கெட்



சிக்கோட நியூஸூம் உண்டு.

இன்னிக்கு நாட்டுல வெள்ளம் பூகம்பம்னு ஏதேனும் நியூஸ் வந்தா முதல் வேலையா உதவப் போகற அமைப்புகளில் ஒன்னு ராமகிருஷ்ணா மிஷன்.

இந்த அமைப்பு எப்போ அப்படி ரிலீஃப் வொர்க்ல ஈடுபட ஆரம்பிச்சதுனு ஒரு சுவாரஸ்யமான கதை:

அகண்டானந்தான்ற இளம் துறவி திரிந்து அலைஞ்சுக் கிட்டிருந்த காலகட்டத்தில் டாக்டர் ஜானு பட் என்கிறவரைச் சந்திச்சார். தன் மொத்த லைஃபையும் சேவைக்காகவே ஒப்படைச்சவர் ஜானு பட். "சாம்ராஜ்யம் வேண்டாம், சொத்து - சுகம் வேண்டாம், சொர்க்கம் வேண்டாம், மறு பிறவியில்லாத மோக்ஷ நிலை கூட வேண்டாம்... பிறர் துன்பத்தைப் போக்கற ஆற்றலும் ஆர்வமும் எப்பவும் இருந்தா போதும்" - டாக்டர் பட்டோட தினசரி பிரார்த்தனையே இதுதான்.

அகண்டானந்தா பட்டை மீட் பண்ணின பிறகு இந்த சேவை யோகத்துல தானும் ஈடுபட ஆரம்பிச்சார். அப்போ அவருக்கு வயசு 28தான்! தவத்தையும் நிஷ்டையையும் விட்டார். சேவையை ஆரம்பிச்சார். 'கேத்ரி'ன்ற இடத்துல வீடு வீடா ஏறி இறங்கி எஜூகேஷனோட இம்பார்டன்ஸை ஜனங்களுக்கு எடுத்துச் சொன்னார். எண்பது பசங்க மட்டும் ஸ்கூலுக்குப் போய்ட்டிருந்த கிராமத்துல ஸ்டூடன்ட்ஸ் எண்ணிக்கை 257க்கு உயர்ந்தது. கிராமத்துப் பகுதிகளில் ஐந்து ஸ்கூல்ஸ் ஆரம்பிச்சார்.

இடையிலே திரும்பவும் தியானத்துக்காக ஹிமாலயாஸ் பக்கம் போய்வர அகண்டானந்தா நினைச்சப்போதான் முர்ஷிதாபாத்தில் டெரிபிள் பஞ்சம் வந்தது. அங்கேயே தங்கிட்டார் சுவாமிஜி. கையில் சல்லி காசு கிடையாது. என்ன செய்ய...? மார்னிங் அன்ட் ஈவினிங் பரமஹம்சரை நினைச்சுப் பூஜை... கங்கைக் கரையிலே ஒரு நாள் ஆறுதலா குரல் கேட்டது: "காத்திரு!". காத்திருந்தார் 15 மே 1897 முர்ஷிதாபாத்ல அகண்டானந்தா ரிலீஃப் காம்ப் ஆரம்பிச்சார். சுவாமி விவேகானந்தர் பணம் அனுப்பினார். மெட்ராஸ் கொல்கத்தாவிலேருந்தெல்லாம் டொனேஷன் வந்தது. இந்த முயற்சிதான் ராமகிருஷ்ணா மிஷனோட முதல் ரிலீஃப் காம்ப்.

1934ல் அகண்டானந்தா ராமகிருஷ்ணா மடத்துக்குத் தலைவர் ஆனாராம். ஆனா அப்போகூட அவர் ஃபீல்ட் வொர்க்கை விட்டுட்டுப் போகலையாம்...

ஒருமுறை, பணக்காரர் ஒருத்தர்கிட்டே உதவி கேட்டிருக்கார் அகண்டானந்தா. 'ஒரு சாமியாரோட வேலை ஆத்ம விசாரம்தான். அதைப் பண்றதைவிட்டுட்டு நீ ஏன் இந்த மாதிரி காரியமெல்லாம் இழுத்துப் போட்டுக்கறே?'ன்னு அந்தப் பணக்காரர் மறுத்தாராம். மக்கள் பணியே மகேசன் பணின்னு பதில் சொல்லிருக்கார் அகண்டானந்தா... இதைத்தானே தாயுமானவரும் சொன்னார் :

*அன்பர் பணி செய்ய என்னை ஆளாக்கி விட்டுவிட்டால்*
*இன்பநிலை தானே வந்தெய்தும் பராபரமே!*

— சுமி

"கையில் சல்லி காசு கிடையாது. என்ன செய்ய...? மார்னிங் அன்ட் ஈவினிங் பரமஹம்சரை நினைச்சுப் பூஜை... கங்கைக் கரையிலே ஒரு நாள் ஆறுதலா குரல் கேட்டது: "காத்திரு!"."

# சபாஷ் ஷெரீஃபா!

ஏறத்தாழ பன்னிரண்டு ஆண்டுகள்... பொருளாதார நெருக்கடிகள், வீட்டின் எதிர்ப்புகள், தனிப்பட்ட ஒழுக்கத்தைப் பற்றிய விமர்சனங்கள், ஏதாவது ஒரு விஷயத்திற்காக உதவி கேட்டுப் போனால் அதிகாரிகளின் அருவருக்கத்தக்க பார்வைகள்... அத்தனை



• பிரதமரிடம் விருது

யையும் தூக்கியெறிந்து விட்டு பெண்களின் உரிமைகளை மட்டுமே உணவும், உறக்கமுமாகக் கொண்டு வெற்றியும் பெற்றிருக்கிறார் ஷெரீஃபா ஹானம்.

தன்னுடைய 'ஸ்டெப்ஸ்' அமைப்பு மூலம் இருபது வயதில் தொடங்கி இன்று முப்பத்தேழு வயதில் இலட்சியப் படிகளைத் தொட்டிருக்கிறார் இவர்.

மணப்பாறையில் ஐந்து சகோதரர், நான்கு சகோதரிகள் என்று தந்தையிழந்த அந்தக் குடும்பத்தின் பத்தாவது குழந்தை என்பதால் அக்கறையிலும், அன்பிலும், படிப்பிலும் குடும்பமே செல்லம் காட்டியிருக்கிறது இவருக்கு.

"காரைக்குடி அழகப்பா பல்கலைக் கழகத்தில் எம்.ஏ. படிச்சேன். டெல்லியில் மூன்று வருடம் அலுவலக நிர்வாகம் படித்தேன். எனக்கு இந்தி, உருது உட்பட நான்கு மொழிகள் தெரியும். ஏதாவது ஒரு நல்ல

• கட்டடம்



வேலையில் சேரணும்ங்கிறதுதான் என்னுடைய எண்ணமாக இருந்தது. வேலை தேடித்தான் என் நண்பர்களைப் பார்க்க புதுக்கோட்டை வந்தேன். அப்போது பாட்னாவில் நடந்த பெண்கள் மாநாட்டில் மொழி பெயர்ப்பாளர் வேலைக்கு ஆள் தேவைப்பட, சம்பளத்திற்காக அங்கே போனேன். மாநாட்டிற்கு வந்த பெண்கள் தங்கள் பிரச்னைகளைச் சொல்லச் சொல்ல... நாம் ஏன் பெண்களின் அடிப்படை உரிமைகளைப் பெற்றுத் தர போராடக்கூடாது? என்ற எண்ணம் வந்தது. புதுக்கோட்டையைச் சுற்றியுள்ள கிராமங்களில் மாலை நேரங்களில் இந்தி வகுப்பு எடுத்தேன். அப்போது பெண்களின் பிரச்னைகளைக் கேட்கும் வாய்ப்பும், உதவும் வாய்ப்பும் வந்தது. புதுக்கோட்டையில் தங்கி, இந்த 'ஸ்டெப்ஸ்' அமைப்பைப் பெண்களுக்காக உருவாக்கினேன்."

> “என்னுடைய குடும்பத்தினர் என்னைப் போகவிடாது தடுத்திருக்கிறார்கள். அடித்து உதைத்திருக் கிறார்கள்.”

பெண்களின் மீதான பாலியல் வன்முறைகள், வரதட்சணை கொடுமைகள், விவாகரத்து வழக்குகள், போராட தன்னம்பிக்கையை ஊட்டுதல், அடிமட்டத்தில் உள்ள மக்கள் பாதிக்கப்படும்போது நியாயத்திற்காகப் போராடுதல் என்று புதுக்கோட்டை மாவட்டத்தில் பெண்களுக்கு எதிரான கொடுமைகள் நிகழும் போதெல்லாம் அங்கு ஒரு போராட்டக்



• போராட்டத்தில்...



காரராக ஷெரீஃபாவைக் காண லாம்!

"ஆரம்ப காலங்களில் எங்கள் காதுகளுக்கு எட்டிய பிரச்னைகளைத் தீர்க்க நாங்கள் நேரில் சென்று நியாயம் கிடைக்கச் செய்தோம். இன்று எங்களுடைய சேவையைக் கேள்விப் பட்டு வேறு மாவட்டங்களிலிருந்து கூட உதவி கேட்கும் அளவிற்குப் பெண்களிடையே விழிப்புணர்வு வந்திருக்கு. பிரச்னைகளை அணுகும்போது சில அதிகாரிகள் எதிர்ப் பாங்க.. சில அதிகாரிகள் உதவி செய்வாங்க... எந்தப் பிரச்

னையும் மூடி மறைக்க விடுவதில்லை. அப்படி மூடி மறைக்க யாரேனும் முயன்றால் பெண்களை ஒன்று திரட்டிப் போராட்டத்தில் இறங்கிவிடுவோம்" என்கிறார் ஷெரீஃபா.

கடந்த காலங்களில் பெண்கள் தொடர்பான சுமார் 1500 வழக்குகளை அலசி, பாதிக்கப்பட்ட பெண்களுக்கு உதவியிருக்கிறார் இவர். இவருடைய சேவையைப் பார்த்து அப்போதிருந்த மாவட்ட ஆட்சியர் ஷீலாராணி சுங்கத் 'ஸ்டெப்ஸ்' அமைப்புக்குக் கட்டடம் கட்ட இடம் ஒதுக்கித் தர, பெண்களே சேர்ந்து தங்கள் உடல் உழைப்பால் கட்டடம் கட்ட ஐந்து ஆண்டு காலம் ஆகியிருக்கிறது. கட்டடம் முடிவடையாத நிலையில் அந்தக் கட்டடத்தினருகில் அசுத்தம் செய்வது, ஆணுறைகளைப் பரப்பி விபசாரம் நடக்கிறது என்று பொய்ப் பிரசாரம் செய்வது... என ஷெரீஃபாவை விரட்டியடிக்க முயன்றவர்களும் உண்டு.

எந்தவித எதிர்பார்ப்பும் இன்றி, பிரேமானந்தா வழக்கில் பாதிக்கப்பட்ட 17 பெண்களையும் வழக்கு முடியும்வரை தம்முடனேயே தங்க வைத்துப் பராமரித்திருக்கிறார் ஷெரீஃபா.

''தன்னார்வத் தொண்டு நிறுவனத்திற்கான எந்த விதமான அரசின் உதவிகளையோ, திட்டங்களையோ பெற்றதில்லை 'ஸ்டெப்ஸ்'. எதிர்காலத்தில் பெறுவதற்கான எண்ணமுமில்லை'' என்கிறார் இவர்.

சுதந்திர தின பொன்விழா நினைவாக மத்திய அரசால் அறிவிக்கப்பட்ட சிறந்த சமூக சேவை நிறுவனத்திற்கான டாக்டர் துர்காபாய் தேஷ்முக் விருது முதன் முதலில் 'ஸ்டெப்ஸ்' நிறுவனத்திற்குத்தான் வழங்கப்பட்டது. அதில் கிடைத்த தொகை ஒரு லட்சத்தைக் கொண்டு 'ஸ்டெப்ஸ்' அலுவலகம் மாடிக் கட்டடமாக விரிவாக்கம் செய்யப்பட்டது. மத்திய அரசு விருது வழங்கிய அதே நாளில் அமெரிக்காவில் தேர்ந்தெடுக்கப்பட்ட உலகின் சிறந்த பெண்மணிகள் நூறு பேரில் ஒருவராக ஷெரீஃபா தேர்வு செய்யப்பெற்று ஆயிரம் டாலர்கள் பரிசும் வழங்கப்பட்டது.

''என்னால் உதவி பெற்றவர்கள் என்னைப் பார்க்கும்போதெல்லாம் என்னம்மா சௌக்யமா? வாம்மா சாப்பிட்டுட்டுப் போகலாம் என்று அழைக்கும் அந்த பாசமான அழைப்புதான் எனக்குக் கிடைத்த பெரிய விருது. அதைவிட வேறு விருது என்ன வேண்டும்?'' என்கிறார்.

'ஸ்டெப்ஸ்' அமைப்பின் அலுவலகமே வித்தியாசமாக இருக்கிறது. அலுவலகத்துக்குள் கடந்த ஆண்டு, நடப்பு ஆண்டுகளில் நடந்த பெண்களுக்கு எதிரான கொடுமைகள் புள்ளிவிவரங்களாகத் தொங்கிக் கொண்டிருக்கின்றன.

வாஷிங்டனில் உள்ள பெண்கள் மையம் ஒன்று ஷெரீஃபாவின் வாழ்க்கையையும், பெண்கள் முன்னேற்றத்திற்கான செயல்பாடுகளையும் நூலாக எழுதித்தரக் கோரி 12,000 டாலர்களை அனுமதித்திருந்தது. இது தொடர்பான விண்ணப்பங்கள், ஒப்பந்தங்கள் பரிமாற்றம் நடந்து கொண்டிருந்த வேளையில், உலக வர்த்தக மையம் இடிக்கப்பட்டுவிட முஸ்லீம் பெண்மணி என்பதற்காகக் காரணம் தெரிவிக்காமல் அதை ரத்து செய்துவிட்டது வாஷிங்டன் நிறுவனம்.

ஷெரீஃபா முஸ்லிமாக இருந்தாலும் மதங்களை ஏற்பதில்லை.

'மனிதம் - மனித நேயம்' இதுதான் என்னுடைய மதம் என்கிறார். முஸ்லிம் தலைவர்கள் ஷெரீஃபாவைக் கட்டுப்படுத்த நினைத்தபோது, வட்டி வாங்கும் முஸ்லிம்கள், விதவைகள் மணத்தை ஆதரிக்காத முஸ்லிம்கள் இவர்களின் மீதும் கட்டுபாடு வையுங்கள் என்று எதிர்த்திருக்கிறார்.

“பெண்களுக்கான உரிமைகளைப் பெற்றுத்தருதல், அதற்காகப் போராடுதல் என்பது உணர்வு பூர்வமாக இருக்க வேண்டும். அதை வேலை என்று நினைக்கக்கூடாது. கடமையாக நினைக்க வேண்டும். அதனால்தான் சமூக நல வாரியத் தலைவர் பதவிக்கு, விண்ணப்பத்தினை யாருடைய பரிந்துரையும் இல்லாமல் முதல்வருக்குச் சாதாரண தபாலில் அனுப்பியுள்ளேன்.



''ஆந்திராவிலுள்ள ஆனந்தப்பூர் மாவட்டம் புட்டபர்த்தியிலுள்ள ஸ்ரீசத்ய சாய்பாபா மருத்துவமனை வளாகத்தினுள்ளே நான் கண்டு மெய்சிலிர்த்த கல்தூண் வாசகங்களுள் ஒன்று.

"Ego wants to get and forget; Love wants to give and forgive"

— சாந்தி சுந்தர்

"விண்ணப்பம் முதல்வர் பார் வைக்குப் போச்சோ.. குப்பைக் கூடைக்குப் போச்சோ தெரியலை" என்கிறார் சிரித்துக் கொண்டே.

எதிர்காலத்தில் மாநில அளவில் பெண்களை ஒருங்கிணைக்கும் பெண்கள் மையம் அமைத்தல், வயதான காலங்களில் உதவ, பெண்கள் தங்களுக்கென்று ஒரு தொகை வைத்துக்கொள்ள பெண்கள் வங்கி ஒன்றும் அமைத்தல் போன்ற திட்டங்களை வைத்திருக்கிறார் ஷெரீஃபா ஹானம்.

''இந்த வேலையில் என்னை ஈடுபடுத்திக் கொண்டபோது என்னுடைய குடும்பத்தினர் என்னைப் போகவிடாது தடுத்திருக்கிறார்கள். அடித்து உதைத்திருக்கிறார்கள். மாலை 6 மணிக்கு மேல் வெளியே போக வேண்டிய சூழ்நிலை ஏற்படும். தனி ஒரு ஆளாக நள்ளிரவில் பஸ் ஸ்டாண்டில் நின்றிருக்கிறேன். அப்போதெல்லாம் பார்ப்பவர்களின் விமர்சனங்கள் அசிங்கமாக இருக்கும். அதையெல்லாம் சகித்துக் கொண்டுதான் இருந்தேன். அதற்குக் காரணம் என்னுடைய தன்னம்பிக்கையும் போர்க்குணமும்தான். நான் வாழ்க்கையில் சந்தித்த அவலங்கள் எந்த பெண்களுக்கும் வரக்கூடாது என்பதுதான் லட்சியம். அதற்காகத்தான் போராடுகிறேன்." என்கிறார்.

"சுயமரியாதையே பெண் விடுதலையின் முதல்படி.." இந்த வாசகம் ஸ்டெப்ஸ் அமைப்பின் முதல்படியாக இருக்கிறது.

சந்திப்பு, படங்கள்:
கி. சிங்காரவடிவேல்

# நல்ல மருந்து...

அந்தக் காட்டின் ராஜாவான சிங்கத்தின் உடல் நலம் சரியில்லாமல் போய்விட்டது. இந்த விஷயம் காடு முழுவதும் தெரிய வர, ஒவ்வொரு விலங்காக ராஜாவிடம் நலம் விசாரித்துவிட்டு போனது.

ஓநாய் வந்திருந்தபோது யாரும் இல்லாததால் சிறிது கூடுதலாக சிங்கத்திடம் பேசிக் கொண்டிருக்க நேரம் கிடைத்தது.

எத்தனையோ நல்ல விஷயங்களைப் பேசி இருக்கலாம். ஆனால் அந்த கெட்டமனம் படைத்த ஓநாய் அடுத்தவருக்குத் துன்பம் தர நினைத்து, ''ராஜாவே உங்களை காண எல்லா விலங்குகளும் வந்து போய்விட்டன. ஆனா, இந்த நரிப் பயல் மட்டும் பாருங்க அலட்சியமா இருக்கான். இன்னும் ஆளைக் காணலை'' என்று சொன்னது. இதை கேட்டதும் சிங்கத்திற்கு கோபம் தலைக்கேற ''அப்படியா வரட்டும் அந்தப் பயல்'' என்றது.

அந்த நேரம் பார்த்துதான் நரி அங்கு வந்து கொண் டிருந்தது. ஓநாயின் வார்த்தையையும் சிங்கத்தின் கோப வார்த்தையும் கேட்டு அதிர்ந்தது. அப்படியே திரும்பி ஓடி விடலாமா? என்று ஒருகணம் நினைத்தாலும், உடனே சுதாரித்துக் கொண்டது.



'பிரச்னை கண்டு ஓடினால் அது விடாது துரத்திக் கொண்டு வரத்தான் செய்யும். சமாளித்துத் தீர்ப்பதே நல்லது. இன்று ஓடி விட்டாலும் நாளை சிங்கத்துக்குப் பதில் சொல்லியே ஆகணும். அதோடு ஓநாய் கூற்றை உண்மையாக்கி விடவும் கூடாது. எனவே எப்படியும் சமாளித்து சிங்கத்தை எதிர்கொள்வதுடன் ஓநாய்க்கும் பாடம் கற்பிக்க வேண்டும்' என்று நினைத்த நரி, சமயோசிதமாக ஒரு திட்டத்துடன் சிங்கத்தின் வீட்டில் நுழைந்து, 'அரசே வணக்கம்' என்றது.

''என்ன அலட்சியம் உனக்கு? ஏன் இத்தனை தாமதம்''

''அரசே எல்லா விலங்குகளும் உங்களை ஒப்புக்கு வந்து விசாரிக்கின்றன. நான் உங்கள் மீது ரொம்ப அக்கறை உள்ளவன் என்பதால் வெறுமனே வந்து விசாரிக்காமல் அடுத்த ஊர் வைத்தியனிடம் போய் மருந்தும் அறிந்து வந்திருக்கிறேன். அதான் தாமதம்'' என்றது.

சிங்கம் கோபம் மறந்து மகிழ்ச்சி அடைந்தது. 'நீ ரொம்ப நல்லவன்தான். சரி மருந்து என்ன சொல்' என்றது.

'உங்களுக்கு வந்திருக்கும் விஷ காய்ச்சலுக்கு ஓநாய் தோலைப் போர்த்திக்கொண்டால் சரியாகி விடும்' என்றது.

நரி வார்த்தையைக் கேட்டதும் ஓநாய் ஓட எத்தனித்தது. அப்போது 'படீர்' என சிங்கத்தின் கால் அதன் முதுகில் இறங்கியது!



# 3

# மனம்

## பாலகுமாரன்

"நீங்க பண்றது நன்னாவேயில்லை."

ராதாகிருஷ்ணன் மாமியார் சொல்ல, "சும்மா இருங்கோ. சாருமதியினுடைய சந்தோஷம்தான் முக்கியம். புள்ளை ஆத்துக்காரர் ஒரு குறையுமில்லைன்னா ஒரு குறையும் இல்லாம போறதுதான் முக்கியம். ரேவதி உனக்கு ஏதாவது அப்ஜெக்ஷன் உண்டா?"

"ஒன்னுமேயில்லை. தாராளமா எடுத்துக் கட்டும். ஆனா என் புடைவை விலை ஜாஸ்தி."

"போகட்டும் ரேவதி. உனக்கு அதைவிட ஜாஸ்தி விலையில நான் புடைவை வாங்கித் தர்றேன். ஊருக்குப் போகறதுக்கு முன்னாடி வாங்கித் தரேன்."

ராதாகிருஷ்ணன் உறுதியாகச் சொன்னார்.

கட்டுச்சாதக் கூடைகள் கூடத்தில் தயாராக இருந்தன. ஊருக்குப் போகின்ற சம்பந்தி வீட்டாரிடம் மூன்று மூன்று பொட்டலங்கள் கொடுக்கப்பட்டன.

"எனக்கு எதுக்கு ஸார் புளியோதரையும் இதுவும்.

வயிறு நிறைய சாப்டாச்சு; நேரா ஊருக்குப் போகப் போறேன். இது என்னத்துக்கு?"

மாமனார் கட்டுச்சாதக் கூடையிலுள்ள பொட்டலங்களைக் கொடுக்க, மிச்சத்தை அவர்கள் மகேந்திரா வேனில் ஏற்றி உள்ளே வைத்தார்கள்.

குழந்தை சாருமதி விடை பெற்றாள். அப்பாவையும், அம்மாவையும் நமஸ்கரித்தாள். அத்திம்பேரையும், அக்காவையும் நமஸ்கரித்தாள். அத்திம்பேருக்கு அருகே வந்து அவர் தோளைப் பற்றி அவர் மீது சாய்ந்து கொண்டாள்.

"எனக்கு எப்படி நன்றி சொல்றதுன்னே தெரியலை அத்திம்பேர்."

"எதுக்கு நன்றி. நீ என் பொண்ணு மாதிரி. பதிமூணு வயசுல எனக்குப் பொண்ணு இருக்கா. உனக்கு இருவது வயசு. ரெண்டு பேருக்கும் நடுவுல ஏழு வயசுதான் வித்தியாசம். காலா காலத்துல எனக்குக் கல்யாணம் நடந்திருந்தா உன் வயசுல பொண்ணு இருப்பா. அம்மாடி, போய், சமர்த்தா குடித்தனம் பண்ணு. கெட்டிக்காரத்தனமா நடந்துக்கோ. அழுத்தமா இரு. குறைச்சலா பேசு. மனுஷாள புரிஞ்சுண்டு பதில் சொல். நம்ம வீட்ல விளையாட்டா இருந்தா மாதிரி இனிமே இருக்க முடியாது சாருமதி. அதை நீயா புரிஞ்சுப்ப. எந்தக் கவலையும் படாத. எது இருந்தாலும் எங்கிட்ட சொல். உனக்கு ஒரு கவலையும் வராது. சந்தோஷமா இருப்ப."

இரண்டு கைகளையும் சாருமதியின் தலையில் வைத்து ஆசிர்வதித்தான்.

ரேவதிக்குப் புருஷனுடைய ஒவ்வொரு செய்கையும்



# உருகுதே...

பரமானந்தத்தைக் கொடுத்தது. இறங்க அடித்தது.

கல்யாண சத்திரம் காலியாயிற்று. மைத்துனன் பணப் பட்டுவாடாவை மடமடவென்று செய்தான். மீதி பணத்தைச் சுருட்டிப் பையில் வைத்துக்கொண்டான்.

"ரேவதி அந்தப் புடவை கொடுத்தியா?"

"ஐயோ... மறந்தே போச்சு."

"என்னா பண்ற நீ" ராதாகிருஷ்ணன் உரத்தகுரலில் அவளைப் பார்த்துக் கத்தினார்.

"இத்தனை நேரம் அவா ஸ்டேஷனுக்குப் போயிருப்பாளே."

"மூணு மணி வண்டி வந்திருக்காது. கிளம்பு.... டேய்... ஏதாவது கார் இருக்கா பாருடா. நீங்களும் வாங்கோ. ஸார் நீங்க இங்க இருங்கோ."

"என்ன விளையாடறேளா. இப்படித்தான் நன்றி சொல்வாளா? உங்களை மாதிரி பெரியவா கால் தொட்டு என்னை நமஸ்காரம் பண்ணா நான் நன்னா இருப்பேனா?"

மாமனாருக்கு உத்தரவு போட்டார். மனைவியை, மாமியை, மைத்துனனை அழைத்துக்கொண்டார்.

கார் ஸ்டேஷன் நோக்கிப் பறந்தது.

**மா**ப்பிள்ளை வீட்டார் அவர்களைப் பார்த்து திகைத்தார்கள். சாருமதி வியந்தாள்.

"அம்மாடி எதுவோ ஒரு புடைவை பொசுங்கிப் போயிடுத்துன்னு சொன்னியாமே. வருத்தப்பட்டியாமே... எந்தப் புடைவை அது?"

"அது பரவாயில்லை மாமா" அவள் சாதாரணமாகச் சொல்ல, "இல்லை. அந்தப் புடைவைய இப்பவே கொடு. நான் பார்க்கணும்."

"இல்லை. அது பெட்டிக்கு அடியில இருக்கு மாமி."

"பொட்டியைத் திறக்க முடியுமோன்னோ. சாவி வச்சருக்க இல்ல. - திற."

ஸ்டேஷனில் பெட்டி திறக்கப்பட்டது. என்ன... என்ன... என்று எல்லோரும் சூழ்ந்துகொண்டார்கள்.

கடைசியில் இரண்டு குஞ்சலங்கள் பாதி எரிந்துபோயிருந்தன.

"ஆமாம். எரிஞ்சுதான் போயிருக்கு."

சுமாராக மடித்த புடைவையை எடுத்து மைத்துனனிடம் கொடுக்க, மனைவி கோணித் துணியிலான ஸ்னாப்பர் பையைத் திறந்து அட்டைப் பெட்டியோடு கூடிய பட்டுப் புடைவையை எடுத்துப் பிரித்து அவளிடம் நீட்டினாள்.

"என்ன... எதுக்கு...?"

"இதோ பார் நீ வருத்தத்தோட போனா எங்களுக்குக் கஷ்டமா இருக்கும். வருத்தமே கூடாது. எல்லாரும் சந்தோஷமா நல்லபடியா கல்யாணம் நடந்ததுன்னு போகணும். எங்கிட்ட முன்னாடியே சொல்லியிருந்தா இத அங்கயே ஏற்பாடு பண்ணியிருப்பேன். இப்போதான் சொன்னா. அதனாலதான் உடனே ஓடி வந்தேன்."

"இதுக்குன்னு போய் புடைவை வாங்கிண்டு வந்தேளா?"

"இதுக்குன்னு வாங்க முடியுமா? முன்னயே கையில வச்சண்டிருந்தோம். எக்ஸ்ட்ராவா யாராவது வந்தா கொடுக்கணும்னு. இது உனக்காச்சு அவ்ளோதான். இந்தப் புடைவை நன்னாயிருக்கா பார்."

ஸ்டேஷனிலேயே புடைவை பிரித்துப் பார்க்கப்பட்டது. இருபது, முப்பது பேர் சூழ்ந்து கொண்டார்கள்.

"அதைவிட இது விலை ஜாஸ்தியா இருக்கும் போலிருக்கே மாமா."

"இருந்துட்டுப் போறது. எங்க உயிருக்கு உயிரான பொண்ணையே கொடுத்திருக்கோம். புடைவை பெரிசா? சந்தோஷமா வாங்கிகோங்கோ. சந்தோஷம்னு வாய் நிறைய சொல்லு."

"ரொம்ப சந்தோஷம் மாமா."

மாப்பிள்ளையின் தங்கை முகம் மலர சிரித்தாள்.

அவர்கள் விடை பெறறுக்கொண்டு காரில் ஏறினார்கள். முன்பக்கம் மைத்துனன் ஏறிக்கொண்டான். பின் ஸீட்டில் மாமியார் கோடியில் உட்கார்ந்திருக்க நடுவில் மனைவி உட்கார்ந்திருக்க ராதாகிருஷ்ணன் அவளுக் கருகில் உட்கார்ந்தார். மனைவியின் செய்கைகள் ராதாகிருஷ்ணனுக்குக் கிளர்ச்சி ஊட்டின. ரேவதி மிகப் பெரிய சந்தோஷத்தில் இருக்கிறாள் என்பதை வெளிப்படுத்தின.

**ச**த்திரத்து காரியதரிசியிடம் விடை பெற்றுக்கொண்டு எல்லோரும் இளம்புகையில் மாமனார் ராதாகிருஷ்ணன் கைகளைப் பற்றிக் கொண்டார்.

"தப்பா நினைச்சுக்காதீங்கோ. எனக்கு நன்றி எப்படி சொல்றதுன்னு தெரியலை. எனக்கு வேகமா பேச வராது. அதனால ஒரு தடவை விழுந்து நமஸ்காரம் பண்ணிடறேன்" என்று ராதாகிருஷ்ணன் காலைத் தொடப் போக, ரேவதி பதறினாள். ராதாகிருஷ்ணன் பாய்ந்து அவரை நிமிர்த்தினார்.

"என்ன விளையாடறேளா. இப்படித்தான் நன்றி சொல்வாளா? உங்களை மாதிரி பெரியவா கால் தொட்டு என்னை நமஸ்காரம் பண்ணா நான் நன்னா இருப்பேனா? அந்தப் பாவத்தை என் தலையில ஏன் சுமத்



**"பக்கத்து வீட்டுக்காரனோடு வருஷத்துல ஆறு மாசம் நான் சண்டைக்குப் போவேன்!"**

**"மறு ஆறு மாசம் சமாதானமா?"**

**"அவன் என் கிட்ட சண்டைக்கு வருவான்!"**

**— பர்வதவர்த்தினி**



''திருமணத்தில வாழ்த்திப் பேசின நம்ம தலைவர் மேல மணமக்கள் கோபமா இருக்கிறாங்களா? ஏன்?''

''மணமக்கள் நம்ம கட்சியும் கொள்கையும் போல வாழணும்னு வாழ்த்தினாராம்!''

— வீட்டுக்கட்டி மு. பெரியசாமி

தரேன்? உங்களுக்கு நன்றி சொல்லணும்னா வந்து பத்துநாள் எங்க வீட்ல இருந்துட்டுப் போங்கோ. கல்யாணக் களைப்பு தீர நன்னா சாப்பிட்டுத் தூங்குங்கோ."

"அதெல்லாம் ஒன்னும் வேண்டாம் யார் தருவா ஆறு பவுன்? டக்குனு அள்ளிக் கொடுத்தேளே... யார் தருவா? பத்தாயிரம் ரூபா காசு சபையில நின்னு ஓதி விட்டேளே, யார் செய்வா? எனக்கென்ன வேட்டி, எனக்கென்ன சட்டை, எங்கம்மாவுக்கு என்ன பண்ணியிருக்கு அப்படின்னு ஒவ்வொரு மாப்பிள்ளையும் கேட்பான். நீங்க வந்து சீர் பண்ணினேளே. யார் செய்வா? என்னுடைய சகோதரர்கள் செய்யலை. என்னுடைய சகோதரர்கள் ரெண்டு பேர் வரவேயில்லை. பெரியப்பா, சித்தப்பா பசங்கள்கிட்டே காசு இருந்தாலும், என்னால அவ்ளோ எல்லாம் தர முடியாது. அரைப்பவுன் தரேன்னு சொல்லிட்டுப் போயிட்டான். அந்த அரைப் பவுன் இன்னும் கைக்கு வரலை. நான் பார்த்துக்கறேன்னு நீங்க நின்னு சொன்னேள். எனக்கு அப்போத்தான் உயிரே வந்தது."

"அப்படியெல்லாம் இல்லை. மாமா நான் பாத்துக்காட்டி வேற யாராவது பார்த்துப்பா. கல்யாணம் நிக்கவே நிக்காது. எதனாலயும் நிக்காது. சிருக்காக ஒருத்தன் கல்யாணத்தை நிறுத்தினா அவனைவிட மகாபாவி வேற யாருமில்லை. ஊர் அவனை மதிக்காது. எதுக்கு உணர்ச்சி வசப்படறேள். எங்கிட்ட இருந்தது கொடுத்தேன். அற்புதமா ஒரு பொண்ணு பெத்துக் கொடுத்திருக்கேளே ரேவதி, ரேவதின்னு அவளுக்காக கொடுத்தேன். நீங்க எனக்கு நன்றி சொல்ல வேண்டாம். நான் கொடுத்த அந்த ஆறு பவுன் என்னுடைய நன்றி. அந்த நன்றி உங்களுக்குக் கூட இல்லை. பார்த்துப் பார்த்து என்னை கவனிச்சுக்கறாளே அந்த ரேவதிக்கு நன்றியா இதை அவ தங்கைக்குச் செய்றேன். போதுமா? கணக்கு முடிஞ்சு போச்சா. தயவு செய்து கால்ல எல்லாம் விழுந்து என்னைக் கடன்காரனாக்கிடாதீங்கோ."

மாமனாரும், மாப்பிள்ளையும் ஒருவரையொருவர் அணைத்துக்கொண்டு போட்டோவுக்கு போஸ் கொடுத்தார்கள்.

மாமனார், மாமியார் அமர்ந்திருக்க ராதாகிருஷ்ணனும், ரேவதியும், ராதாகிருஷ்ணன் மகளான சுபத்ராவும், சுப்ரமணியமும் அருகருகே நின்றுகொண்டார்கள்.

மாமனார், மாமியார் உட்கார்ந்து கொண்டிருக்க இரண்டு பக்கமும் மைத்துனர்கள் நிற்க குழந்தைகள், அவர்கள் காலடியில் சம்மணமிட்டு உட்கார்ந்திருக்க ராதாகிருஷ்ணனும் ரேவதியும் கம்பீரமாக நின்று படமெடுத்துக் கொண்டார்கள்.

"இப்போ கிளம்பினாத்தான் சரியா இருக்கும். டிரைவர் சாப்பிட்டாங்களா? கிளம்பிடலாமா? சாயந்தரம் ஆறு மணிக்குப் போயிடலாமில்லை?"

"ஏழு மணி ஆயிடும் ஸார்."

ராதாகிருஷ்ணன் குழந்தைகளோடும், மனைவியோடும் ஏழு மணிக்குச் சென்னை திரும்பினார்.

உள்ளே நுழைந்ததும் டெலிபோன் அழுத்தி உதவி மேனேஜருக்கு ஃபோன் செய்தார்.

"ஊருக்கு வந்துட்டேன்ப்பா. ஒன்னும் பிரச்னை இல்லையே?'' என்று கேள்வி கேட்டார்.

சில பிரச்னைகள் சொல்லப்பட்டன. நாளை காலை வந்துவிடுவதாக உறுதியளித்தார்.

கட்டுச்சாதக் கூடை உணவையும், பட்சணங்களையும் குழந்தைகள் சாப்பிட்டு அப்படியே படுக்கப் போனார்கள்.

"ரேவதிக்கு நன்றியா எங்கப்பாவுக்கு ஆறு பவுன் கொடுத்துட்டேன். ரேவதி பதிலுக்கு நன்றி சொல்ல வேண்டாமா."

சாப்பிட்டுக் கொண்டிருந்தவர் அருகே போய் ரேவதி இழைந்தாள்.

உடம்பு முழுவதும் படர்ந்த அந்த கல்யாண சந்தோஷத்தை நிறைவு செய்வதற்காக அந்தத் தம்பதி தயாரானார்கள்.

## முயற்சியும் - உதவியும்

ஒரு விவசாயி தன் நிலத்தில் விளைந்த காய்கறிகளை வண்டியில் ஏற்றிக்கொண்டு நகரத்தில் உள்ள சந்தைக்குச் சென்று கொண்டிருந்தான். வழியில், வண்டி சேற்றில் சிக்கிக்கொண்டு நகர முடியாமல் நின்றுவிட்டது.

உடனே விவசாயி தனது குலதெய்வத்தை அழைத்தான். "ஆண்டவனே இந்த இக்கட்டில் இருந்து என்னைக் காப்பாற்ற



மாட்டாயா?"

அவன் பலமுறை அழைத்தும் உதவி கிட்டவில்லை.

உடனே வண்டியில் இருந்து கீழே குதித்தான். பலங் கொண்ட மட்டும் வண்டியைத் தள்ளினான்.

அப்போது யாரோ உதவியாக சக்கரங்களை உருட்டுவது தெரிந்தது. அது யார் என்று உற்றுப் பார்த்தான். அவனது குல தெய்வம்தான்!

கோபமாகக் கேட்டான். "இவ்வளவு நேரம், அழைத்தேனே எங்கே போனாய்?"

"நீ அழைத்த உடனே வந்திருந்தால் சோம்பேறி ஆகி விடுவாய். உன் முயற்சியின் பலன் உனக்குத் தெரியாமலேயே போயிருக்கும். உன் முயற்சிதான் முக்கியம். உன்னால் முடியாவிட்டால்தான் அடுத்தவர் உதவியை நாட வேண்டும் என்பதற்காகத்தான் சற்று பொறுத்து வந்தேன்" என்றது தெய்வம்.

காமம் ஒரு சுகமான மொழி. மனசு சுத்தம்தான், அதன் முதல் இலக்கணம். காதல்தான் அதனுடைய எழுத்து வடிவம். நேசிப்பு இல்லாமல் காமத்தில் ஈடுபடுகிற பொழுது வீர்யமற்றுப் போகிறது. வஞ்சனையாக நகராமல் தனக்கு மட்டும் வேண்டுமென்று நினைக்காமல் கொடுப்பதற்கும் முயற்சி செய்கிற மனசு சுத்தம் இருக்கிறபொழுது மொழி கம்பீரமாய் பேசப்படுகிறது. மனசு சுத்தம் இல்லையெனில் ஒரு நல்ல மொழியைக் கொச்சையாகப் பேசுவது போல் காமம் குறையாக நிற்கிறது.

ராதாகிருஷ்ணனும் ரேவதியும் போட்டி போட்டிக் கொண்டு அன்பு பரிமாறினார்கள்.

"உங்கப்பாக்கு என்ன ஆச்சு. திடீர்னு காலில் விழுந்து, கையில விழுந்து..."

"அவருக்கு என்ன செய்யறதுன்னு தெரியலை. ஏதோ செய்யணும்னு தோணி செய்துட்டார். விட்ருங்கோளேன். அவருக்குச் சக்தி இருக்கிற தம்பிகள் மேல சொந்தக்காரர் மேல கடுப்பு. அவங்க தலையில எப்படி குட்டறதுன்னு தெரியலை. அதனால என்னைக் கிழக்குப் பார்த்து நிக்க வச்சு நமஸ்காரம் பண்ற மாதிரி ஒரு டிராமா போட்டார்."

"எங்கப்பாக்கு அதெல்லாம் தெரியாது."

"அந்தக் கிழவருக்கு எல்லாம் தெரியும். ஆனா, வெளிய காண்பிச்சுக்க மாட்டார். ஆனா, அந்த தம்பி ஏன் தரலை. என்னால முடிஞ்சது அரைப் பவுன்னு சொன்னாராம். அந்த அரைப்பவுனைக் கொண்டுபோய் கல்யாணத்து அன்னிக்குக் கொடுக்க வேண்டியதுதானே."

"நீங்க கொடுத்துட்டேளே அதனால தரலையாம். அப்புறம் தீபாவளிக்கு வருவா? அப்போ ஏதாவது பண்ண வேண்டாமா. அப்போ இந்த அரைப் பவுனை வச்சுக்கோன்னு சொல்லிட்டா."

"மடத்தனமா இல்லை?"

"திமிர் பொறாமை." ரேவதி கொஞ்சம் குரல் உயர்த்தினாள்.

"என்ன பொறாமை?"

"உங்க மேல பொறாமை. என் மேல பொறாமை. டக்குனு கொண்டு வந்து ஆறு பவுன் போட்டாளே, அது எப்படிங்கற பொறாமை."

"அதெப்படின்னா. எனக்குப் புரியலையே?"

ராதாகிருஷ்ணன் மனைவியைத் தழுவிக் கொள்வதை விட்டுவிட்டு மல்லாந்து படுத்தார்.

"எப்போ தருவா ஆறு பவுன் அப்படின்னு ஒரு கேள்வி!"

"யார் கேட்டா...?"

"அவர் ஒருத்தருக்கு ஒருத்தர் பேசிண்டதை நம்ம பொண்ணு வந்து சொல்லித்து. சுபத்ரா இருக்கறதை கவனிக்காம நிறைய பேசியிருக்கா."

"என்ன... என்ன சொல்லு."

ராதாகிருஷ்ணன் ஆர்வமானார்.

(தொடரும்)





# ஸ்ரீ மஹா ப்ரத்யங்கிரா தேவி, ஸ்ரீ நீல சரஸ்வதி தேவி, ஸ்ரீவாராஹி, ஸ்ரீ விரஜா காலபைரவர் தேவஸ்தானம்

அபராஜிதாபுரி, சோழங்கநல்லூர், சென்னை – 600 119. % 4501404

## ஸ்ரீமஹா ப்ரத்யங்கிரா தேவி ஸ்ரீ மஹா வாராஹி காளீ இரு மஹா சக்திகளுக்கு பூமூடல் மற்றும் மஹா யாகத்திற்கான பூஜை அழைப்பிதழ்

**நாள் : 30.6.2002 ஞாயிற்றுக்கிழமை காலை 7 முதல் மதியம் 2 மணி வரை.**

அனுபவித்து வரும் சகல கஷ்டம், துக்கம், பயம், சங்கடம், ஏவல், பில்லி, சூன்யம் மந்திரவாதி உபத்திரவம், பேய், பிசாசு பயம், மந்திர, யந்திர, தகடு ப்ரயோகங்கள். துர்மந்திர வித்தைகளினால் நல்லவர்களுக்கு தாங்கமுடியாத தொல்லைகளை உண்டாக்குதல், அகால மரணம், விபத்து போன்ற கண்டங்களை உண்டாக்குதல், வேலை, திருமணம், குழந்தை பிறப்பு இவற்றில் உண்டாகும் தடைகள் இவற்றை விலக்கி விமோசனம் தரும் மஹாசக்திதான் ஸ்ரீமஹா ப்ரத்யங்கிரா தேவி. சொந்தமாக வீடுகட்டுவதற்கு வீட்டு மனை பெறுதல், பூமியில் உண்டாகும் வழக்குகள், யுத்தம், பயம், கலகம், குழப்பம் இவற்றைத் தீர்க்கவும், வீட்டிலுள்ள வாஸ்து குறைகளை நிவர்த்தி செய்யவும், கட்டிய புது வீட்டினால் உண்டாகும் பிரச்சனைகளை சரி செய்யவும் நமக்கு எதிரான எதிர் வாதங்களை அழிக்கவும், பக்தர்களுக்குப் பெண் வாரிசுகள் வழங்கக்கூடிய சக்திதான் மஹா வாராஹி காளி. உலகத்திலேயே இந்த இரண்டு மஹா சக்திகளும் இணைந்து அருள் ஆட்சி நடத்தும் இங்கு நிறைவேறும் இந்த யாகத்திலும் பூமூடல் விழாவிலும் உபயம் செலுத்தி கலந்து கொள்வது பூர்வ புண்ணிய பலன் ஆகும். ''வாராஹிகாரனுடன் வாதாடக்கூடாது'' என்பதும் ''பிரத்யங்கிரா தேவியின் பக்தனிடம் துவேஷம் கூடாது'' என்பதும் ஆன்றோர் வாக்கு.

ஸ்ரீ மஹா ப்ரத்யங்கிரா தேவி உயரம் 9 1/4 அடி ஸ்ரீ மஹா வாராஹி 7 அடி உயரம் இவர்களுக்கு நடத்தப்பெறும் பூமூடல், கேரள நாட்டு தாந்திரீக முறையிலானது கைமேல் பலன் தரும் இப்பூமூடல் விழாவிற்கு உபயம் செய்ய விரும்புவோர் அலுவலகத்தைத் தொடர்பு கொள்ளலாம். யாகத்துக்கு கட்டணம் ரூ.2100/-ம் உப உபயம் ரூ.1000/-ம் சங்கல்பம் மட்டும் ரூ.600/- ஆகும். உபய தொகைக்கான Draft-ஐ ஸ்ரீ ப்ரத்யங்கிரா ஆஸ்ரமம் டிரஸ்ட் என்ற பெயருக்கு எடுத்து உரிய பூஜையைக் குறிப்பிட்டு, குடும்பத்தினர் பெயர், நட்சத்திரம், கோத்திரம், குறைபாடுகள், இவற்றை எழுதி இணைத்து அனுப்பி, ரசீது பெற்றுக் கொண்டு இம்மஹா பூஜையில் கலந்து கொண்டு பலன்பெற அழைக்கிறோம்.

# "போஹரா தொடர்ந்திருக்க வேண்டும்!"

**பிற பத்திரிகைகளில் வெளியான சில கடிதங்கள். (சற்றே சுருக்கமாக.)**

'நீங்கள் வெளியிட்டிருந்த ஒரு கட்டுரை அரசின் 'வீண் விதிகளை' எனக்கு நினைவுபடுத்தியது. அவை இதோ.

1. சில அரசுத்துறைகள் உருவாகும்போதே பயனற்றதாக



இருக்கின்றன. சில காலப் போக்கில் பயனில்லாததாகின்றன. வேறு சிலவற்றின் மீதோ 'பயனில்லாமை' திணிக்கப்படுகிறது.

2. கிடைக்கும் பணத்தை முழுக்க செலவழிக்கும்வரை ஒரு திட்டம் விரிவாக்கப்படுகிறது.

3. இலக்கை மறந்துவிடுங்கள். எவ்வளவு கடிதப்போக்குவரத்து நடந்தது என்பதே முக்கியம்.

4. எதிலாவது சந்தேகம் வந்தால் ஒரு குழுவை அமைத்துவிட வேண்டியது.

5. ஒவ்வொரு அதிகாரியும் தனது திறமையின்மையையும் கடந்த முட்டாள்தனத்தைச் செய்கிறார்.

6. ஒரு செயலைச் செய்யலாமென்றால் அதைப் பிரயோஜனமில்லாதபடி செய்வதே நல்லது.

7. செலவைக் குறைக்க வேண்டுமென்றால் பைசாக்களில் கவனம் செலுத்துங்கள்; ரூபாய்களை மறந்துவிடுங்கள்.

8. அரசுக்கு நீங்கள் என்ன செய்ய வேண்டுமென்று கேட்கவேண்டாம். அரசு உங்களுக்கு என்னவெல்லாம் செய்யலாம் என்பதில் கவனம் செலுத்துங்கள்.

9. அரசு கஜானாவைத் தவறான விதத்தில் பயன்படுத்த வாய்ப்பு இருந்தால் அது நிச்சயமாகப் பயன்படுத்தப்படும்.

10. காலம் பொன்னானது. எனவே காலம் தாழ்த்தத் தாழ்த்த பணம் அதிகம் கொட்டும்.!

**(தி வீக் - பி.எஸ்.பட்நாகர், மஸ்கட், ஓமன்)**

'ரவீந்தர்பால் சித்து இவ்வளவு கரன்ஸி நோட்டுக்களை ஆறு வருடங்களாகப் பதுக்கிக் கொண்டேயிருக்கையில் நமது லஞ்ச ஒழிப்புத்துறை என்ன செய்து கொண்டிருந்தது? இப்போதல்லவா தெரிகிறது ஏன் மக்களிடையே கரன்ஸி புழக்கத்திற்குத் தட்டுப்பாடு வந்ததென்று! சித்து போன்றவர்களுக்குக் கடுமையான தண்டனை அளிக்கப்பட வேண்டும். அவரிடமிருந்து பறிமுதல் செய்யப்பட்ட பணம் குஜராத்திலுள்ள கலவரத்தால் பாதிக்கப்பட்டவர்களின் முகாம்களுக்கு

அளிக்கப்பட வேண்டும்.'

**(ஃப்ரண்ட்லைன் - கே.பி.ராஜன், மும்பை)**

'முக்கியமான சமயங்களில் செயல்படாமலிருந்ததற்கான பலனை இந்தியா இப்போது அனுபவித்துக் கொண்டிருக்கிறது. இந்தியாவுடன் காஷ்மீர் இணைவதற்கு முன் பாகிஸ்தான் காஷ்மீரை ஆக்ரமித்தபோது நமக்கு முதல் வாய்ப்பு உருவானது. சர்தார் படேல் நாம் கராச்சியை நோக்கிப் படையெடுக்க வேண்டுமென்றார். இரண்டாவது சந்தர்ப்பம் நமது அரசியலமைப்புச் சட்டம் உருவானபோது ஏற்பட்டது. காஷ்மீர் நமது தேசத்தின் பிரிக்க முடியாத ஒரு பகுதி என்று நம் தலைவர்கள் கூறிக்கொண்டேயிருந்தார்களே தவிர, பிற பகுதிகளிலுள்ள



இந்தியர்களை அங்கு குடியேற அவர்கள் அனுமதிக்கவில்லை. மேற்கு பஞ்சாபைச் சேர்ந்த அகதிகளை அங்கு குடியேற அனுமதித்திருந்தால் பிரச்னை சுலபமாகத் தீர்ந்திருக்கும். 1971 போருக்குப் பிறகு ஏற்பாடு செய்யப்பட்ட சிம்லா மாநாட்டில் மூன்றாவது வாய்ப்பு! பாகிஸ்தானின் எல்லைப் பகுதிகளை நாம் ஆக்ரமிக்கும் வரை, போரை நாம் தொடர்ந்திருக்க வேண்டும். இப்போது நான்காவது வாய்ப்பு வந்திருக்கிறது. ஆனால் முதல் மூன்று வாய்ப்புகளைத் தவறவிட்டதால் இப்போது நாம் கொடுக்கும் மனித, பொருளாதார விலை அதிகமாக இருக்கப் போகிறது.'

**(தி ஹிந்து – ஹரோல்ட் ஹினெஸ், - பர்ஹாம்பூர், ஒரிசா)**

'தற்கொலை செய்து கொண்ட தென்னிந்திய நடிகைகளுக்கிடையே பொதுவான அம்சம் தெரிகிறது. அவர்கள் பெரும்பாலும் இரண்டாம் வரிசைக் கதாநாயகிகளாகவே இருக்கிறார்கள். முதல் வரிசைக்கு வரும் வாய்ப்பு இல்லை என்று கருதும்போது அவர்கள் தங்கள் மனச்சோர்விலிருந்து தப்ப இந்த வழியைத் தேர்ந்தெடுக்கிறார்கள் எனத் தோன்றுகிறது. இது தவறான முடிவு. கோலிவுட் இல்லாவிட்டால் என்ன, புகழ், பணம் ஆகிய இரண்டையுமே கொட்டித் தரும் ஃபாஷன் டிசைனிங், மாடலிங் போன்ற பல துறைகளில் அவர்கள் ஈடுபட்டுத் திருப்தி அடையலாமே.'

**(அவுட்லுக் - கே.எம்.ஜி. வெங்கட்ராமன், ஈ-மெயிலில்)**

'கடவுளுக்கு சாதி மதம் தெரியாது. சாதி மதம் ஒழிந்தால்தான் உலகம் உருப்படும்' என்று ஒரு விழாவில் கே.ஜே.ஜேசுதாஸ் கூறியதாகப் படித்தேன். மதம் இல்லையேல் சாதியுமில்லை. எனவே முதலில் மதம்தான் ஒழியவேண்டும். மத நல்லிணக்கக் கூட்டங்களில் வேறு வேறு மதத் தலைவர்கள் பேசும்போது 'எல்லா மதங்களும் ஒரே இறைவனைத்தான் பேசுகின்றன' என்று கூறுகிறார்கள். ஆனால் உன்ன[illegible]ான இந்தக் கருத்தைத் தம் [illegible] கூட்டங்களில் மறந்து[illegible] கூட உபதேசிக்க மாட்டார்கள். உலக மக்களை ரத்தத்தால் இறைவன் இணைத்திருந்தாலும் இந்த மதத் தலைவர்கள் தங்கள் சுயநலத்திற்காக மக்களைப் பிரித்தே வைக்கிறார்கள்.'

**(தினமணி - எம்.ராஜேந்திரன், கோவை)**

தொகுப்பு : **ஜி.எஸ்.எஸ்.**

# ஜெ. வாங்க விரும்பும் எஸ்டேட்!




"பத்திரிகை உலகத்தை ஆங்கிலத்தில் ஃபோர்த் எஸ்டேட் (fourth estate) என்று குறிப்பிடுவார்கள். இந்த எஸ்டேட்டையும் நாம் வளைத்துப் போட்டு விடலாம் என்ற எண்ணத்தில் பத்திரிகையாளர்களையும் பத்திரிகைகளையும் தமது அடக்குமுறை நடவடிக்கைகளால் முடக்கும் வேலையில் இறங்கியிருக்கிறார் ஜெயலலிதா'' என்று 'நந்தன்' இளவேனில் சொன்னபோது அரங்கத்தில் இலேசான சிரிப்பலை. அதில் கோபமும் பொதிந்திருந்தது என்று சொல்லத் தேவையில்லை.

நக்கீரன் இதழ் மீது தமிழக அரசு நடத்தும் தொடர் தாக்குதலைக் கண்டித்துப் பத்திரிகை சுதந்திரம் பாதுகாப்பு குழு சார்பாகச் சென்னையில் கூட்டம் நடந்தது. தமிழகத்தின் முன்னணிப் பத்திரிகையாளர்கள் அனைவரும் கலந்து கொண்டனர்.

"இது பக்கத்து வீட்டில் பிடித்திருக்கும் தீ. நமக்கெதுவும் ஆகாது என்று நாம் செயலற்று இருந்தால் தீ நமது வீட்டுக்கும் பரவும் ஆபத்து இருக்கிறது'' என்று எச்சரிக்கை விடுத்தார் மாலன். நக்கீரனுக்காக நீதிமன்றங்களில் தொடர்ந்து வாதிடும் வழக்கறிஞர் மோகன், நவம்பர் இருபதாம் தேதி நிருபர் சிவசுப்பிர மணியத்தைக் கர்நாடக மாநில அதிரடி போலீஸார் கடத்திப் போனதிலிருந்து நடந்த சட்டமீறல்களைப் பட்டியலிட்டார். ஒவ்வொரு வழக்காகப் பதிவு செய்து அதற்காக போலீஸ் கஸ்டடி எடுத்த பிறகு மற்றொரு பழைய வழக்கை தூசுதட்டி சிவசுப்பிரமணியம் மீது போடும் காவல் துறையின் நரித்தனத்தை அவர் எடுத்துச் சொன்னபோது "சே... இத்தனை இரக்கமற்றவர்களா?' என்று கூட்டம் முணுமுணுத்தது.

"சிறையிலிருந்து சிவசு எழுதிய கடிதத்தைப் பார்த்தேன். படிப்பதற்காக பரிமேலழகர் உரை கேட்டிருக்கிறார். தருமம் நிச்சயம் வெல்லும் என்று எழுதிய அவர் உறுதியைப் போற்றுகிறேன்'' என்ற கல்கி ராஜேந்திரன், தொடர்ந்து, "ஆட்சியாளர்களை நாம் விரோதி போல் பார்க்க வேண்டிய அவசியம் இல்லை; நட்புடன் இருந்து காரியங்களை சாதித்துக் கொள்ள வேண்டும்'' என்று அறிவுறுத்தினார்.

சிவசுப்பிரமணியம் விவகாரத்தில் பல வழக்குகள் கர்நாடகத்தில் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. ''சட்டம் தனது கடமைகளைச் செய்யட்டும். அதற்காக சட்ட மீறல்களையும், அதிகார துஷ்பிரயோகங்களையும் அனுமதிக்க முடியாது'' என்றார் என். ராம். கர்நாடக முதல்வரையும் தமிழக முதல்வரையும் பத்திரிகையாளர் குழு சந்திப்பதென்று முடிவு செய்யப்பட்டது. ''எல்லாவற்றையும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்க மாட்டோம்'' என்று ஆட்சியாளர்களைக் எச்சரிக்கும் விதத்தில் அமைந்த கூட்டம் நடந்த இரு தினங்களுக்குள், ராஜ்குமார் கடத்தல் வழக்கில் நக்கீரன் கோபாலை 'அக்யூஸ்ட்' ஆக்கியிருக்கிறது போலீஸ்!

— கௌசி



# "பிள்ளையாருன்னா யாரும்மா?"

"சுவாமிஜி, சிறு வயதில் ஒரு தடவை பிள்ளையார் சதுர்த்தியன்று, பிள்ளையார்னா யாரும்மா? என்று கேட்க, நான் யானை முகம் கொண்ட கடவுள். அவருக்கு இன்று பிறந்த நாள் என்று விளக்கினேன். சரஸ்வதி என்றால், படிப்புக்குரிய கடவுள். லட்சுமி, செல்வத்துக்குரிய கடவுள் என்றெல்லாம் விளக்குவேன்'' என்கிறார் ருக்மணி – சுவாமி சுகபோதானந்தாவின் அம்மாதான். அவர் சுவாமிஜி என்று குறிப்பிடுவது தம் மகன் சுகபோதானந்தாவைத்தான். சமீபத்தில் சென்னை வந்திருந்த அவரைச் சந்தித்தோம்.

''சுவாமிஜி பத்தாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தபோது, பெங்களூரில் நடந்த சுவாமி சின்மயானந்தாவின் சொற்பொழிவைக் கேட்க, அனுப்பி வைத்தார் என் கணவர். முதல் நாள் சின்மயானந்தாவின் சொற்பொழிவைக் கேட்டு விட்டு வந்ததுதான். அடுத்த நாள் முழுக்க, அவரைப் பற்றியும், அவர் சொன்ன கருத்துக்கள் பற்றியுமே பேசிக் கொண்டிருந்தார். தொடர்ந்த இரண்டு நாள் சொற்பொழிவுகளும், அவரை அப்படியே ஆட்கொண்டு விட்டன என்றால் மிகையில்லை.

"அதன்பின் சின்மயா மிஷன் நடத்திய இளைஞர் முகாம் ஒன்றில் சுவாமி தயானந்த சரஸ்வதியைச் சந்தித்துப் பேசும் வாய்ப்பு கிடைத்தது.

"சின்மயா மிஷனில், பிரம்மசாரியாக சேருவதற்கு, பட்டப் படிப்பு முடித்திருக்க வேண்டும் என்பது விதி. ஆனால், தயானந்த சரஸ்வதிக்கு, ஸ்வாமிஜியை மிகவும் பிடித்துப் போய், உடனடியாக ஆசிரமத்தில் சேரச் சொல்லிவிட்டார்.

"என் மகன் துவாரகாநாத், நித்ய சைதன்யா என சுவாமி தயானந்த சரஸ்வதியால் பெயர் சூட்டப்பட்டுப் பிரம்மசாரி ஆனார்.

"அங்கே கற்றுக் கொடுக்கப்பட்ட எல்லாவற்றையும் சட்டென்று கிரஹித்துக் கொண்டு, மிகச் சிறந்த மாணவன் என்று பாராட்டுப் பெற்றார்.

''அதன்பின் சில ஆண்டுகள் கழித்து தயானந்த சரஸ்வதியே, நித்ய சைதன்யாவுக்குச் சன்னியாசம் அளித்து, சுவாமி சுகபோதானந்தா என்று புதுப் பெயர் சூட்டினார்.

''மைசூரில் பல ஆண்டுகள் ஆன்மிகச் சொற்பொழிவுகளை நடத்திப் பிரபலமானார். ஆனால், தன் கூட்டங்களுக்கு, முதியவர்கள் தானே வருகிறார்கள், ஏன் இளையதலைமுறையினர் வருவதில்லை என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டு, விடை தேடவானார்.

"பிறகு, மைசூரிலிருந்து, பெங்களூர் வந்து பிரசன்னா டிரஸ்ட் என்கிற அமைப்பை உருவாக்கி, லைஃப் என்ற பெயரில் வாழ்வியல் பயிற்சி வகுப்புகளை நடத்த ஆரம்பித்தார். இதற்கு ஆதரவு பெருக ஆரம்பித்தது. இன்று அமெரிக்கா உட்பட பல்வேறு உலக நாடுகளுக்கும் சென்று பயிற்சி வகுப்புகள் எடுக்கிறார். சொல்கிற விஷயத்தை எளிமையாக, நகைச்சுவையாகச் சொல்லுவது சுவாமிஜியின் ஸ்பெஷாலிட்டி!

"தினமும் அதிகாலை மூணரை மணிக்கு எழுந்து விடும் ஸ்வாமிஜி, பொழுது புலரும் வரை பூஜை, தியானத்தில் ஈடுபடுவது வழக்கம். எனக்குத் தியானம் சொல்லிக் கொடுத்தது அவர்தான்! பதிலுக்கு நான் அவருக்கு, தமிழ் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கிறேன்."

— மௌலி

# தேவை: நிறையத்

**திருப்பூர் கிருஷ்ணன்**

உம்மணாமூஞ்சிகளின் எண்ணிக்கை அளவு கடந்து பெருகிவிட்ட காலம் இது. பேருந்தில் பயணம் செய்யும்போது சுற்றிலும் ஒரு பார்வை பாருங்கள். வீட்டிலிருந்து வரும்போதே ஒரு கரண்டி சிடுசிடுப்பை விழுங்கி விட்டு உட்கார்ந்திருக்கும் கடுகடு முகங்கள் தான் அதிகம்.

வாழ்க்கை இனிமையானது. கலபத்தில் கிட்டாதது. மலர்ச்சியாக வாழலாமே! எந்தச் சூழ்நிலையிலும் சந்தோஷமாக இருக்கப் பழகும் பயிற்சிதான் வாழ்க்கை என்கிறார் சுவாமி சிவானந்தர். நம் இறுக்கங்களையும் சிரமங்களையும் அடுத்தவர் மேல் காட்டுவதற்கு நமக்கென்ன உரிமை?

எப்போதுமே உற்சாகமாக உரையாடும் பலருடன் நான் பழகியிருக்கிறேன். என்றென்றும் ஏலக்காயாய் மனத்தில் மணக்கும், தேனாய் நெஞ்சில் தித்திக்கும் அந்த உரையாடல்களை எண்ணி எண்ணி மகிழ்கிறேன். மேடைப் பேச்சென்றால் அதன் நயங்களைப் பலரும் அனுபவிக்கலாம். உரையாடல் என்கிறபோது அதன் ஆனந்தம் இருவரோடு போய் விடுகிறது.

கதிர் ஆசிரியராயிருந்த அமரர் துமிலன் அப்படி உரையாடக் கூடியவர். பாடகர் மணக்கால் ரங்கராஜனின் மாமனார். அண்மையில் காலமான எழுத்தாளர் இரட்டு மணியின் அண்ணா.

துமிலன் கதிருக்கு ஆசிரியராக இருந்த போது அதில் நிறைய எழுதிக் கொண்டிருந்தார் இளைஞர் கி. கஸ்தூரி ரங்கன். காலம் ஓடியது. கதிருக்கு கஸ்தூரிரங்கனே ஆசிரியரானார். அப்போது கதிரில் நிறைய எழுதலானார் முதியவர் துமிலன். எண்பது தாண்டிய வயதில் சோர்வே இல்லாமல் அதிகப் பிரசங்கம் என்ற தலைப்பில் வாரந்தோறும் துமிலன் எழுதிக் குவித்தது ஆச்சரியந்தான். ('எண்பது வயதைத் தாண்டி நான் வாழ்வதே அதிகப் பிரசங்கம்தான்!' என்பார் துமிலன்.)

துமிலனுடைய உடலிருப்பைப் போல் குளுமையானது வேறெதுவும் இல்லை. ஜிலு ஜிலுவென்று உல்லாசமாய்ப் பேசும் கலையில் டாக்டர் பட்டம் தரலாம் அவருக்கு! அவரோடு ஒரு முறை விநாயகர் கோயிலுக்குப் போயிருந்தேன். அர்ச்சகரை அழைத்தார். 'சித்தப்பா விநாயகர் சந்நிதி எங்கே?' என்று அக்கறையாக விசாரித்தார்! ஆச்சரியப்பட்ட அர்ச்சகரிடம் விநாயகர் சந்நிதியின் மேலே எழுதியிருந்த வார்த்தைகளைக் காண்பித்தார். 'சித்தி விநாயகர் சந்நிதி'



• பி.பி. ஸ்ரீனிவாஸ்



• துமிலன்

என்று அதில் எழுதப்பட்டிருந்தது! பிரகாரத்தைச் சுற்றி வந்தோம். அங்கே இன்னொரு விநாயகர். அர்ச்சகரை அழைத்து 'இவருக்கு நிறையத் தண்ணீர் நிவேதனம் செய்யுங்கள்' என்றார். அங்கே மேலே 'விக்கின விநாயகர்' என்று எழுதப்பட்டிருந்தது!

நானும் துமிலனுமாக சாகித்ய அகாதமி கூட்டத்திற்குப் போனோம். தென்மொழிகளுக்கான கூட்டம். பி.பி.ஸ்ரீநிவாஸ் கடவுள் வாழ்த்து. பல்லவி தமிழில். அனுபல்லவி தெலுங்கில். இரண்டு சரணங்கள் - ஒன்று

மலையாளத்தில், ஒன்று கன்னடத்தில். பாட்டு முடிந்ததும் கூட்டம் வியந்து கைதட்டியது. தூமிலன் என் காதில் கிசுகிசுத்தார். 'அடடா! என்ன செய்வது! நாம் இப்போது நான்கு மொழிகளில் கைதட்டியாக வேண்டுமே!'

தூமிலனின் வயது கருதி அவரது 'அதிகப் பிரசங்கம்' பகுதியை வாங்க அலுவலகப் பணியாளரைத் தான் அவர் இல்லத்திற்கு அனுப்புவோம். ஒருமுறை அவரே நேரில் வந்தார். கரண்ட் நியூஸைச் சுடச்சுட வெளியிடும் தினமணி அலுவலகத்தில் அன்று கரண்ட் இல்லை. லிஃப்ட் இயங்கவில்லை. தூமிலன் கடகடவென்று மாடிப் படிகளில் ஏறி கதிர் அலுவலகம் இருக்கும் மூன்றாவது மாடிக்கு வந்துவிட்டார். 'கீழிருந்து ஃபோன் செய்தால் நான் வந்திருக்க மாட்டேனா? ஏன் இப் படிப் படியேறி சிரமப்படுகிறீர்கள்?' என்று கேட்டேன் ஆதங்கத்தோடு. 'என்னை யாரும் லிஃப்ட் பண்ணிவிட்டதில்லை. நான் படிப்படியாகத் தான் மேலே வந்தேன்!' என்றார் அவர்!

"கீழிருந்து ஃபோன் செய்தால் நான் வந்திருக்க மாட்டேனா? ஏன் இப்படிப் படியேறி சிரமப்படுகிறீர்கள்?' என்று கேட்டேன். 'என்னை யாரும் லிஃப்ட் பண்ணிவிட்டதில்லை. நான் படிப்படியாகத்தான் மேலே வந்தேன்!' என்றார் அவர்!"

தூமிலனின் எழுத்து சிறப்பாக இருக்கும்; ஆனால் அவர் கையெழுத்து படுமோசமாக இருக்கும். அவர் கையோடு கொண்டு வந்திருந்த அதிகப் பிரசங்கம் பகுதியில் ஒரு வார்த்தைச் சுத்தமாக என்னவென்றே புரியவில்லை. என்ன வார்த்தை இது என்று கேட்டேன் அவரிடம். 'என் கையெழுத்து எனக்குப் புரியவில்லை. அது உனக்குத் தான் புரிகிறது. ஆகையால் உன்னிடம் அது என்ன வார்த்தை எனக் கேட்டுக் கொள்ளலாம் என்றுதான் நேரில் வந்தேன்' என்றார் தூமிலன்!

நான் கதர் அணிபவன். தூமிலனும் கதர் அணிபவர். நாங்கள் இருவரும் லிஃப்டில் வந்து கொண்டிருந்தோம். தற்செயலாக அன்று லிஃப்ட் ஆபரேட்டரும் கதர் அணிந்து வந்திருந்தார். 'என்ன எல்லோருமே இன்றைக்குக் கதர் கதர் என்று கதறுகிறோம்' என்ற தூமிலன், ஆபரேட்டரைப் பார்த்து, 'கதர்தான் இந்த வெதருக்கு நல்லதென்று உங்கள் மதர் சொல்லிவிட்டார்களா?' என விசாரித்தார்!

தூமிலன் எண்பத்தைந்து வயதுக்கு மேல் நிறைவாழ்வு வாழ்ந்தார். அவர் எல்லோரையும் நேசித்தார். எனவே அவரையும் எல்லோரும் நேசித்தார்கள். புளிபோட்டுத் துலக்கிய தாமிரப் பாத்திரத்தில் ஆறின வெந்நீரை விட்டு இரண்டு துளசி இலைகளையும் போட்டு வைத்து விடுவார். அந்தத் தண்ணீர் உடம்புக்கு நல்லதென்று அதைத்தான் பருகுவார். பதினாறு வயதுப் பையனுக்குரிய உற்சாகத்தோடு இறுதி

# தூமிலன்கள்!

வரை வாழ்ந்தவர் அவர்.

பணம், பதவி, புகழ் இவையெல்லாம் வாழ்க்கைக்குத் தேவைதான். ஆனால் இவையே வாழ்க்கையல்ல. வாழ்வின் நோக்கம் சந்தோஷமாக இருப்பது மட்டுமே. சந்தோஷமாக இருப்பதென்பது தொடர்ந்து செய்யப்பட வேண்டிய ஒரு வகையான மனப் பயிற்சி. உம்மணா மூஞ்சிகள் சந்தோஷத்தைத் தொலைத்துவிடுகிறார்கள். தூமிலனைப் போன்றவர்கள் காலை எழுந்ததுமே சிரிப்பு விட்டமின் மாத்திரைகள் இரண்டைத் தாங்கள் வாயில் போட்டுக் கொண்டு செல்லுமிடமெல்லாம் மற்றவர்களுக்கும் விநியோகிக்கிறார்கள். நகைச்சுவை என்ற உப்பைச் சேர்த்துக் கொள்ளாவிட்டால் வாழ்க்கைச் சமையல் ஒரு போதும் ருசிப்பதில்லை. இன்று நமக்குத் தேவை நிறையத் தூமிலன்கள்.

# ஜோக் கணேசா

ஜன்னல் வழியாகப் பார்த்தபோது கணேசன் வருவது தெரிந்தது. அப்பொழுது தான் அலுவலகம் நுழைந்து மேஜை, நாற்காலியைத் துடைக்க ஆரம்பித்தேன். அதற்குள் இவனும் வந்தாயிற்று. ஏதோ ரெகுலராக ஆபீஸ் கிளம்பி வருவதுபோல் வந்து கொண்டிருந்தான்.

பதினொரு மணிக்கு மேல் வந்தால் ஊருக்கு ஒதுங்கிய அந்த இடத்தில் ஒரு டீ கூடக் கிடைக்காது என்று ஒருமுறை சொல்லியிருந்தேன். அதைப் பிடியாய்ப் பிடித்துக் கொண்டு, அதற்குப் பிறகு இப்படி வர ஆரம்பித்திருந்தான். (வந்து போவதே வெட்டி வேலை. இதில் டீ வேறு)

அடிக்கடி அவன் வருவதைப் பார்த்த ஆபீஸ் நண்பர்கள் தவறாமல் வணக்கம் சொல்ல ஆரம்பித்தார்கள் அவனுக்கு.

"குட்மார்னிங்..."

"வெரி குட்மார்னிங்...?" இது கணேசனின் பதில் வணக்கம்.

"நல்லாயிருக்கிங்களா சார்.." என்பவர்களுக்கு "ஃபைன்..." என்ற உற்சாக பதில் வேறு.

இதிலொன்றும் குறைச்சலில்லை என்று நினைத்துக் கொண்டேன் நான். ஆளைப் பார்த்தால், ஏதோ பெரிய நிறுவனத்தில் பணிபுரிபவன் போன்று மிடுக்கான தோற்றம். ஆனால் வேலை வெட்டி எதுவுமில்லாத வெறும் பயல் என்று எனக்குத் தானே தெரியும்.

அப்படி என்ன தலைபோகிற விஷயம் இருக்கிறது? அவ்வளவு தூரம் பஸ்ஸுக்குக் காக செலவழித்து, என்னை அவன் சந்திக்க வேண்டும் என்ற அவசியமே இல்லை. சாயங்காலம் கோர்ட் ஸ்டாப்பில் நின்றாலே போதும் சந்தித்துக் கொள்ளலாம். ஸ்பெஷலாக வேறு எந்த விஷயமும் இருக்கப் போவதில்லை. பிறகு எதற்கு இத்தனை அலைச்சல்?

"என்ன சார் விஷயம்? பார்த்து நாளாச்சு..." என்பான்.

கடந்துபோன வியாழன் அல்லது வெள்ளிதான் வந்துவிட்டுப் போயிருப்பான். சனி, ஞாயிறு விடுமுறை கடந்து இன்று திங்கள் என்ன பெரிய நாளாச்சு? என்று தோன்றும் எனக்கு.



வந்ததும் வராததுமாக "அந்தத் தண்ணீர் பாட்டிலை எடுங்க..?" என்பான். கடகடவென்று வாயைத் திறந்து ஊற்ற ஆரம்பித்து விடுவான். தண்ணீர் மாலை வரை வேண்டுமே என்று தோன்றும் எனக்கு.

இதையறியாதவனாய், வாயைப் புனல்போல் திறந்து ஊற்ற ஆரம்பிப்பான் கணேசன். நான் சொல்ல முடியாமல் தயக்கமாய்ப் பார்ப்பேன். பியூன் ரெங்கசாமி ஓரமாய் நின்று எனது இந்த அவஸ்தையை ரசிப்பான்.

"உங்க ஃப்ரண்டுதான சார், எனக்குப் பச்சைத் தண்ணி ஒத்துக்காது. கொஞ்சமாகக் குடிங்கன்னு சொல்லிட வேண்டியது தானே?" என்றான்.

"என்னத்தச் சொல்றது?" என்றேன் நான் அலுப்போடு.

ஏதோ உறுத்தியவன்போல் கேட்டேவிட்டான் ரங்கசாமி.

"அவரு எங்கே சார் வேலை பார்க்கிறாரு?"

"ஆல் இன்டியா ரேடியோவுல இருக்காருப்பா..." என்றேன் நான்.

"அப்படியா சார்?" என்றான் அதிசயித்தவனாய். அதற்குமேல் நுட்பமாய்க் கேட்கத் தெரியவில்லை அவனுக்கு.

● உஷா தீபன்



"ஏன் சார்.... நம்மள ஒரு நாளைக்குக் கூட்டிக் கொண்டு போய் காண்பியுங்களேன் சார்..." என்று சொல்லிக் கொண்டிருந்தான் கணேசனிடம் ஒரு நாள்.

"அடுத்த புரோகிராமின்போது சொல்றேன்" என்று கெத்தாகப் பதில் சொன்னான்.

"நாளைக்கு ரிக்கார்டிங் இருக்கு.." என்று ஒரு நாள் அவன் என்னிடமே புருடா விட்டபோதுதான் நானே சுதாரித்தேன்.

ஏனென்றால் அவன் சொன்ன "நாளை" அன்று, எனக்கும் ஏ.ஐ.ஆர்.ல் ஒரு ரிக்கார்டிங் இருந்தது.

"போன மாசம்தானே அவர் புரோகிராம் முடிஞ்சிது. மூணு மாசத்துக்கு ஒரு தடவை தானே?" என்று நிகழ்ச்சி தயாரிப்பாளர் சொன்னபோதுதான் என்னிடமே ஏன் இப் படிப் புளுகுகிறான்? என்று தோன்றியது எனக்கு.

**க**ணேசன் ஒரு வானொலி நிலைய ஆர்டிஸ்ட். ரேடியோ நாடகங்களால் டாக்டர், எஸ்.ஐ. அண்ணன், தம்பி, அப்பா, இருமல் தாத்தா என்று பல கதாபாத்திரங்களில் அவன் குரலை நான் கேட்டிருக்கிறேன். (எல்லாமே கணேசன் என்று அப்பட்டமாகக் காட்டிக் கொடுத்து விடும் என்பது வேறு விஷயம்.) மூன்று மாதத் திற்கொரு முறை இது வருவாய் அவனுக்கு.

**க**ணேசனுக்கு வேலை என்று ஒன்று இல்லை. உபாயமாய் எங்கேயாவது ஆயிரம் ஆயிரத்தைந்நூறு என்று கிடைக்கும் வேலையும் மூன்று மாதம், ஆறு மாதம் என்று அற்ப ஆயுளில் முடிந்து போகும்.

ஜாப் டைப்பிங், கம்ப்யூட்டர் சென்டர், சேல்ஸ்மேன், உரக் கம்பெனி, வக்கீலிடம் டைப்பிஸ்ட் என்று நிறைய வேலைகளை அவனும் பார்த்திருக்கிறான்.

ஆனால் எதுவும் தங்காது. ஒன்று அது நிரந்தரமானதாய் இருக்காது. அல்லது இவன் அதை உதறிவிடுவான். அவன் பொழுதும் இப்படியே கழிந்தது.

"உரக்கம்பெனி வேலையை விட்டுட்டேன் சார்..." என்றான் ஒருநாள்.

"ஏன்?" என்றபோது, "அந்தத் தூசி ஒத்துக்கலை சார். இழுப்பு வருது.. சரிப்படலை.." என்றான் அலட்சியமாக.

சரி, வக்கீலிடம் டைப்பிஸ்டாகச் சேர்ந்திருக்கிறானே, அது ஓடும் என்று பார்த்தால் ஒரு வாரம் கூட நிலைக்கவில்லை.

"ஏன், என்னாச்சு? ஓர்க் ஜாஸ்தியோ?"

என்று சந்தேகக் கேள்வி போட்டேன்.

"அப்டின்னாக்கூடப் பரவாயில்லையே சார்! வேலைக்கு அஞ்சறவன் இல்லியே நான்.. (அப்படித் தெரியலையே?) காசு விஷயத்துல சந்தேகப்படறாரு சார் அந்த வக்கீல். சம்பளத்துலே பிடிச்சிட்டு ஆளவிடுங்கன்னு வெளியேறிட்டேன்." என்றான் விறைப்பாக.

எனக்கு என்ன சொல்வது? எப்படிச் சொல்வது என்றே புரியவில்லை. இவனுக்கென்று காரணங்கள் எப்படி முளைக்கின்றன.

"சார்... உங்க ஃப்ரெண்ட் வர்றாரு.. காபி சொல்லட்டுமா?"

வாட்ச்மேன் லட்சுமணனின் குரல் வெளியிலிருந்து கேட்டது.

அதற்குள் கணேசன் உள்ளே நுழைந்து விட, "வாங்க, வாங்க..." என்றவாறே "காபியா, டீயா?" என்றேன்.

"ஃபில்டர் காபியா?" என்றான் கணேசன்.

"ஏன்? இன்ஸ்டன்ட்ன்னா, குடிக்க மாட்டீங்களோ?" நான் பதிலுக்கு.

"பிடிக்காதா?" என்று கொஞ்சம் சாஃப்டாகக் கேட்டிருக்கலாம். வாயில் வந்து விட்டது அப்படி.

"டீயே போதும்." என்றான் கணேசன். என் முகத்தைச் சற்றுக் கூர்மையாகப் பார்த்தவாறே.

"ரெண்டு வடையும் வாங்கிட்டு வாங்க லெட்சுமணன்." என்றேன். கணேசனின் முகம் மலர்ந்தது.

டீ வந்தவுடன் வடையையும் அதையும் ஒரு பிடிபிடித்துவிட்டு ஆரம்பித்தான் கணேசன்.

"சார், கல்யாணம் பண்ணிக்கலாம்னு இருக்கேன்.. ஒரு எம்ப்ளாய்ட் கேர்ல் ஜாதகம் வந்திருக்கு. பொருந்தியும் இருக்கு. அதைச் சொல்லிட்டுப் போகலாம்னுதான் வந்தேன்..."

நான் அதிர்ந்து போனேன்.

"என்ன கணேசன் திடீர்னு?"

"ஆமா சார். எம்ப்ளாய்ட் பெண்ணா இருந்தா - வர்ற வருமானத்துல - கொஞ்சம் சேர்த்து வச்சு - ஏதாச்சும் பிஸினஸ் ஆரம்பிக்கலாம்னு ஒரு திட்டம். அதான் யோசிச்சேன். முடிவு பண்ணிட்டேன்.."

"உங்களுக்கு வேலையில்லையே, அவுங்க எப்படி சம்மதிச்சாங்க...?"

"காரணம் இல்லாமலா சார்..? பெண்ணுக்கும் வயசாயிடுச்சு. முப்பத்தைஞ்சு இருக்கும்."

"முதல்லே உங்களுக்கு ஒரு வேலையைத் தேடிக்கிட்டீங்கன்னா நல்லது. கல்யாணமெல்லாம் சரியா வருமா? நல்லா யோசிச்சிக்குங்க." என்றேன் சுருக்கமாக.

"வர்றேன் சார்" என்று விட்டுச் சட்டென்று கிளம்பிவிட்டான். கோபமாய்ப் போகிறான் போலிருந்தது.



"உங்க படத்துக்குக் காதல் வசனம் எழுத இவரைப் பயன்படுத்திக்கலாம்!"

"இதுக்கு முன்னால என்ன செஞ்சுட்டு இருந்தார்..?"

"காலேஜ் பக்கத்துல டெலிபோன் பூத் வெச்சிருந்தார்...!"

- சோழபுரம் யாக்கோப்

ஒரு மாதம் கழிந்த பொழுது... அன்றாடப் பணிகளினால் அடியோடு கணேசனை மறந்து போயிருந்தேன்.

அன்று விடுமுறை நான். கையில் காபியோடு வாசல் திண்ணைக்கு வந்த நான், கீழே வீசியெறியப்பட்டிருந்த தினசரியை எடுத்துக் கொண்டு சாவதானமாய் அமர்ந்தேன். வரிசையாய்ப் படித்துக் கொண்டே வந்து கொண்டிருந்த எனது கண்கள் அந்தக் குறிப்பிட்ட இடத்தில் நிலைகுத்தி நின்றன. என்னால் நம்பவே முடியவில்லை அதை. கணேசனா இது?

கண்களை நன்றாகத் தேய்த்து விட்டுக் கொண்டு பார்த்தேன் நான். சந்தேகமேயில்லை. அது கணேசன்தான்.

"வாழ்த்துகிறோம்" என்ற தலைப்பில் அந்த விளம்பரம் காணப்பட்டது அங்கே. கணேசனும், பெண்ணும் மாலையும் கழுத்துமாய் மணமக்கள் கோலத்தில்.

அதற்குக் கீழே -

"பார்வையற்ற பெண்ணை மணந்த இலட்சிய இளைஞர்." - என்ற தலைப்பில் ஒரு பெட்டிச் செய்தி. பல நகரப் பிரமுகர்களின் வாழ்த்துக்களோடு இடம் பெற்றிருந்தது! ●

# சிவகாமியின் சபதம்

முப்பத்து ஐந்தாம் அத்தியாயம்

## "கள்வரோ நீர்?"

மறுநாள் மாலை நேரத்தில் மண்டபப் பட்டுக் கிராமத்துச் சிவன் கோயில் கண் கொள்ளாக் காட்சி அளித்துக்கொண்டிருந்தது. கோயிலின் முன் கோபுர வாசலைப் பசுமையான வாழை மரங்களும், மகர தோரணங்களும், திரைச் சீலைகளும் அலங்கரித்தன.

உள்ளே அர்த்த மண்டபத்தையும் வெளிக்கோபுரத்தையும் சேர்த்துப் பிராகாரத்தில் விஸ்தாரமான பந்தல் போட்டிருந்தார்கள். பந்தல் முனைகளில் வரிசை வரிசையாகத் தந்த வர்ணமுள்ள இளந்தென்னங் குருத்துத் தோரணங்களும் அவற்றின் இடையிடையே செந்தாமரை மொட்டுக்களும் தொங்கிக் கொண்டிருந்தன.

அந்த நாளில் தமிழ்நாட்டில் நீர்வளமுள்ள ஒவ்வொரு கிராமத்திலும் தாமரைக்குளம் உண்டு. குளத்திலே தண்ணீர் இருப்பதே தெரியாதவண்ணம் தாமரை இலைகளும் மலர்களும் மொட்டுக்களும் நிறைந்திருக்கும். எனவே, கோயில் விக்கிரகங்களுக்கு வேறு அபூர்வ புஷ்பங்களைச் சாத்திவிட்டு தாமரை மொட்டுக்களையும் மலர்களையும் கோயிலின் அலங்காரத்துக்கு உபயோகப் படுத்துவார்கள்.

இவ்விதம் அமோகமாக அலங்கரிக்கப்பட்டிருந்த கோயிலில், அஸ்தமிப்பதற்கு முன்னால் ஊர் ஜனங்கள் எல்லாரும் வந்து கூடிவிட்டார்கள். ஸ்திரீகள், குழந்தைகள் ஒருவரும் மிச்சமில்லாமல் வந்து அவரவர்களும் போட்டியிட்டு முன்னால் இடம் பிடித்துக்கொண்டு உட்கார்ந்தார்கள்.

சூரியன் அஸ்தமித்ததும் நூற்றுக்கணக்கான அகல் விளக்குகள் ஏற்பட்டு, ஆலயம் ஒளிமயமாக விளங்கிற்று. அதேசமயத்தில் சிவகாமி தேவியின் திவ்ய நடனத்தைப் பார்ப்பதற்காகவே விஜயம் செய்கிற

அமரர் கல்கி

வனைப்போல் பூரண சந்திரனும் உதயமானான்.

ஆயனரும் சிவகாமியும் கோயிலின் கோபுர வாசலுக்குள்ளே பிரவேசித்ததும் கூட்டத்தில் கலகலப்பு உண்டாயிற்று.

பந்தலுக்குத் தென்புறத்தில் அமைந்திருந்த அரங்க மேடையிலே வந்து, சிவகாமி நின்றதும் கூட்டத்தில் நிசப்தம். ஸ்திரீகளும் பேச்சை நிறுத்தினார்கள். அழுத குழந்தைகளும் வாய் மூடின.

அந்த மண்டபப்பட்டுக் கிராமத்து ஜனங்கள் அதுவரையில் அம்மாதிரி கண் கூசும்படியான திவ்ய சௌந்தரியத்தைக் கண்டதில்லை.

சிவகாமியின் நடன அலங்காரமும் அணிகலன்களும் அவளுடைய முகத்தில் அப்போது பிரகாசித்த தெய்வீகக் களையும் கிளர்ச்சியும் பார்த்தவர்களைத் திகைக்கச் செய்தன.

ஆரம்பத் திகைப்பு ஒருவாறு மாறியதும் ஒருவருக்கொருவர் தங்களுடைய வியப்பைத் தெரிவித்துக் கொள்ள ஆரம்பித்தார்கள்.

"தேவலோகத்து நடன மாதர்களான அரம்பை, ஊர்வசி முதலியவர்கள் இப்படித்தான் இருந்திருக்க வேண்டும்!" என்றார் ஒருவர்.

"ஒருநாளும் இல்லை. அவர்கள் இவ்வளவு அழகாக ஒருநாளும் இருந்திருக்க முடியாது!" என்றார் இன்னொருவர்.

"இந்தப் பெண்ணுடனே அந்தத் தேவலோக கணிகையரை ஒப்பிடுவது பிசகு. தில்லையம்பலத்தில் நடராஜப் பெருமானுக்குப் போட்டியாக நடனமாடிய சிவகாமி தேவியேதான் இப்படி அவதாரம் எடுத்து வந்திருக்கிறாள்!" என்று ஒரு பக்தர் கூறினார்.

"இல்லாமலா, நாவுக்கரசர் பெருமான் அவ்வளவு பாராட்டினார்!" என்று இன்னொரு பக்தர் பரவசமாகச் சொன்னார்.

பளிச்சென்று சொல்லி வைத்தாற்போல் சபையிலே மறுபடியும் பரிபூரண நிசப்தம் ஏற்பட்டது.

சிவகாமி நடனமாட ஆரம்பித்து விட்டாள்!

ஆயனரின் கரதாளத்துக்கும் அவர் பாடிய ஸ்வரஜதிகளுக்கும் இணங்கச் சிவகாமி ஆடினாள்!

உள்ளூர் மத்தள வித்வான் ஒருவர் வாணாளில் என்றுமறியாத உற்சாகத்துடன் மத்தளம் வாசித்தார்.

'கும் கும்' என்னும் மத்தளச் சப்தத்தோடு கலந்து, பாதச் சதங்கை ஒலி 'கல் கல்' என்று சப்திக்கச் சிவகாமி நிருத்தம் ஆடினாள்.

அந்த நிருத்தத்தில் மின்னலின் விரைவு காணப்பட்டது. மான்குட்டியின் துள்ளல் தோன்றியது; கான மயிலின் சாயல் விளங்கியது.

சில சமயம் சிவகாமி பூமியிலே நின்று ஆடினாள்; சில சமயம் வானமண்டலத்துக்குச் சென்று வெண்மதியின் கிரணங்களில் ஆடினாள். சில சமயம் நட்சத்திர மண்டலத்துக்கே சென்று விண்மீன்களின் மத்தியில் பம்பரம் போலச் சுழன்று ஆடினாள்.

சிவகாமி அவ்விதம் சுழன்றாடியபோது பார்த்துக்கொண்டிருந்தவர்களின் கண்கள் சுழன்றன; அரங்க மேடையும் அகல் விளக்குகளும் சுழன்றன. கோயில் சுழன்றது; கோபுரங்கள் சுழன்றன; தூங்கானை மாடத்துத் தங்க ஸ்தூபி சுழன்றது; வானமும் பூமியும் கீழ் மேலாகச் சுழன்றன; சந்திரனும் நட்சத்திர மண்டலங்களும் சுழன்று சுழன்று வந்தன.

இவ்விதம் வெவ்வேறு காலப் பிரமாணங்களில், வெவ்வேறு ஜதிகளில் விதவிதமான நிருத்த வகைகளை ஆடிச் சபையோரைக் கிறுகிறுக்க அடித்த பிறகு, சிவகாமி சிறிது நேரம் சிரம பரிகாரம் செய்து கொள்வதற்காக மேடைக்குப் பின்புறம் சென்றாள். அப்போது சபையில் பிரமாதமான ஆரவாரம் எழுந்தது.

ஆயனரின் அரண்ய வீட்டில் எட்டு மாதம் இருந்தும் சிவகாமியின் நடனத்தைப் பார்த்தறியாதவனான குண்டோதரனும் மற்றச் சபையினரைப் போலவே பரவசமடைந்து போயிருந்தான். நடனம் நின்ற பிறகும் அவன் தன்னை மறந்த நிலையிலேயே இருந்தபடியால், பக்கத்திலிருந்த மாமல்லரைப் பார்த்து, "பிரபு..." என்று ஆரம்பித்தான். மாமல்லரும் சிவகாமியின் நடனத்தில் பூரணமாய் ஈடுபட்டிருந்தாராயினும், அவர் தம்மையும்

தமது சுற்றுப்புறத்தையும் மறந்துவிடவில்லை. எனவே, குண்டோதரன் 'பிரபு' என்றதும் அவர் அவனை ஒரு குலுக்குக் குலுக்கினார். அதற்குள் பக்கத்திலிருந்த ஐந்நூறு பேரின் கவனமும் குண்டோதரனின் மேல் விழுந்திருந்தது. மாமல்லரின் குலுக்கலினால் தனது நினைவு அடைந்த குண்டோதரன், சுவாமி சந்நிதியை நோக்கி, "பிரபு...! இந்தத் தெய்வீக நடனம் உனக்குத்தான் பிரீதி!" என்று பக்திப் பரவசம் ததும்பிய குரலில் கூறி முடித்தான். "சந்தேகம் என்ன? இறைவனுக்குத்தான பிரீதி!" என்று பக்கத்திலிருந்தவர்களும் ஆமோதித்தார்கள்.

சிவகாமி மீண்டும் அரங்க மேடைக்கு வந்து அபிநயம் பிடிக்கத் தொடங்கினாள். திருநாவுக்கரசர் பெருமானின்,

"வடிவேறு திரிசூலம்
தோன்றும் தோன்றும்
வளர்சடைமேல் இளமதியும்
தோன்றும் தோன்றும்"

என்னும் பாடலுக்குச் சிவகாமி



அபிநயம் பிடித்தபோது, சபையோர் சாக்ஷாத் சிவ பெருமானையே நேருக்கு நேர் தரிசித்தவர்களைப் போல் ஆனந்த வாரிதியில் மூழ்கினார்கள். பின்னர், "முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்" என்னும் திருப்பாடலுக்குச் சிவகாமி அபிநயம் பிடிப்பாள் என்று எல்லாரும் எதிர்பார்த்ததற்கு மாறாகச் சிவகாமி பின்வரும் பாடலைப் பாடி அபிநயம் பிடிக்கத் தொடங்கினாள்:

**வெள்ளநீர்ச் சடையனார் தாம்**
**வினவுவார் போலவந்தென்**
**உள்ளமே புகுந்து நின்றார்க்கு**
**உறங்குநான் புடைகள்போந்து**
**கள்ளரோ புகுந்தீர் என்னக்**
**கலந்துதான் நோக்கிநக்கு**
**வெள்ளரோம் என்று நின்றார்**
**விளங்கிளம் பிறையனாரே!**

ஓர் அறியாப் பெண்ணின் உள்ளமாகிய இல்லத்தினுள்ளே வெள்ள நீர்ச் சடையனாராகிய சிவபெருமான், ஏதோ விசாரிக்க வருகிறவர் போல வந்து பிரவேசிக்கிறார். தூங்கிக்கொண்டிருந்த பெண் திடுக்கிட்டு எழுந்திருக்கிறாள். கண்ணைக் கசக்கிக்கொண்டு பார்க்கிறாள். யாரோ முன்பின், அறியாதவர் எதிரில் நிற்பதைக் கண்டு, "ஐயா! இப்படிச் சொல்லாமல் கொள்ளாமல் என் உள்ளத்திலே புகுந்த நீர் யார்? கள்ளரா?" என்று வினவுகிறாள். அப்போது, வந்தவர் கண்ணோடு கண் கலக்கும்படி அந்தப் பெண்ணை உற்றுப் பார்க்கிறார். பார்த்துவிட்டு நகை செய்கிறார். அந்த நகைப்போடு கலந்து, "நானா கள்ளன்? கள்ளத்தனமென்பதே அறியாத வெள்ளை மனத்தவனாயிற்றே? அதற்கு அறிகுறியாக என் மேலேயும் வெண்ணீறு பூசியிருக்கிறேன், தெரியவில்லையா?" என்கிறார். வானத்திலே விளங்கிய இளம் பிறையைத் திருடித் தம் சிரசிலே அணிந்து கொண்ட பெருமான்தான் இப்படி ஒன்றும் தெரியாதவர் போல் நடித்தார்! ஆகா! அந்த இளம்பிறையின் அழகைச் சொல்வேனா? அவருடைய கள்ளத்தனத்தைச் சொல்வேனா? அல்லது கள்ளமற்றவர் போல அவர் நடித்த நடிப்பைச் சொல்வேனா...?

மேற்கூறிய இவ்வளவு உள்ளப் பாடுகளும் வெளியாகும்படியாகச் சிவகாமி தன் முகபாவங்களினாலும், அங்கங்களின் சைகைகளினாலும் கைவிரல்களின் முத்திரையினாலும் உணர்ச்சியோடு கலந்து அற்புதமாக அபிநயம் பிடித்தாள்.

பாடலும் அபிநயமும் சபையோருக்கு எல்லையற்ற குதூகலத்தை அளித்துப் பலமுறை 'ஆஹா'காரத்தை வருவித்தது. ஆனாலும் சபையோர்கள் திருப்தியடைந்தவர்களாகக் காணவில்லை. அவர்களில் ஒருவர், துணிந்து எழுந்து, அரங்கமேடைக்குச் சென்று, ஆயனர் காதோடு ஏதோ சொன்னார். அது சிவகாமியின் செவியிலும் விழுந்தது. சிவகாமி சிறிது தயக்கத்துடனேயே,

"முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்!"

என்று பாடிக்கொண்டு அபிநயம் பிடிக்க ஆரம்பித்தாள். எவ்வளவோ நிறைமையுடனே, விதவிதமான உள்ளப் பாடுகள் அற்புதமாக வெளியாகும்படி அபிநயம் பிடித்தாள்.

பாட்டும் அபிநயமும் முடியும் தருவாயில் சபையிலே பலருக்கு ஆவேசமே வந்துவிட்டது.

வயது சென்ற ஒரு கிழவர் எழுந்து நின்று, "நடராஜா! நர்த்தன சுந்தர நடராஜா!" என்று பாடிக்கொண்டே ஒரு காலைத் தூக்கியவண்ணம் சபையிலே நடனமாடத் தொடங்கிவிட்டார்.

"இம் மாதிரி உணர்ச்சி வாய்ந்த அபிநயத்தை இதுவரையில் யாரும் பார்த்ததில்லை; இனிமேல் பார்க்கப் போவதும் இல்லை" என்று சபையோர் ஒருவருக்கொருவர் கூறி மகிழ்ந்தார்கள்.

ஆனால், இன்று அந்தப் பாடலுக்கு அபிநயம், காஞ்சியில் நாவுக்கரசர் பெருமான் சந்நிதியில் அமைந்தது போல் அவ்வளவு உணர்ச்சியுடன் அமையவில்லையென்று மூன்று பேருக்கு மட்டும் தெரிந்திருந்தது. அந்த மூவர் ஆயனர், மாமல்லர், சிவகாமி ஆகியவர்கள்தான்.

சிவகாமி இன்றைக்கு அபிநயத்தின் முடிவில் மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்து விடவும் இல்லை!

முப்பத்து ஆறாம் அத்தியாயம்

## புதிய பிறப்பு

மண்டபப்பட்டுக் கிராமத்துக்கு வந்து சேர்ந்த மூன்றாம் நாள் சாயங்காலம் ஆயனர், சிவகாமி, மாமல்லர் ஆகிய மூவரும் கிராமத்துக்கு வெளியே உலாவி வரக் கிளம்பினார்கள். பாறையில் படகு மோதி, அவர்கள் நீரில் மூழ்கிய இடத்துக்கு வந்து





சேர்ந்தார்கள்.

வெள்ளம் இன்றைக்கு - ரொம்பவும் வடிந்து போயிருந்தது. அன்று தண்ணீரில் மூழ்கியிருந்த இடங்களில் இன்று நீர் வடிந்து பாறைகள் நன்றாய்த் தெரிந்தன. கரையோரத்து மரங்கள் அன்று பாதிக்கு மேலே வெள்ளத்தில் மூழ்கியிருந்தன. இன்றைக்கு அதே மரங்களின் வேரின் மீது தண்ணீர் 'சலசல'வென்று அரித்தோடிக் கொண்டிருந்தது. பாறைப் பிரதேசமாதலால் வெள்ளத்திற்குப் பிறகு இடங்கள் வெகு சுத்தமாயிருந்தன.

அந்தப் பாறைகளைச் சுற்றி சுற்றி வந்து பார்ப்பதில் ஆயனர் அடங்காத ஆர்வம் கொண்டவராயிருந்தார். இந்தந்தப் பாறையை இன்னின்ன மாதிரி கோவிலாக அமைக்கலாம், இன்னின்ன சிற்ப வடிவங்களாகச் செய்யலாம் என்று அவர் உள்ளம் கற்பனை செய்துகொண்டிருந்தது.

சிவகாமியும் மாமல்லருமோ, மகிழ

மரத்தடியில் பாறையின் மீது உட்கார்ந்து மௌனம் சாதிப்பதில் அடங்காத பிரியம் கொண்டவர்களாகத் தோன்றினார்கள்.

பகலும் இரவும் மயங்கிக் கலந்திருந்த அந்த நேரத்தில், ஆயனர் அரை மனதாக "போகலாமா, சிவகாமி?" என்று கேட்டார்.

"அப்பா! இன்றைக்கு இருட்டி இரண்டு நாழிகைக்குப் பிறகு, சந்திரோதயம் ஆகு மல்லவா? அதைப் பார்த்துவிட்டுப் போலாமே?" என்றாள் சிவகாமி.

"அதற்கென்ன, அப்படியே செய் யலாம்!" என்று கூறி ஆயனர் அவர்களுக்கு அருகில் தாமும் உட்கார்ந்தார்.

சற்று நேரம் மௌனம் குடிகொண் டிருந்தது.

"இந்த ஊரை விட்டுப் போகவே எனக்கு மனம் வராதென்று தோன்றுகிறது!" என்றார் ஆயனர்.

"இந்த ஊர் அதிர்ஷ்டம் செய்த ஊர், கிராமவாசிகள் சொன்னார்களே, அது உண்மைதான்!" என்றார் மாமல்லர்.

"ஏன் அப்பா, அவ்வளவு தூரம் இந்த ஊர் உங்களுக்குப் பிடித்துவிட்டதின் கார ணம் என்ன?" என்று சிவகாமி கேட்டாள்.

"இந்தப் பாறைகளைப் பார்க்கும்போது, எனக்கு ஆசையாயிருக்கிறது. திவ்வியமான கோயில்கள் அமைப்பதற்குக் கை ஊறு கிறது."

"இன்னும் எத்தனையோ ஊர்களிலே யும் பாறைகள் இருக்கின்றன!" என்றாள் சிவகாமி.

"இந்தக் கிராமவாசிகள் நல்ல ரஸிகர்கள். நேற்று உன் நடனத்தைப் பார்த்து எவ் வளவு ஆனந்தப்பட்டார்கள்!"

"ஐயா! காஞ்சியில் ரஸிகர்கள் இல்லை யென்று கூறுகிறீர்களா?" என்று மாமல்லர் பொய்க் கோபத்துடன் கேட்டார்.

"மகேந்திர பல்லவரும் அவருடைய திருக்குமாரரும் இருக்கும் காஞ்சியில் ரஸி கர்கள் இல்லாமற் போய் விடுவார்களா? – அந்த எண்ணத்துடன் நான் சொல்ல வில்லை. எங்கேயோ போகலாமென்று யாத்திரை கிளம்பியவர்களைக் கடவுளே பார்த்து இந்த ஊரில் கொண்டு விட்டிருக் கிறார். நாங்கள் இங்கேயே இருப்பதுதான் இறைவனுடைய சித்தம் என்று தோன்று கிறது!"

"அப்பா! நாகநந்தி பிக்ஷு வெள்ளம் வந்த இரவு போனாரே, அவர் என்ன ஆகி யிருப்பார்?" என்று சிவகாமி கேட்டாள்.

"ஐயோ! பாவம்! என்ன ஆனாரோ தெரியவில்லை. அந்த வயோதிக பிக்ஷுவின் கதியும் என்ன ஆயிற்றோ, தெரியவில்லை!"

அப்போது மாமல்லர் தம்முடன் வந்த சைனியத்தின் கதி என்ன ஆயிற்றோ என்று நினைத்தார். குண்டோதரன் படகு சம் பாதித்துக்கொண்டு வருவதாகச் சொல்லி விட்டு காலையிலேயே போனவன், இன்னும் ஏன் திரும்பி வரவில்லை...?

சற்று நேரத்துக்கெல்லாம் கீழ் அடி வானத்தில் ஏறக்குறைய வட்டவடிவமான சந்திரன் உதயமானான். அவனுடைய கிரணங்களினால் வெண்ணிறம் பெற்ற வெள்ளப் பரப்பு, தேவர்கள் அமுதத்திற் காகக் கடைந்த பாற்கடலைப் போல் ஜொலித்தது வெள்ளத்திலிருந்து சந்திரன் மேலே கிளம்பியது. அந்தப் பாற்கடலி லிருந்து அமுதம் நிறைந்த தங்கக் கலசம் எழுந்தது போலிருந்தது.

சிறிது நேரம் சந்திரோதயத்தின் அழகைப் பற்றியே பேசிக்கொண்டிருந் தார்கள். பிறகு, ஆயனருக்கு இருப்புக் கொள்ளவில்லை. "நிலா வெளிச்சத்தில் ஒருதடவை இந்தப் பாறைகளைச் சுற்றிப் பார்த்துவிட்டு வருகிறேன்" என்று சொல்லி விட்டுப் போனார்.

மாமல்லரும் சிவகாமியும் வெகு நேரம் மௌனமாய் உட் கார்ந்திருந்தார்கள். அவர் களுடைய இரு கைகள் மட் டும் ஒன்று சேர்ந்து அந்தரங்கம் பேசிக் கொண்டிருந்தன.

அவர்களைச் சுற்றி வெளியிலே மகிழம் பூவின் நறுமணம் நிறைந்து மூச்சுத் திணறும்படிச் செய்தது.

அவர்களுடைய உள்ளங்களிலே இன்ப உணர்ச்சி ததும்பி மூச்சுத் திணறும்படிச் செய்தது.

சிறிது நேரத்துக்கெல்லாம் அவர்களுக் குக் கீழேயிருந்த பூமி இலேசாக நழுவி, அவர்களை அந்தரத்தில் விட்டுச் சென்றது.

அவர்களுடைய தலைக்கு மேலே வான மானது, சந்திரமண்டலம் நட்சத்திரங் களுடன் திடீரென்று மறைந்துவிட்டது!

எங்கேயோ, எங்கேயோ, எங்கேயோ எல் லையில்லாத வெள்ளத்தில் மிதந்து மிதந்து மிதந்து அவர்கள் போய்க்

## அருள்வாக்கு

படிப்பு ஜாஸ்தியாக ஆக நூதன நூதனமாக ஏமாற்று வித்தைகள் செய்கிற ஸாமர்த்தியங்களும் வளர்கின்றன. தொழில்கள் நடத்துகிறவர்களும் அரசியல்வாதிகளும் செய்கிற பேற்று மாற்று. எங்கே போனாலும் ரஹஸ்யத்தில் நடக்கும் லஞ்சம் முதலான அநேகக் குற்றங்கள் இந்த ஸாமர்த்யத்தில் கோர்ட் வரை வராமலே போகின்றன. முக்கால்வாசிக் குற்றங்கள் நீதி ஸ்தலத்துக்கும் போலீஸுக்கும் வராமலே போயிருக்கும்! படிப்பினால் புத்தி ஸாமர்த்யம் அதிகரிப்பதில் ஸிவில் குற்றங்கள் மாத்ரம்தான் அதிகரித்திருக்கின்றன என்றில்லை. பெரிதான பங்குக் கொள்ளை, ஒரு மந்த்ரி ஸபையையே சுட்டுக் கொன்று விடுவது, கோஷ்டி கோஷ்டியாகத் தகாத கார்யத்துக்காகப் பெண்களைக் கடத்திப் போவது மாதிரி க்ரிமினல் குற்றங்களும் ராஜாங்கத்தையே வெறும் பௌதிக பலத்தால் புரட்டி விடும் ''கூப்'' முதலியனவும், படிப்பு ஸாமர்த்யத்தாலேயே நன்றாக ஜோடித்துத் திட்டம் போட்டு நடத்தப்படுகின்றன. இதெல்லாம் போக நேராகவே அடிதடி, பிஸ்டலைக் காட்டுவது, சுடுவது முதலானவையும் படிப்பாளிகள் உள்ள நாடுகளில் ஏறிக் கொண்டே போகின்றன.



அப்படியானால் கல்வி வேண்டாமா? ரொம்பப் பெரியவர்கள் கல்வி ரொம்ப அவசியம் 'எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்' என்று கல்வியை ஏகமாக சிலாகிக்கிறார்கள். ஏன் இப்படி முரண்பாடாக இருக்கிறது?

ஆழ்ந்து அலசிப் பார்த்தால் முரண் எதுவும் இல்லை என்று தெரியும். அந்தப் பெரியவர்கள் சொன்ன கல்வி வேறாகவும், இன்று அமலாகிற கல்வி வேறாகவும் இருக்கின்றன. இதுதான் முரண்பாட்டுக்குக் காரணம். அவர்கள் சொன்னபடி கல்வி இருந்தால் குற்றம் வளராது; குறைந்து மறைந்தே போய்விடும்.

என்ன சொன்னார்கள்? அவர்கள் புத்தி வளர்ச்சி தருகிற கல்வியை மட்டும் சொல்லவில்லை. பக்தி வளர்ச்சி அளிப்பதாகவும் உள்ள கல்வியையே சொன்னார்கள்.

கற்றதனால் ஆயபயன் என்கொல்? வாலறிவன்.
நற்றாள் தொழா(அ)ர் எனின்

என்று திருவள்ளுவர் சொன்னதுதான் அவர்கள் எல்லாருடைய அபிப்ராயமும்.

தெய்வ ஸம்பந்தமில்லாமல், அதாவது தெய்வத்திடம் பயப்பட வேண்டும் என்று பண்ணாமல் படிப்பை மட்டும் கொடுப்பதால்தான் விபரீதமாகப் போயிருக்கிறது.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சாரிய சுவாமிகள்**

கொண்டிருந்தார்கள். அவ்விதம் அவர்கள் செய்த ஆனந்த யாத்திரை ஒரு கண நேரமா அல்லது நீண்ட பல யுகங் களா என்பது தெரியாதபடி காலாதீத நிலையை அடைந்து, மேலே இன்னும் மேலே, அதற்கும் மேலே போய்க்கொண்டிருந்தார்கள்.

திடீரென்று, அமுதமளாவிய குளிர்ந்த இளங்காற்று வீசி, மகிழ மரத்தின் கிளைகளில் சலசலப்பை உண்டு பண்ணியது.

அந்தக் கிளைகளிலிருந்த மகிழம் பூக்கள் பொலபொலவென்று அவர்களுடைய தலைமேல் உதிர்ந்தன.

இருவரும் தடாலென்று பூலோகத்துக்கு வந்து சேர்ந்தார்கள். மண்டபப்பட்டுக் கிராமத்துப் பாறையின் மேல் மகிழ மரத்தினடியில் தாங்கள் உட்கார்ந்திருப்பதைக் கண்டார்கள்.

''சிவகாமி! என்ன சிந்தித்துக் கொண்டிருந்தாய்?'' என்று மாமல்லர் கேட்டபோது, வெகு வெகு வெகு தூரத்திலிருந்து அவருடைய குரல் கேட்பது போலிருந்தது.

"பிரபு! கையைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்ளுங்கள். விழுந்து விடுவேன் போலிருக்கிறது!" என்றாள் சிவகாமி.

"ஏன் சிவகாமி உன் உடம்பு இப்படி நடுங்குகிறது? குளிர் காற்றினாலா?" என்று மாமல்லர் கேட்டார்.

"இல்லை, பிரபு! குளிர் இல்லை. என் உடம்பு கொதிக்கிறதைப் பாருங்கள்!'' என்று சிவகாமி சொன்னபோது அவளு

டைய குரலும் நடுங்கிற்று.

"பின் ஏன் இவ்விதம் நடுங்குகிறாய்?"

"ஏதோ பயமாயிருக்கிறது. நான் உயிரோடுதானிருக்கிறேனா?"

"இது என்ன கேள்வி? உயிரோடு இல்லாவிட்டால் எப்படி என்னுடன் பேச முடியும்?"

"சற்று முன்னால் எனக்கு எங்கேயோ வான மார்க்கத்தில் பிரயாணம் போவது போல் தோன்றியது. சப்தமில்லாத ஒரு தெய்வீக சங்கீதம் எங்கிருந்தோ வந்து கொண்டிருந்தது. அதன் தாளத்துக்கிணங்க என் ஆத்மா நடனமாடிக் கொண்டு மேலுலகம் சென்றது... அதெல்லாம் பிரமை தானே? உண்மையாக நான் இறந்து போய் விடவில்லையே!?"

"ஆம், சிவகாமி! ஒருவிதத்தில் நாம் இருவருமே இறந்துவிட்டோம். ஆனால் மறுபடியும் பிறந்திருக்கிறோம். இருவருக்கும் இது புனர்ஜன்மந்தான். மூன்று நாளைக்கு முன்னால் நாம் இந்தக் கிராமத்துக்கு வந்த போது தனித்தனி உயிருடனும் உள்ளத்துடனும் இருந்தோம். இன்று அந்தச் சிவகாமி இல்லை நீ; நானும் அந்த நரசிம்ம வர்மன் இல்லை. என் உயிரிலும் உள்ளத்திலும் நீ கலந்திருக்கிறாய். அப்படியே உன் உயிரிலும் உள்ளத்திலும் நான் கலந்து போயிருக்கிறேன். ஆகையால், நாம் இருவரும் மரணமடைந்து மறுபிறப்பும் அடைந்துவிட்டோம். எல்லாம் மூன்றே நாளில்...!"

"நிஜமாக மூன்று நாள்தானா? என்னால் நம்ப முடியவில்லை. எத்தனையோ நீண்ட காலம் மாதிரி தோன்றுகிறது!"

"அதுவும் உண்மையே. இந்த மூன்று நாள் வெறும் மூன்று நாள் அல்ல. இதற்கு முன் எத்தனையோ ஜன்மங்களில் நாம் ஒருவரையொருவர் பார்த்திருக்கிறோம்; காதலித்திருக்கிறோம்; பிரிந்திருக்கிறோம்; சேர்ந்திருக்கிறோம். அவ்வளவு அனுபவங்களையும் இந்த மூன்று தினங்களில் திரும்ப அனுபவித்தோம்."

"இதோடு எல்லாம் முடிந்து போய் விட்டதா?"

"எப்படி முடிந்துவிடும்? பல ஜன்மங்களில் தொடர்ந்து வந்த உறவு இந்த ஜன்மத்தோடு மட்டும் எப்படி முடியும்?"

"வருகிற ஜன்மங்களைப் பற்றி நான் கேட்கவில்லை. இந்த ஜன்மத்தைப் பற்றித் தான் கேட்கிறேன். இந்த ஜன்மத்தில் எப்போதும் இப்படியே இருக்குமா?"

"எது இப்படி இருக்குமா என்று கேட்கிறாய்?"

"உங்களுடைய அன்பைத்தான் கேட்கிறேன்!"

மாமல்லர் தமக்கு அருகில் பாறையில் உதிர்ந்து கிடந்த மகிழம் பூக்களைத் திரட்டிச் சிவகாமியின் கையில் வைத்தார்.

"சிவகாமி என்னுடைய அன்பு, மல்லிகை - முல்லை மலர்களைப் போல் இன்றைக்கு மணத்தை வாரி வீசிவிட்டு, நாளைக்கு வாடி வதங்கி மணமிழந்து போவதன்று. என் அன்பு, மகழம் பூவை ஒத்தது; நாளாக ஆக அதன் மணம் அதிகமாகும். வாடினாலும் காய்ந்து உலர்ந்தாலும் அதன் மணம் வளர்ந்து கொண்டுதானிருக்கும்... அன்றைக்குத் தாமரைக் குளக் கரையில் என்னிடம் வாக்குறுதி கேட்டாயே, ஞாபகம் இருக்கிறதா?"

"இருக்கிறது!"

"அந்த வாக்குறுதியை இப்போதும் கோருகிறாயா?"

"வேண்டாம் பிரபு! வாக்குறுதி வேண்டாம்! தங்களுடைய மன்னிப்புத்தான் வேண்டும்!"

"எதற்கு மன்னிப்பு?" என்றார் மாமல்லர்.

"தங்களைப் பற்றிச் சந்தேகம் கொண்டதற்குத்தான். தங்களைப் பற்றி ஒரு துஷ்ட நாகம் கூறிய விஷங்கலந்த மொழிகளை நம்பியதற்காகத்தான்!" என்றாள் சிவகாமி.

அப்போது இலேசாகச் சரசரவென்ற சப்தம் சமீபத்தில் கேட்கவே, சிவகாமி மிரண்டு போய்ச் சுற்றுமுற்றும் பார்த்தாள். மரக்கிளைகளின் நிழலும் நிலா வெளிச்சமும் மாறி மாறித் தரையில் படிந்திருந்த இடத்தில், அவர்களுக்குச் சமீபத்தில் ஒரு பாம்பு நெளிந்து நெளிந்து போய்க் கொண்டிருந்தது.

"ஐயோ! அப்பா! பாம்பு!" என்று சிவகாமி அலறிக்கொண்டு எழுந்தாள்.

மாமல்லரும் குதித்து எழுந்து, சிவகாமியை ஆதரவுடன் தன்னோடு சேர்த்து அணைத்துக்கொண்டார். "பயப்படாதே, சிவகாமி! நானிருக்கும்போது என்ன பயம்?" என்றார்.

(தொடரும்)

● வைகை வளவன், மதுரை-17.

? 'தமிழர்கள் அனைவருக்கும் உலகம் முழுவதும் முகவரியைத் தேடித் தந்தவர்கள் விடுதலைப்புலிகள்தான்' என்று புகழாரம் சூட்டியிருக்கிறாரே வைகோ அண்ணாச்சி?

! தப்பான முகவரி தந்து என்ன புண்ணியம்? தமிழனையே தப்பாகப் புரிந்து கொள்வார்களே!

● ஆர். நாகராஜன், சென்னை - 61.

? பதற்றமான சூழ்நிலையில் பிரதமரின்



• பயனில்லாப் பயணம்!

# பிரதமரின் காஷ்மீர் பயணம் தேவைதானா?

காஷ்மீர் பயணம் தேவைதானா...?

! பதற்றமான சூழ்நிலை நிலவுவதே காஷ்மீரில் தானே. அங்கே போகாமல் வேறு எங்கே போவார்? போனதன் பலன்தான் கணிசமாக இல்லை.

● வி. ஜானகி, சென்னை - 4.

? அரசுடைமையாக்கப்பட்ட வங்கிகள் தனியார் மயமாகப்படுவதற்குத் தொழிற்சங்கங்கள் எதிர்ப்பு தெரிவிப்பது ஏன்...?

! படிப்படியாக - பணியாளர் எண்ணிக்கை குறையும். வேலைச்சுமை அதிகரிக்கும். பொறுப்புகள் கூடும். தட்டிக் கேட்கப்படும். திறமையின்மை சகித்துக்கொள்ளப்பட மாட்டாது. அத்தகையோர் பணி நீக்கம் உறுதி. இவ்வளவு போதுமா, இன்னும் கொஞ்சம் வேணுமா?

● ஆர். செந்தில்முருகன், மேல்வலையமாதேவி.

? வாழ்க்கையில் துன்பம் என்னைத் துரத்து துரத்தென்று துரத்துகிறதே...?

! நேரே சென்னை கோட்டைக்குப் போங்க. மனோதத்துவ நிபுணர்கள் நிறைய பேர் இருக்காங்க. உங்க பிரச்னை எதுவானாலும் போயிந்தே! இட்ஸ் கான்!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

? ஹெல்மெட் அணியாமல் மோட்டார் சைக்கிளில் வந்த போலீஸ்காரரைக் 'குட்டிக்கரணம்' போடச் சொல்லி தண்டனை வழங்கியுள்ளாரே புதுவை ஐ.ஜி. சிங்...?

! புதுவித தண்டனை. சம்பந்தப்பட்டவர்களின் மனத்தைப் புண்படுத்தியிருந்தால் மன்னிப்புக் கேட்பதாகக் கூறி ஐ.ஜி. சிங் தானும் ஒரு பல்டி அடித்தாரே அதுவும் நல்ல தமாஷ்தான். (அது குட்டிக் கரணம் அல்ல; தலையில் குட்டிக்கொண்ட கரணம்!)



• ஆதரவும்...



• ... அகங்காரமும்!

● மங்கதேவன், நவிமும்பை.

? மாம்பழம் சாப்பிட்டீர்களா...?

! அல்பான்ஸோ பழத்தை ஈமெயிலில் ஆர்டர் செய்து பெற்றுக்கொள்ளுங்கள் என்று விளம்பரம் வந்திருந்தது. விசாரித்தால், இருபது பழம் கொண்ட பெட்டியின் விலை அறுநூறு ரூபாயாம்! டெலிவரி சார்ஜஸ் தனி! சே...சே! இந்தப் பழம் புளிக்கும் என்றாகிவிட்டது!

● எம். கருணாகரன், சென்னை - 33.

? உலகத்துக்கே பொதுவான நியாயமான அமைப்பு ஒன்றை உருவாக்கி, இரு நாடுகளுக்கிடையே ஏற்படும் பிரச்னையை உயிர்ச்சேதம், பொருட்சேதம் இல்லாமல் தீர்த்து வைக்க முடியாதா...?

! அப்படியொரு அமைப்பு ஏற்கெனவே இருக்கிறதே. (ஐ.நா) அங்கு நிலவும் இழுபறிகளை மீறி நியாயம் சொல்லப்பட்டால் மட்டும் யார்

• முரண்பாடு திலகம்!



• முகவரி குழப்பம்!





• 'உரிமைப்' பிரச்னை!

பளிச்சென்று கேட்கிறார்கள்! அந்தந்த நாட்டு அதிபர்களின் உள்நாட்டு அரசியல் நிர்ப்பந்தங்கள்தான் இறுதியில் அமைதியையோ போரையோ முடிவு செய்கின்றன.

● அ. சுகுமார், காட்டுக்கானூர்.

**? கோடையில் மின்வெட்டே இராது என்று அமைச்சர்கள் கூறுவது எந்தவகை உண்மையைச் சார்ந்தது?**

! மின்வெட்டு வேறு; மின்தடை வேறு. மின்தடை அடிக்கடி ஏற்பட்டுத்தான் வருகிறது. அதற்குத் திறமையின்மை காரணம். மின்வெட்டு என்பது பற்றாக்குறையால் ஏற்படுவது. அது இந்தக் கோடையில் இதுவரை இல்லை என்பது வரவேற்கத்தக்க உண்மை.

● கே. முரளிதரன், மதுரை - 10.

**? சட்டசபைக்குச் செல்லாததற்கு தி.மு.க தலைவர் விளக்கம் அளிக்க வேண்டும் என்கிறாரே வைகோ...?**

! கைப்புண்ணுக்குக் கண்ணாடி எதற்கு?

● எல். மாறன், மேல்பட்டி.

**? காங் - த.மா.கா இணைந்தால் சட்ட சபையில் அதன் பலம் கூடி, தி.மு.க.வின் எதிர்க்கட்சி அந்தஸ்தும் பறி போய்விடுமே...?**

! இணைப்பு வெறும் ஒட்டுப் போடும் வேலையாக இன்றி, ஊடு பாவாக நெசவானால், நீங்கள் சொல்வது சரி... இல்லையேல் காங்கிரஸின் வீட்டுச் சண்டைகள் வீதிக்கு வரும்!

● ஆர். ராமசுப்ரமணியன், வடவள்ளி ●

**? பாக். மீது போர் தொடுத்தே தீருவோம் என்று பி.ஜே.பியினர் முழக்கமிடுவது குஜராத் கொடூரங்களை மக்கள் மறந்துவிட வேண்டும் என்பதற்காகத்தானே...?**

! போர் முழக்கம் பாக்கின் ஜம்மு தாக்குதலுக்கான பதில். குஜராத்திலிருந்து அது கவனத்தைச் சற்று திசை திருப்பியிருப்பது உண்மைதான். ஆனால் பாகிஸ்தான் மீது போர் தொடுக்க வேண்டும் என்று ஆர்.எஸ்.எஸ் முதலான அமைப்புகள் கர்ஜனை செய்வது, குஜராத்தைக் காட்டிலும் மோசமான விளைவுகளுக்கு வழி வகுக்கும்.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

**? எனது தனிப்பட்ட வாழ்க்கை செயல்கள் குறித்து, கேள்விகள் கேட்க எவருக்கும் உரிமையில்லை... என்று கமல்ஹாஸன் கூறுவது சரியா...?**

! தனிப்பட்ட வாழ்க்கை பற்றிய கேள்விகளுக்குப் பதில் கூறாதிருக்கும் உரிமைதான் அவருக்கு உண்டே யொழிய, கேள்வி கேட்பதையே தடை செய்யும் உரிமை கிடையாது.

● கே. தெய்வசிகாமணி, சென்னை - 30 ❒

**? தமது அமைச்சர்களுள் ஒருவர் ஐ.ஏ.எஸ் அதிகாரிகளை அலட்சியப்படுத்தியதை அறிந்த அண்ணாதுரை, "அவர்கள் எப்போது வேண்டுமானாலும் அமைச்சர் ஆக முடியும். ஆனால் நீயோ நானோ இனி படித்து ஐ.ஏ.எஸ் ஆக முடியாது என்பதை ஞாபகம் வைத்துக்கொள்" என்றாராமே... இப்போது ரிங் மாஸ்டரிடம் சவுக்கடி பெறும் அதிகாரிகளுக்கு ஆதரவாகப் பேச அமைச்சரவையில் ஆள் இல்லையே...?**

! அதிகாரிகள் மீது நெளியும் சவுக்கு, மந்திரிகள் மீது சொடுக்கப்படாது என்பதற்கு உத்தரவாதம் இல்லையே. அப்புறம் அமைச்சர்களுக்கு, ஓ போடுவது தவிர வேறு வழி...!

● எம். ராஜேந்திரன், லால்குடி.

**? இந்தியா மீது அணுகுண்டு வீசத் தயங்க மாட்டோம் என பாகிஸ்தான் கூறுகின்றதே?**

! கூடவே, 'பாக். போரைத் தொடங்காது; பயங்கரவாதம் பாக். மண்ணிலிருந்து பரவாது' என்றெல்லாம் பேசுகிறார் முஷரஃப். முரண்பாடுகளின் மொத்த உருவமான பாகிஸ்தானின் கையில் அணு ஆயுதங்கள் இருக்கின்றன என்கிற எச்சரிக்கையுடன் அறிவார்த்தமாக நமது அரசு செயல்படுவதே நல்லது. உதறலும் வேண்டாம்; உதார் விடவும் வேண்டாம்.

❒ ரூ 100 பரிசு பெறுபவர்:
கே. தெய்வசிகாமணி,
24/43. புல்லா அவென்யூ,
ஷெனாய் நகர்,
சென்னை 600 030

● ரூ.50 பரிசு பெறுபவர்:
ஆர். ராமசுப்ரமண்யம்,
20, வி.என்.ஆர் நகர்
முதல் தெரு,
வடவள்ளி அஞ்சல்,
கோவை 641 041.

# CATERING

## IYER'S KITCHEN

offers vegetarian food, hygenically prepared by experienced cook.

**We undertake orders for Upanayanam, Marriages & Seemantham.**

**We also provide**

**Breakfast * Lunch * Evening Tiffin**

**Specialists in Corporate orders**

We assure Quality food & Value for money.

Contact:

**VIGNESHWARA**

4951400, 4618669, 98400 -92721

# SEA BREEZE

## முதியோர், மகளிர் மற்றும் அனாதை இல்லம்

சென்னை பழைய மாமல்லபுரச்சாலை துரைப்பாக்கத்தில் முதியோர் மற்றும் மகளிர் இல்லம். புதிய கட்டிடம், சுத்தமான கடற் காற்று, சரிவிகித சைவ உணவு, முதலுதவி, உதவியாளர்கள், குறைந்த மாதக் கட்டணம், திரும்பி பெறக்கூடிய முன் பணம்.

**SEA BREEZE**
**"FATHIMA TRUST" Regd.**
**Home for Senior Citizen, Working Women & Orphanage**
**3/251, V.P.G. Avenue Mettukuppam, Thoraipakkam, Chennai - 600 096**
**Ph: 4960878, Cell : 98400 36015**

**நடமாட இயலாதோரும் அனுமதிக்கப்படுவர்**

குறிப்பு: நன்கொடை அளிக்க விரும்புவோர் **Cross** செய்த **DD**மற்றும் **Cheque** அல்லது மணியார்டர் மூலம் **Fathima Trust** என்ற பெயரில் எடுத்து மேற்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**"மானுட சேவைக்கு பேதமில்லை."**

# ஸ்ரீ டிராவல்ஸ்

194 - a, முதல் மாடி, அண்ணா சாலை, ஆயிரம் விளக்கு, சென்னை - 600 006.
போன்: 8516799, 8418339, பேக்ஸ் : 8418339 இ-மெயில்: sritrave@satyam.net.in

## ஸ்ரீ டிராவல்ஸ் அளித்திடும் கோடை கால சுற்றுலாக்கள்

**சுற்றுலா எண் 1 :** சென்னை - கல்கத்தா - டார்ஜிலிங் - கேங்க்டாக் (சிக்கிம்)-சென்னை
புறப்படும் நாள் : 21.06.02. தொகை : ரூ. 6,000/-

**சுற்றுலா எண் 2 :** சென்னை - பூரி - புவனேஸ்வர் - கல்கத்தா - கயா - வாரணாசி - அலகாபாத் - சென்னை.
பயண தேதி : 25.06.2002
தொகை : ரூ. 5,200/-

**சுற்றுலா எண் 3 :** சென்னை - வாரணாசி - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - பத்ரிநாத் - கேதார்நாத் - கங்கோத்ரி - யமுனோத்ரி - டெல்லி - சென்னை. பயண தேதி : 30.06.2002

**ஹிமாச்சல பிரதேச பனிச் சிகரங்களில் ஆப்பிள் தோட்டங்களின் அழகினைக் காணுங்கள்!**
சென்னை - சண்டிகர் - சிம்லா - குலு - மணாலி - டில்லி - மதுரா - ஆக்ரா - சென்னை.
பயண நாட்கள் : 13, தொகை : ரூ. 6,900/-
பயண தேதி : 21.07.2002

அமைதி திரும்பிய இலங்கைத் தீவின் அனைத்து இடங்களையும் விமானம் மூலம் கண்டு மகிழுங்கள். சென்னை - கொழும்பு - சென்னை. (பாஸ்போர்ட் உள்ளவர்கள் மட்டும்) மேலும் விவரங்களுக்கு தொடர்பு கொள்ளவும்.
புறப்படும் நாள்: 16.07.02.

பத்ரிநாத், கேதார்நாத், கங்கோத்ரி, யமுனோத்ரி, பக்தி சுற்றுலா.
சென்னை - வாரணாசி - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - கேதார் நாத் - பத்ரிநாத் - கங்கோத்ரி - யமுனோத்ரி - டெல்லி - சென்னை. பயண நாட்கள் : 18
தொகை : ரூ. 7,200/-
பயண தேதி : 30.06.2002

சென்னை - கல்கத்தா - கயா - வாரணாசி - அலகாபாத் - சென்னை.
புறப்படும் நாள் : 25.06.02 பயணத்தொகை : ரூ. 4,900/- பயணநாட்கள் - 8

மேற்கண்ட அனைத்து சுற்றுலாக்களுக்கும் அருமையான ஹோட்டல்களில் தங்கும் அறைகள், * பிராமண சமையல் கலைஞர்களால் தயாரிக்கப்படும் தரமான தென்னிந்திய சைவ உணவு, * ரயில் மற்றும் விமானக் கட்டணம், இடங்களைச் சுற்றிப் பார்க்க பஸ் வசதி அனைத்தும் பயணக்கட்டணத்துக்குட்பட்டவை.

**LTC வசதி உண்டு**

# சிரிப்பாளிகளுக்கு நன்றி!

## புன்னகைப் போட்டி -14 முடிவு

'தமிழகத்தில் எந்தவிதமான சுவரொட்டி ஒட்டப்பட்டால், தமிழர்கள் இன்பத் திகைப்பில் ஆழ்ந்து போவார்கள்?' என்று கல்கி - வி.பி.சி. ஜுவல்லரி சார்பில் 'புன்னகைப் போட்டி - 14' அறிவிக்கப்பட்டது. வந்து குவிந்த வாசகங்களைப் பரிசீலனை செய்த ஆசிரியர் குழு, சிரித்து சிரித்து ஓய்ந்தே விட்டது. அந்த அளவுக்கு நக்கலடித்திருந்தார்கள் வாசகர்கள். ஆகவே தலா நான்கு கிராம் தங்கம் பரிசு பெறும் இரண்டு வாசகங்களோடு, மேலும் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து, ஆறுதல் பரிசாக ரூ. 50/- தரப்பட்டுள்ளது. திக்குமுக்காட வைத்த சிரிப்பாளிகளுக்கு நன்றி!

**நான்கு கிராம் தங்கம் பரிசு பெறும் சர்ப்ரைஸ் சுவரொட்டிகள்**

### அம்மா ஆணை!

*'இனிமேல் தமிழ்நாட்டில் 'அம்மா' என்ற சொல், புரட்சித் தலைவியை மட்டுமே குறிக்கும். எனவே, அனைவரும் தத்தம் சொந்த அம்மாவை, 'தாய்' 'மாதா' 'ஆத்தா' 'மம்மி' என்று ஏதாவது பெயர் சொல்லி அழைத்துக் கொள்ளவாம். மீறினால் சட்டம் தன் கடமையைச் செய்யும்.'*

*— தமிழக அரசு அறிவிப்பு.*

**— கே. ரமேஷ்,**
**11/7, எஸ்.எஸ்.கோயில் தெரு, சைதாப்பேட்டை, சென்னை - 15.**

### மணிவிழா மாவீரன்!

'வருங்கால முதல்வர், தமிழர் தலைவர், காடு காக்கும் கடவுள் சந்தன வீரப்பனின் 60வது பிறந்த நாளை முன்னிட்டு சென்னை நகர மக்கள் அனைவருக்கும் தலா 60 லிட்டர் குடிநீர் இலவசமாக வழங்கப்படும்.

*— இவன்.*
*சந்தன வீரப்பன் ரசிகர் மன்றம்*

**- தென்னக பாபி, தெற்காலத்தூர், ராதா மங்கலம் (அஞ்சல்), கீழ்வேளூர்.**



## சிறப்புப் போஸ்டர்கள்.

### அரசியல் திடீர்த் திருப்பம்!

போதுமான அளவு சம்பாதித்து விட்டோம். நடிப்புக்கு முழுக்கு. அரசியலுக்கு வருகிறோம். புதிய கட்சி தொடக்கம்.

*— ரஜினி — விஜயகாந்த் கூட்டு அறிவிப்பு.*

போதுமான அளவு சம்பாதித்துவிட்டோம். அரசியலுக்கு முழுக்கு. கட்சி கலைப்பு.

*— கருணாநிதி, ஜெயலலிதா திடீர் அறிவிப்பு.*

**— என். தனலட்சுமி, விருதுநகர்.**

### மூச்சுவிட தடை!

'பொது இடங்களில் மூச்சு விடுவது தடை செய்யப்பட்டுள்ளது. மீறினால் மரண தண்டனை'.

*— இங்ஙனம்*
*மக்கள் தொகை குறைப்புவாரியம்.*

**— பா. பிரசன்னா,**
**சாலியமங்கலம், தஞ்சை.**

### வரிபோட்ட தாயே!

உலக நாயகி, ஆண்டிப்பட்டி அரசி, மாண்புமிகு டாக்டர் புரட்சித் தலைவி அவர்களின் அருளால்தான் நாட்டில் வெயில், காற்று, மழை கிடைக்கின்றது. ஆகவே, தமிழக மக்கள் மீது வெயில் வரி 30%, காற்று வரி 30%, மழை வரி 30% (அவரவர் வருமானத்தில்) விதிக்கப்படும்.

*அ.இ.அ.தி.மு.க. செயற்குழு*

**— எஸ். ராமஸ்வாமி, மேட்டுப்பாளையம் - 641 305.**

### வீரப்பன் சரண்!

*சந்தனக் காட்டில் வெட்டுவதற்குச் சந்தன மரம் ஒன்று கூட பாக்கி இல்லாததால், இந்த முடிவை எடுக்கும்படியாகிவிட்டது.*

*— வீரப்பன் வருத்தம்!*

**— எம்.வி. ஷ்யாமளா**
**ஐதராபாத் - 500 047.**

# டமிளில் பேசியதேன்?

பாரதி கலா மன்றத்தின் நாற்பத்தெட்டாவது ஆண்டு விழா மும்பையில் நடைபெற்றது. சொந்தக் கட்டிடம் இல்லாத காலத்தில் கூட கொடிகட்டிப் பறந்த இந்த சபா, இன்று அழகான ஏ.ஸி. ஆடிட்டோரியம் இருந்தும், ஆடியன்சுக்கு ஏங்கும் நிலையை, உருக்கமாகச் சுட்டிக்காட்டிய செயலர் ராமனின் பேச்சு, இன்று ஃபைன் ஆர்ட்ஸ் சபாக்களின் பரவலான அவல நிலையைப் பிரதிபலிப்பதாக இருந்தது. புத்திசாலித்தனமாக, ஸ்வாமிநாராயண் அறக்கட்டளையுடன் இணைந்து, பாரதி மெடிகல் அண்ட் ரிஸர்ச் ஃபவுண்டேஷனாக மாறி விட்டார்கள். அங்கே எழுந்துள்ள 'ப்ரமுக் ஸ்வாமி ஐ ஹாஸ்பிடல்' குறைந்த செலவில், அதிநவீன முறையில் 'பார்க்கும் விழிகளையும்' 'பாயும் ஒளியையும்' வழங்கி, பாரதி விரும்பிய 'ஒளி படைத்த' கண்ணினத்தைப் பெருக்கி வருகிறது. கலைக் கண்ணுடைய ஆர்வலர்கள், விடாமல் கலைநிகழ்ச்சிகளை நடத்திக் கொண்டுதானிருக்கிறார்கள். ஆண்டு விழாவை முன்னிட்டு, சௌதாமினியின், பாரதி பற்றிய ஒரு மணி நேர டாகுமெண்ட்டரி திரையிடப்பட்டது. காயத்ரியின் இசையும் காமிராவும் குளிர்ச்சியான விஷயங்கள்; படத்தில் ஆடியன்சைக் குழப்பிய விஷயங்களில் தலையானவை... இசை வல்லுனர்களின் 'நவரச பாவ'ங்கள் பற்றி சஞ்சய் சுப்ரமணியன் கொடுத்த பிரமாத 'டெமோ' எதற்காக? பாரதியைப் பற்றி விளக்கம் தந்த டாக்டர், 'டமிள்மொளி'யில் பேசியதேன்?

'ஏன் என்ற கேள்வி இன்று கேட்காமல் வாழ்க்கை இல்லை' என்கிறார்களே... கேட்கிறார்களா? ம்ஹூம்! கேட்டிருந்தால் திடீரென்று மஹாராஷ்ட்ரா முழுவதும் சில பல மணி நேரங்கள் 'ப்ளாக் அவுட்' ஆனதற்குக் காரணம், எங்கோ பவர் 'ட்ரிப்' ஆகியிருப்பதுதான் என்பது விளங்கியிருக்குமே? இப்படியா கரண்ட் போனதும், இந்தியா பாக். போர் மூண்டு விட்டது என்று சோக கீதம் பாடுவார்கள்? வானத்தை நோக்கி, போர் விமானங்களைத் தேடுவார்கள்? ஆனாலுக்குப் போர்க் கதைகளை அவிழ்ப்பார்கள்? அப்பப்பா... ஒரு காலத்தில் 'தந்தி'கள் செய்து கொண்டிருந்த வேலையை இன்று 'வதந்தி'கள் செய்கின்றன. தானும் கலங்கி மற்றவர்களையும் கலக்கி... ஒரே கலாட்டா!

கலாட்டா என்றாலே நினைவுக்கு வருவது



• சஞ்சய் சுப்பிரமணியன்

சிவசேனைக்காரர்கள்தான். அட, கோர்வாடீயின் கார்பொரேட்டர் பாலா சாவந்த், தன் தொகுதி பாங்க் ஆஃப் இந்தியா கிளையின் மானேஜர் சீமா மஞ்ச்ரேக்கரின் சட்டையைப் பிடித்திழுத்து, 'எனக்கு வோட்டுப்

போடும் இந்தக் கிழவிக்கு 20,000 ரூபா கடன் தருகிறாயா இல்லையா?' என்று மிரட்டியதைச் சொல்ல வரல்லீங்க... அது வழக்கமான வம்பு ஃபார்முலாவில் அடங்கிடுமே? இது வேறு கதை. காங்கிரஸ்காரரான எங்கள் சி.எம். விலாஸ்ராவ் தேஷ்முக்கின் பிறந்த நாளையொட்டி, கல்யாண் - டோம்பி விலி சிவசேனைக்காரர்கள் ஒரு வாழ்த்து விளம்பரத்தை மும்பை தினசரியில் கொடுத்திருந்தார்கள்; சும்மா... ஒரு நல்லிணக்கத் தூதாகத்தான்; சினந்து விட்டது சிவசேனைத் தலைமை. உடனே சம்பந்தபபட்டவர்களை ராஜினாமாச் செய்யச் சொல்லி விட்டது! இத்தனைக்கும், தாக்கரேயின் பிறந்த நாளுக்கு இந்தப் பகுதி காங்கிரஸ்காரர்கள், இதே விதத்தில் வாழ்த்தி இருந்ததை காங்கிரஸ் தலைமை கண்டு கொள்ளவே இல்லை! காங்கிரஸார் புதிய உறவுக்கு முயற்சி செய்தாலும், சிவசேனைக்காரர்கள் பழசை மறக்க மாட்டே னென்கிறார்களே?

> “இப்படியா கரண்ட் போனதும், இந்தியா-பாக். போர் மூண்டு விட்டது என்று சோக கீதம் பாடுவார்கள்? வானத்தை நோக்கி, போர் விமானங்களைத் தேடுவார்கள்?”

**ப**ழசை மறக்காமலிருப் பதுதான் இப்போது ஃபாஷ னாக்கும்; மறுபடியும் பழைய ரேடியோ மோகம் தலை எடுத்திருக்கிறது; 'ரேடியோ மிர்ச்சி' எனும் புதிய எஃப்.எம். சேனல் துவங்கிய திலிருந்து பழைய, புதிய பாட் டுக்கள் நாள் முழுவதும் ஒலித் துக்கொண்டிருக்கின்றன. ரூ 80ல- ரூ. 200 வரையிலான குட்டி, க்யூட் ரேடியோக்கள் தினம் ஆயிரக்கணக்கில் தெருவோரங்களில் விற்பனை யாவது அதிசயமென்றால், அதைவிடப் பேரதிசயம், 1917ல எழுதப்பட்ட சரத்சந்தி ரரின் தேவதாஸ் கதை. இது வரை எட்டு முறை படமாக்கப்பட்டு, ஒன்பதாவது முறை யாக ஐம்பது கோடி செலவில், சஞ்சய் லீலா பன்சாலியால் இப்போது தயாரிக்கப்பட்டு, கேன்ஸ் விழாவில் திரையிடப் பட்டு எல்லோரையும் ஒரு கலக்கு கலக்கியிருப்பதுதான்! 1955ல் திலீப்குமார் தேவதாஸானார்; இப்போது ஷாருக்கான். ஐஸூம் மாதுரியும் பாரு, சந்திரமுகி ரோல்களில்! 'பாரு பாரு' என்று எல்லோரையும் இப் படம் பார்க்க வைக்கப் போகிறதாமே? பார்வைக்கு டேஞ்சர்தான்!



• தேவதாஸில்...

**'டே**ஞ்சர்' படம் பார்த்தீர்களா? கதாநாயகி என்னவோ தாரா தேஷ்பாண்டேதான்; ஆனால் விளம்பரப் போஸ்டர் களில் முகம் காட்டியிருப்பது விபா தத்! காரணம்? ப்ரொட் யூசர் வசந்த சட்டாவுக்கும், தாராவுக்கும் ஏதோ கசமுசவாம்... நல்லா காதுல பூ சுத்தறாங்கப்பா!

— ஜெயஸ்ரீ ராஜ்

புக் பேங்க்




# ஓ... போட வைக்கிறார்!

தமிழில் எத்தனை எத்தனையோ வித்தியாசமான எழுத்துக்கள் வந்து கொண்டிருக்கின்றன. அவற்றைத் தொகுத்து நூலாகப் படிக்கிறபோது கிடைக்கிற அனுபவமும் ஆனந்தமும் அலாதியானது தான்.

'கணையாழி' இதழில் என் எஸ் ஜெகந்நாதன் எழுதி வந்த கட்டுரைகளில் ஐம்பதை இந்தத் தொகுதியில் கலைஞன் பதிப்பகம் வெளியிட்டிருக்கிறது. கஸ்தூரி ரங்கன் முன்னுரையில் எழுபது கட்டுரைகள் என்றிருப்பது தவறு!

ஒவ்வொரு கட்டுரையும் ஆழமாகச் சிந்திக்க வைக்கிறது - எழுதப்பட்டுப் பல பத்தாண்டுகள் ஆன பிறகும்! முக்கியமாக 'தமிழும் வடமொழியும்' என்ற கட்டுரை. இலக்கிய விமர்சகர் தி.க.சி.யின் கண்டனத்துக்கு அவருடைய கடிதத்திலிருந்தே ஒரு வரியை மேற்கோள் காட்டுகிற நயம் உயர்வானது! தமிழில் எழுதுகிற போது ஆங்கிலம் கலப்பதைக் கண்டித்த தி.க.சி, 'கணையாழி அச்சகத்திலுள்ள கல்நெஞ்சர்களை (sadists) அப்புறப்படுத்துங்கள்' என்று சீறியிருப்பது அச்சுப்பிழைகளைத்தான். என்.எஸ்ஜே. எழுதுகிறார் "வாசகர்களை வாட்டுவதில் இன்பமடைகிற இயல்புடையவர்கள் என்ற பொருள் 'கல் நெஞ்சர்கள்' sadists என்ற சொல்லில் இல்லை. ஆகவே sadists என்ற சொல்லை ✱ பியோகித்தது தவறில்லை. மாறாக, தேவையானது என்று சொல்லுவேன்."

'புத்தகத்தின் மரணம்' என்பது முற்றிலும் வித்தியாசமான உணர்வுகளைப் பிரதிபலிக்கிற ஒரு கட்டுரை. சிடி. ரோம், மல்ட்டி மீடியா என்று வந்துவிட்ட காலங்களில் "விரல்கள் ஸ்பரிசிக்காத புத்தகங்கள் என்னைப் பொறுத்த வரை புத்தகங்களே அல்ல" என்று எழுதுகிற ஜகந்நாதன் படிக்கிற பழக்கமுடைய பலரையும் 'ஓ' போட வைத்து விடுகிறார். ஒரிசா மாநிலத்தில் லட்ச ரூபாய் லஞ்சச் சொத்துச் சேர்த்த ஓர் அதிகாரியின் வீட்டை ஊழல் வேட்டையாளர்கள் தோண்டிய போது கிடைத்த புத்தகங்களின் மதிப்பு 45,000 ரூபாய். "வழக்கு என்று வந்து, தண்டனை அளிக்கும் நிர்ப்பந்தம் ஏற்பட்டால், நீதி வழங்கும் கோர்ட்டார் ஒரு புத்தகப் பிரியராக இருக்க வேண்டும்" என்று இறைவனை வேண்டுகிறார் என்.எஸ்ஜே!

க.நா.சு., ஈ.எம்.ஃபார்ஸ்டர், கிருஷ்ண சைதன்யா, மகாஸ்வேதாதேவி, பேராசிரியர் சுவாமிநாதன், தஸ்லிமா நஸ்ரீன் போன்றவர்களைப் பற்றியும் இவர்களுடைய எழுத்துக்களைப் பற்றியும் அனுபவித்து எழுதியுள்ள கட்டுரைகள் ஒவ்வொன்றும் ஆழமாகச் சிந்திக்க வைக்கின்றன.

'என்னைக் கேட்டால்..' என்று அவரே விரும்பி எழுதிய கட்டுரைகள் இவை. இன்னும் பல விஷயங்களை இவரிடம் கேட்டுத் தெளிவு பெற வேண்டும் என்கிற வேட்கையைத் தூண்டுகிற எழுத்து.

'கணையாழி'யிலேயே வெளிவந்த இ.பா.வின் 'கண்ணகியின் கற்பு' பற்றிய விவாதக் கட்டுரைக்கு என்.எஸ்ஜே. எழுதியுள்ள மறுப்புக் கட்டுரையும் குறிப்பிடத்தக்க ஒன்று.

'ராம நன்னு ப்ரோவரா' என்பது ஒன்றும் சங்கீத விமர்சனக் கட்டுரையல்ல. அயோத்தி அவலங்களைப் பற்றிய அரசியல் கட்டுரைதான். அதன் நிறைவில் எழுதியுள்ள வாசகங்கள் என்றைக்கும் சிரஞ்சீவியான சிந்தனை.

"கருணா சமுத்ரா, ராமா, காவவே, காருண்யா" என்று நெகிழ்ந்து நெக்குருகி தியாகராஜர் துதிக்கும் ராமனா வட இந்தியாவில் குரோத உணர்வு பொங்கி வழியும் மோதல்களுக்குக் காரணமாக இருக்கிறார் என்ற வியப்பு என்னை வதைக்கிறது

நம்மையும்தானே?

**'என்னைக் கேட்டால்' - என்.எஸ்.ஜகந்நாதன், கலைஞன் பதிப்பகம், சென்னை - 17 பக்.320. விலை ரூ.120.00.**

- பெஸ்பால்



எங்களது
தகப்பனார்
மன்னார்குடி ப்ரம்மஸ்ரீ
ராமமூர்த்தி ஐயர்
அவர்களுக்கு
சதாபிஷேகமும்
தாயார் சௌபாக்கியவதி
தையல்நாயகிக்கு
(தையம்மாள்) திருமாங்கல்ய தாரணமும் கடந்த 24.5.2002
அன்று சென்னையில் சிறப்பாக நடைபெற்றது.

R. கைலாசம் - கல்யாணி
R. சந்தானம் - கீதா
R. முத்துகிருஷ்ணன் - வசந்தி
R. கணேசன் - பிரபா
R. பட்டாபிராமன் - சவிதா
R. ரவிச்சந்திரன் - சரஸ்வதி

சீதாலக்ஷ்மி - குருமூர்த்தி
ருக்மணி - விஸ்வநாதன்
சாவித்திரி - ஜெயராமன்
ஜானகி - துளசிராமன்

☎ 481 5315

வணிகவரி அலுவலகத்தில் இருந்து அமீனா வந்திருந்தார். "உங்க கம்பெனி ரெண்டு லட்சம் சொச்சம் வரிபாக்கி கட்ட வேண்டி யிருக்கு''னு சொன்னார். அலட்சியமாகச் சொன்னவர், பவுச்சை உடைத்து, 'பானை' இடது கையில் போட்டு, வலது பெருவிரலை வைத்து நன்றாக நசியம் பண்ணி, தட்டி வாயில் போட்டுக் கொண்டார். பின்னர் ஒட்டியிருந்த 'பான்' பாக்குத்துகள் கையை விட்டு முற்றிலும் அகலும் வண்ணம் நன்றாகத் தட்டி விட்டுக் கொண்டார்.

"அப்படியா? எந்த வருசத்துக்கான வரி?" நான் ஆர்வமின்றிக் கேட்டுக் கொண்டிருக்க, அமீனா ஆபீஸை ஒரு சுற்று சுற்றிப் பார்வையிட்டார். "ஆபீஸிலே நீங்க ஒருத்தர்தானா?" என்றார். நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லாமல்.

"ஆமாம்... உதவிக்கு ஒரு அசிஸ்டெண்டும் உள்ளார்'' என்று நான் சொன்னதைப் பெரிதாய்ச் சட்டை செய்யாமல், அடுத்த கேள்வியையும் அமீனா தொடுத்தார். "இங்கே ஆபீஸிலே உள்ள ரெப்ரிஜரேட்டர், ஏர்கூலர், ஹீட்டர், இந்த மேஜை மற்றும் ஸ்டோர்வெல் எல்லாம் கம்பெனியுடையதுதானா?"

"ஆமாம்" என்று எரிச்சலாய்ச் சொன்ன நான், "நான் கேட்டதற்குப் பதில் சொல்லுங்க... எந்த வருஷத்துக்கான வரி பாக்கி இது?'' என்றேன்.

"1998-99ம் வருஷத்துக்கானது... இன்னும் இரண்டு நாளில் கட்டலைன்னா நாங்க உங்க ஆபீஸுக்கு 'சீல்' வைக்க வேண்டியிருக்கும்... பிறகு பத்து நாளைக்குள்ள இங்கே ஆபீஸி லுள்ள சாமான்களை ஏலத்துலே விட்டுடு வோம்..." காவிப்பல் தெரிய இளித்தான். உன்னை இந்த இக்கட்டிலிருந்து காப்



பாற்ற எவ்வளவு பணம் தரப் போகிறாய்? என லஞ்சம் கேட்பதற்குத்தான் இப்படி இளிக்கிறான் என்பதை அனுபவசாலிகள் எளிதில் புரிந்து கொள்ள முடியும்.

அவன் கொடுத்த டிரேட் டாக்ஸ் நோட்டீ ஸைக் கையெழுத்துப் போட்டு வாங்கிக் கொண்டேன். லக்னோவிற்கு வந்து இந்த ஆபீஸை ஒப்புக் கொண்டதில் இருந்து இப்படி ஏதாவது பிரச்னை, ஒன்று விட்டால் இன் னொன்று முளைத்துக் கொண்டிருக்கிறது...

அமீனாக்கள் பொதுவாக நேரடியாக விஷ யத்திற்கு வர மாட்டார்கள். "சாமி ஷேர்ட்

**சொ. பிரபாகரன்**



டோவே ஆபிஸிலே இல்லியே... நீங்க சாமி கும்பிட மாட்டீங் களா?" என்றார்.

"ஏன் சாமி போட்டோ வச்சிருந்தா, வரி கட்டாட்டாலும் 'சீல்' வைக்க மாட்டீங்களா?"

அவர் சிரித்ததில், சாறு என் முகத்தில் தெறித்தது போலிருந்தது.

"பையா ஸாப், அப்படியில்லை. சாமி படத்தை வச்சு நீங்க என்ன கோத்திரமுனு கண்டுபிடிச்சுடுவேன்..."

"நான் பிராமணன் இல்லை... க்ஷத்திரியா இல்லை... வைசிக்கும் இல்லை... அதுக்காக மௌரியா, கௌதமும் இல்லை... என் பேரு பிரபாகரன்... அதனால எல்.டி.டி.ஈ.னு புரிந்து கொண்டா, அதுவும் தப்பு... என் பெயரை வச்சு என் கோத்திரம், குலம், சாதி எதையும் கண்டுபிடிக்க முடியாது..."

எனது மேற்கண்ட பதிலில் உள்ள சலிப்பைப் பார்த்து, நான் ஏதோ பிரச்னை வந்தால் ஓடி ஒளிந்து கொள்பவன் என

# லஞ்சம்

என்னை எடை போட்டு விடாதீர்கள். எனக்கும் சவால் விடும் வேலைகளை எதிர்கொண்டு சாதனை புரிவது பிடிக்கத்தான் செய்யும். ஆனால் இந்த 'சரிகட்டும் வேலை'களை நான் சாதனையாக நினைப்பதில்லை.

"நீங்க ஏன் முன்னுக்கு வரலை? உங்களை மட்டும் ஏன் லக்னோ டிரான்ஸ்பர் செய்றாங்க...?" என என் மேல் குற்றம்சாட்டினாள் எனது பத்னி... குழந்தைகள் கூட என்னை 'உர்'ரென முறைத்

"ஒருவர் மற்றவரை ஏமாற்றுவதற்கு, தண்டிப்பதற்கு, சுரண்டுவதற்குக் காரணம் சொல்ல முடியாத பட்சத்தில், உபயோகிக்கும் நாகரிகமான நவீன வார்த்தைதான் இந்த 'டிஸ்கிரிஷ்னரி பவர்'."

தார்கள்.

'சரிகட்ட தெரியாதவன் சரியான முட்டாள்' என்பது அவர்கள் அபிப்ராயம். இந்த மாதிரியான அபிப்ராயம் குடும்பத்திற்குள் வளர்வது வருங்கால இந்தியாவுக்கு நல்லது இல்லைதான்.

யு.டி.ஐ. ஊழலில் ஒருவர் மாட்டிக் கொண்டபோது, தாங்கள் சுத்தவான் போல் கைகொட்டிச் சிரித்தது என் குடும்பம். டிட்கோ வழக்கில் ஓர் அரசியல்வாதி மாட்டிக் கொண்டபோது புளகாங்கிதம் அடைந்தது என் குடும்பம். அதோடு விட்டால் பரவாயில்லையே, இன்னும் ஒரு படி மேலே போய், ஊழல் புரிந்தவர்களுக்கு மிகவும் கடுமையான தண்டனை கொடுக்க வேண்டும் என்று பரிந்துரைக்க வேறு செய்தது என் குடும்பம். ஆனால் அதே என் குடும்பந்தான் அவர்களுக்கு உள்ள திறமையில் 1% கூட எனக்கு இல்லை என்றும், எனக்குச் சம்பாதிக்கத் தெரியவில்லை என்றும் எகத்தாளமாய்க் கிண்டலும் செய்கிறது.

"ஏதோ கை சுத்தமாய் இருப்பதினால் தான் நான் இன்னும் தப்பிக் கொண்டு இந்த கம்பெனியில் இன்னும் வேலை பார்த்துக் கொண்டு இருக்கிறேன்..." என்று நான் ஏக பெருமூச்சு விட்டபோது, எனது பத்னி சீறினாள்.

''யாரையானாலும், எப்ப வேணுமானாலும் ஏதாவது காரணம் சொல்லிக் குற்றம் சுமத்தி, தண்டிக்கிறது ஒண்ணும் இப்ப பெரிய கஷ்டமான காரியம் இல்லை..''

"நீ இதனாலே என்ன சொல்ல வர்றே?"

"நீங்க சுத்தமாய் இருக்கிறதுனாலே உங்களை வச்சுக்கிட்டு, உங்க கம்பெனியிலே அழறாங்கனு தப்பால்லாம் நெனைச்சுகிட்டு இருக்காதீங்க... உங்க கம்பெனிக்கும் உங்க அழுகுணி தனம் தெரியும். முன்னேயும் போக மாட்டீங்க. பின்னேயும் வர விட மாட்டீங்க. உங்களை லக்னோ டிரான்ஸ்பர் பண்ணினாலே போதும், நீங்க சரியாயிடுவீங்கன்னு நம்பித்தான் உங்களை இங்கே மூட்டைக் கட்டி அனுப்பிச்சிருக்கு..."

டைவர்ஸ் வாங்கிட்டு வானபிரஸ்தனாய் ஆகிடலாம் என பலமுறை யோசித்து இருக்கிறேன். ஒருமுறை ஆத்திரத்தில், "டைவர்ஸ் பண்ணிடுவேண்டி..." என்று கூட கத்தியிருக்கேன்.

"அதுக்குக் கூட துணிச்சல் வேண்டும். உங்ககிட்ட இல்லாததைப் பற்றி எல்லாம் பேசாதீங்க..." என்று என் மிரட்டலை தூசி மாதிரி ஊதி விட்டாள் அவள்.

ஆக பல மாதங்களாய் முடிவெடுத்து, திட்டவட்டமாய்ச் செயல்புரிவது என முடிவெடுத்தேன். அப்பத்தான் மற்றவர்களால் அசட்டை செய்யப்படும் அவலத்திற்கு ஆளாகாமல் தப்பிக்கலாம்...

"அமீனா... சாரி... வெரி சாரி.. உங்க பேர் என்ன? ஆர்.டி.துபேயா? ஆங்.. மிஸ்டர் துபே! நீங்க ரெண்டு நாளில் பணம் கட்டச் சொல்றீங்க... நான் என் தலைமை அலுவலகத்துக்குத் தகவல் அனுப்பி, உடனடியா பணம் கட்ட ஏற்பாடு செய்துடறேன். கண்டிப்பா 28ம் தேதிக்குள் பணத்தைக் கட்டிடுவோம்..."

துபே விவரமான ஆசாமி. எங்களால் கட்ட முடியாது என்ற அனுமானத்திற்கு என்ன காரணத்தினாலோ உறுதியாக வந்திருந்தான். ''ஐயா, நீங்க தலைமை அலுவலகத்துக்குத் தகவல் அனுப்புவீங்களோ இல்லையோ அது பற்றியெல்லாம் எனக்குக் கவலையில்லை. பாக்கியை 'டாண்'னு 28ம் தேதி கட்டியிருக்கணும். கட்டாவிட்டால், 29ம் தேதி உங்க ஆபீஸுக்கு 'சீல்'தான்...'' சொல்லிவிட்டு,

> ''உங்கள் மகள் ஆட்டோ டிரைவரைக் காதலிக்கும் விஷயம் தெரிந்ததும் எப்படி இருந்தது?''
>
> ''தூக்கி வாரிப் போட்டது!''
>
> — எஸ். மோகன்

மரியாதை குறைவாக ஏதோ சைகை செய்து காட்டி னார்.

"அப்படியா? நன்றி!!! நீங்க போயிட்டு 29ம் தேதி வாங்க... அப்புறம் நாங்க பாக்கி வரியை கட்டாட்டி, 'சீல்' வச்சிடுங்க!'' நானும் துபேயைப் போலவே, சைகை செய்தேன்.

ஒரு வினைக்கு எதிர்வினை புரியும்போது, நாமும் எவ்வளவு மட்டமான ஆசாமியாகி சாக்கடையில் விழுந்து புரள்கிறோம் என்பது அப்போதுதான் புரிந்தது.

கோபத்தில் துபேயின் தலையிலும் நீராவி பறந்தது. ஒரு சல்லிக்காக என்னிடம் இருந்து பெயராது என்று தெரிந்ததும், தனது அடுத்த அஸ்திரத்தைப் பிரயோகித்தார். ''கவர்ன்மெண்ட் ஆபீஸர்கிட்டே மோதறச்சக்காதீங்க... எங்க சேல்ஸ் டாக்ஸ் கமிஷனருக்கு இருக்கிற 'டிஸ்கிரிஷனரி பவர்' பற்றி உங்களுக்கெல்லாம், என்னய்யா தெரியும்?''

'டிஸ்கிரிஷனரி பவர்' என்பது எனது அகராதிப்படி ஒரு 'கெட்ட வார்த்தை'. என்னை லக்னோ டிரான்ஸ்பர் பண்ணினதும், 'ஏன்?'னு கேட்க எங்க சீஃப்பிடம் போனேன். அவர் உடனே அவரது சுப்பீரியரிடம் பேசினார். கடைசியாகச் சொன்னார்: "டிரான்ஸ்பர் செய்தது மேனேஜ்மெண்டோட

'டிஸ்கிரிஷனிரி பவர்'. அதை நாம் கேள்வி கேட்க முடியாது..."

ஒருவர் மற்றவரை ஏமாற்றுவதற்கு, தண்டிப்பதற்கு, சுரண்டுவதற்குக் காரணம் சொல்ல முடியாத பட்சத்தில், உபயோகிக்கும் நாகரிகமான நவீன வார்த்தைதான் இந்த 'டிஸ்கிரிஷனரி பவர்'.

"எங்கெல்லாம் 'டிஸ்கிரிஷனரி பவர்' இருக்கோ, அங்கெல்லாம் அதிகாரமும்; ஊழலும், சுரண்டலும் இருக்கும் என்பது என் அபிப்ராயம் துபே.. ஆனா அதைப் பற்றி விவரமா பேச எனக்கு நேரமும் இல்லை, சொன்னாலும் புரிந்து கொள்ளும் மனோ நிலையில் நீங்களும் இல்லை. நீங்க இப்ப இடத்தைக் காலி பண்ணிட்டுப் போங்களேன்.. நான் வேற வேலை செய்யணும்..."



"நாங்க எங்க வேலையை 29ம் தேதி காட்றோம்." துபே விட்டால் இன்றைக்கே தமது வேலையைக் காட்டி விடுவார் போல் துள்ளினார்.

தொலைபேசியைச் சுற்றினேன். எதிர் முனையில் எனது சீஃப் லைனில் வரும் வரை காத்திருந்தேன். வழக்கமான வந்தனம் முடிந்து விஷயத்திற்குள் புகுவதற்குள், எஸ்டிடி. பத்து ரூபாய்க்கு மேல் எகிறிவிட்டது.

"சார், டிரேட் டாக்ஸ் டிபார்ட்மெண்டில் இருந்து வந்த நோட்டீஸை நான் பெற்றுக் கொண்டேன். அதன் நகல்களை இன்றைய கூரியரில் அனுப்பி இருக்கிறேன். டாக்ஸ் இரண்டு லட்சம் சொச்சமும், அதற்கு வட்டி ஒரு லட்சம் சொச்சமும் சேர்த்து நாலு லட்சம் சொச்சம் மொத்தமா கட்ட வேண்டியிருக்கு.."

"என்னய்யா கணக்குப் போடுறீர்? டாக்ஸ் அரியர்ஸ் இரண்டு லட்சம் சொச்சம். வட்டி ஒரு லட்சம் சொச்சம். சரிதானே...? நீர் சொன்னதைத்தான் நானும் ரிப்பீட் பண்றேன். அப்ப ரெண்டும் சேர்த்து, மூணு லட்சம் சொச்சம் தானே வரும்...?"

"அது வந்து சார், டாக்ஸ் அரியர்ஸ் சொச்சமும், வட்டி சொச்சமும் சேர்ந்து, ஒரு லட்சம் சொச்சம் வந்துடுத்து சார்..."

சீஃப் முகத்தில் கொசு ஆடுவதை மானசீகமாய்ப் பார்த்து, என்னால் ரசிக்க முடிந்தது.

"அதெல்லாம் அவ்வளவு பெரிய அமௌண்டை உடனடியா கட்ட முடியாதுய்யா.." சரியாய் ஒரு தமுக்கடி அடித்தார்.

"சரி சார்... அப்பன்னா நான் ஃபோனை வச்சிடுறேன்.." நான் பதில் தமுக்கடி அடித்தேன்.

"என்னய்யா? பணத்தைக் கட்டிட்ட மாதிரி ஃபோனை வச்சிடுறேன்ங்கிறே? டாக்ஸை கட்டாட்டா, என்ன பண்ணுவாங்க தெரியுமா?" கொஞ்சம் பயம் குரலில் உறைந்திருந்தது.

"நம்ப லக்னோ ஆபீஸை 'சீல்' பண்ணிடுவாங்களாம்.."

"தெரிஞ்சுமா பதறாம இருக்கே?"

"பதறி என்ன பண்ண? லக்னோ வந்தப்பவே சித்தார்த்தனுக்குப் போதி மரத்துலே கிடைச்ச ஞானம் போலவே, நமக்கும் இந்த ஊருல கிடைச்சுப் போச்சு... என்னோட வேலை இருபத்தெட்டாம் தேதிக்குள் பணம் கட்டணும் என்ற விவரத்தை உங்களுக்குத் தெரிவிப்பதோட முடிஞ்சு போச்சு... இனி பணம் கட்றதும் கட்டாததும் உங்க தலைவலி... ஆமாம் இப்ப இந்தப் பிரச்னை ஹாஸ் பிகம் யுவர் பேபி... இந்த பேபியை சுமப்பதா, கலைப்பதானு முடிவு பண்றது உங்க டிஸ்கிரிஷனரி பவர்..." தொலைபேசியை 'கட்' செய்தேன். எஸ்.டி.டி. டிஸ்பிளே ஏற்கெனவே அம்பது ரூபாய் சொச்சம் ஆனதைக் காட்டிப் பல்லிளித்தது.

திட்டவட்டமாய்ச் செயல்படுவது என்பது இதுதான். சரியான நேரத்தில் கழற்றிக் கொள்வது...

என்னை அவமானப்படுத்துவதாக நினைத்துக் கொண்டு, லக்னோ ஆபிசில் ஏற்கெனவே இருந்த டெலிபோன் கனெக்ஷனைக் கூட வேண்டாம்னு எழுதிக் கொடுத்து விட்டார் சீஃப். இனி என்னைப் பிடிக்க டெல்லிக்கு ஃப்ளைட்டில் வந்து, அங்கிருந்து சதாப்தியைப் பிடித்து லக்னோ வந்தால்தான் உண்டு.

எங்க ஆபீஸில் உள்ள எனது சொந்த சாமான்களை எல்லாம் வீட்டிற்குக் கொண்டு போய் விட்டேன். ஆபீஸை எப்ப வேணா 'சீல்' வைக்கலாம். அதனால் நமக்கு ஒன்னும் நஷ்டம் இல்லை. இன்னொரு ஆபீஸுக்கு

# ஜபம்

தன் நண்பன் ஆனந்த் வீட்டுக்குச் சென்ற சேகர் அவன் வீட்டுக்கிளி 'கீச் மூச்' என்று கத்திக் கொண்டிருந்ததைக் கண்டு "நண்பா, என் வீட்டில் உள்ள கிளி எப்போதும் இறைவன் பெயரை ஜபித்துக் கொண்டிருக்கிறது. உன் கிளியை அதனோடு பழக விட்டால் இதுவும் திருந்திவிடும்" என்றான்.

உடனே ஆனந்த், தனது கிளியை சேகரிடம் கொடுத்து "உன் வீட்டுக்கு எடுத்துச் செல்" என்றான்.

சேகர் ஒரு புது கிளியோடு வருவதைக் கண்டது, அவன் வீட்டுக் கிளி, ஜபத்தை



நிறுத்திவிட்டு 'கீச் மூச்' என்று கத்தத் தொடங்கியது.

சேகர் அதிர்ச்சியோடு பார்த்தான்.

ஆனந்த் வீட்டுக் கிளி சேகர் வீட்டுக் கிளியைப் பார்த்துக் கேட்டது. "நீ எப்போதும் ஜபித்துக் கொண்டிருப்பதாக உன் முதலாளி சொன்னாரே?"

"உண்மைதான். பேச்சுத் துணைக்கு ஆள் இல்லாமல்தான் ஜபித்துக் கொண்டிருந்தேன். இப்போதுதான் நீ வந்து விட்டாயே."

வாய்ப்பு கிடைக்காததால் தப்பு செய்யாமல் இருப்பவன் யோக்யன் அல்ல!

மாற்றி அடிப்பார்கள். அவ்வளவுதான்...

கதறிக் கொண்டு ஆபீஸ் முன் ஒரு ஜீப் வந்து நின்றது. உள்ளே இருந்தது சீஃப்தான். கோபமாய் வந்தவர், "வாங்க சார், சௌக்கியமா இருக்கீங்களா? வீட்ல பாப்பா +2வில் ஸ்கூல் பர்ஸ்டாமே... தெரிந்ததும் ரொம்ப சந்தோஷமாய் இருந்தது" என்று சொல்லி நான் வரவேற்றதும், கொதிப்பு தணிந்து அப்படியே பெட்டிப் பாம்பாய் அடங்கி பஸ்மமாகி விட்டார்.

"எம் பொண்ணு ராத்திரி இரண்டு மணி வரைக்கும் படிச்சுட்டே இருப்பா. வெரி ஹார்ட் ஒர்க்கிங்" என்று அவர் உருகிப் போய்ச் சொல்ல, நானும் உருகிக் கொண்டிருந்தேன்.

திடீர்னு ஞாபகம் வந்தது போல, "இந்த டிரேட் டாக்ஸ் தொந்தரவுதான் தாங்கலைப்பா. நேரா டிபார்ட்மெண்டுக்குப் போய்ப் பேசிட்டேன். இன்னும் ஒரு மாசம் வட்டியோட கட்ட எக்ஸ்டன்சன் கேட்டேன். சரின்னு சொன்னவன், 25,000 ரூபாய் கேட்டுப் பல்லைக் காட்றான்..." என்றார். 25000 ரூபாயைக் கொடுத்தாரா, கொடுக்கப் போகிறாரா, அல்லது கொடுக்காமலேயே வந்தது வரட்டும் என பார்ப்பது என முடிவு பண்ணிட்டாரா? எந்த விவரம் எதையும் என்னிடம் சொல்லவில்லை.

"ஓ... மை காட்...!" என நம்ப முடியாதது போல நான் கண் விரித்து, ரொம்பவும் ஆச்சரியப்படுவது போல நடித்தேன். "எங்கிட்டே பத்தாயிரம் கொடுத்தால் போதும்னான். உங்களைப் பார்த்ததும், 25000 ரூபாய் ஆக்கிப் புட்டானே...!" என்றேன்.

"இதுதான்ய்யா இந்த கவர்ன்மெண்டோட பிரச்னையே... இதுதான் எல்லாத்தையும் பிரைவேட்டாய் ஆக்கணுங்கிறது...!"

"கவர்ன்மெண்டையே பிரைவேட்டாக்கிடணும்னு சொல்றீங்களா? நீங்க சொன்னா சரியாத்தான் இருக்கும்..."

ஒரு வாரம் கழிச்சு ஏதோ ஒரு காரியமாய் சேல்ஸ் டாக்ஸ் டிபார்ட்மெண்டுக்குப் போக வேண்டிய வேலை வந்தது. துபே வெற்றிப் புன்னகை உகுத்துக் கொண்டு என்னிடம் வந்தான். "எட்டணா காசு கொடுக்க முடியாதுனு சொன்னியே... பாத்தியா உன் சீஃப் சென்னையில் இருந்து வந்தான். வெறும் ஐயாயிரம்தான் கொடுத்தான். காரியம் சல்லிசாய் முடிஞ்சு போச்சு... எக்ஸ்டென்ஷன் ஒரு மாசத்துக்குக் கெடைச்சிருக்கு...!"

'இருபத்தையாயிரம் கொடுத்ததா சீஃப் சொன்னாரே...! பாப்பா பர்தர் ஸ்டடிக்காக ஐயாயிரத்தை மட்டும் கொடுத்துட்டு இருபது ஆயிரத்தை சீஃப் சுருட்டிக்கிட்டார் போலிருக்கு' என நான் நினைத்துக் கொண்டேன். ○



# 4½ ஏக்கரில் டி.டி. ஸ்டேடியம்!



• சந்திரசேகர்

சர்வதேச டேபிள் டென்னிஸ் (டி.டி) ஸ்டேடியம் அமைக்க சென்னை முகப்பேரில் நான்கரை ஏக்கர் நிலம் வழங்கியிருக்கிறது தமிழக அரசு.

"இப்போயிருக்கிற ஸ்டேடியங்கள்ல எல்லா விளையாட்டுகளும் நடக்குது. ஆனா, முழுக்க முழுக்க டேபிள் டென்னிஸுக்கு மட்டுமே இங்க ஸ்டேடியம் இல்ல; அதுக்காகத்தான், சர்வதேச தரத்துல ஸ்டேடியம் கட்ட நிலம் ஒதுக்கியிருக்காங்க. இந்த ஸ்டேடியம் ஒரு மேட்ச் முடிஞ்சதும் மூடி வச்சிடற மாதிரி இல்லாம, தினமும் பயிற்சிக்குப் பயன்படற வகையில இருக்கும்'' என்கிறார் சந்திரா டேபிள் டென்னிஸ் அகாடமியின் சந்திரசேகர்.

டேபிள் டென்னிஸில் நான்குமுறை உலக சாம்பியன்ஷிப்பும், மூன்றுமுறை ஆசிய சாம்பியன்ஷிப்பும் பெற்றுள்ள சந்திரசேகர், மெடிமிக்ஸ் உதவியுடன் தற்போது இந்த அகாடமியை நடத்தி வருகிறார்.

"நான் நடத்துற அகாடமிதான் இந்தியாவிலேயே டேபிள் டென்னிஸுக்கான பெரிய அகாடமி. 14 டேபிள் போட்டு, தினமும் பயிற்சி கொடுத்து, நிறைய பேரை உருவாக்குகிறோம். இரண்டுமுறை தேசிய சாம்பியன்ஷிப் வாங்கின 'மைதிலி' எங்க அகாடமியிலிருந்து வந்தவர்தான். இன்னும் நிறைய பேரைச் சொல்லலாம்" என்றவரிடம் "இந்த விளையாட்டின் தற்போதைய நிலை எப்படி இருக்கிறது?" என்றோம்.

''டேபிள் டென்னிஸ் பற்றி மக்களிடம் பரவலான விழிப்புணர்வு இல்லைங்கறது உண்மைதான். வேலை, எதிர்பார்ப்பு தொடர்பான நிலையில விளையாட்டுகள் ஆகிட்டிருக்கு. கிரிக்கெட், செஸ், டென்னிஸ், எல்லாமே பணம் காய்க்கிற விளையாட்டா மாறிப் போச்சு. ஆனா டேபிள் டென்னிஸ் ஆடி ஜெயிச்சு வந்தா ஒரு வங்கில கிளார்க் வேலை கிடைக்கும். அப்ப இதுக்கு எப்படி ஆர்வமாகப் பெற்றோர்கள் அனுப்புவாங்க? அவங்களுக்கும் கிரிக்கெட்னா தம் பிள்ளை காவஸ்கராயிடணும், செஸ்னா ஆனந்த் ஆயிடணும்னு எதிர்பார்ப்பு! என்று உஷ்ணமான சந்திரசேகரிடம், "உலக அளவில் டேபிள் டென்னிஸில் சீனா நம்பர் ஒன்னாக இருக்கிறது. இந்தியாவின் இடம் 45, இதை முன்னேற்ற ஏதாவது வழியிருக்கிறதா?" என்றோம்.

"இந்த விளையாட்டுல சீனா நம்பர் ஒன்னா இருக்குன்னா அதுக்கு அந்த நாட்டு அரசும் காரணம். ஒவ்வொரு விளையாட்டுக்கும் முன்னாள் ஆட்டக்காரர்களைக் கொண்டு ஒரு கமிட்டி உருவாக்கணும். அவங்களுக்கு முழு சுதந்தரம் கொடுத்து, இந்த வருடம் இந்த 'டார்கெட்டை' தொடணும்னு ஒருமுறை வைக்கணும். அப்படி பண்ணினா டேபிள் டென்னிஸ் மட்டுமல்ல, எல்லா விளையாட்டுலயும் முன்னேறலாம்."

— சலாம்ஜி

படங்கள்: வெங்கடேஷ்

# உலகத் தரம் வாய்ந்த பிட்ச்?



'நம் நாட்டு கிரிக்கெட் மைதானங்களிலும் உலகத் தரம் வாய்ந்த 'பிட்ச்'சுகள் தயார் செய்வோம்' என்று இந்திய கிரிக்கெட் சங்கத் தலைவர் ஜக்மோகன் டால்மியா சமீபத்தில் அறிவித்தார்.

இது எந்த அளவுக்குச் சாத்தியம்?

சேப்பாக்கம் கிரிக்கெட் மைதான கிரவுண்ட் சூபர்வைசர் கே.பார்த்தசாரதியை விசாரித்தோம்.

"இந்தியாவில் அதிவேகப் பந்து வீச்சுக்கு ஏற்ற 'பிட்ச்'கள் தயாரிப்பதில்லை. ஏனென்றால் நம்மிடையே அதிவேகப் பந்து வீச்சாளர்கள் குறைவு. உலகத் தரம் வாய்ந்த 'பிட்ச்' என்றால் அதை ஸ்போர்ட்டிங் பிட்ச்' என்றுதான் சொல்ல வேண்டும். அதாவது, பந்து வீச்சாளர்கள் விக்கெட்டை வீழ்த்தவும் பயன்பட வேண்டும். பாட்ஸ்மென் நிறைய ரன்கள் எடுக்கவும் முடிய வேண்டும். ஆட்டமும் டிராவில் முடியாமல், ஒரு தீர்மானமான வெற்றி அல்லது தோல்வி என்ற முடிவைத் தர வேண்டும். மக்களும் உட்கார்ந்து ரசிக்க வேண்டும்.



• கே.பார்த்தசாரதி

"ஒவ்வொரு ஐந்து வருட இடைவெளிக்குப் பிறகும் 'பிட்ச்'சை மாற்றி அமைக்க வேண்டும். புதுப்பிக்கப்பட்ட மாதிரி இருக்க வேண்டும். மண்ணை எடுத்து, இறுக்கி, அடித்தளத்தைத் திடமாக (ஹார்டாக)ப் போட வேண்டும். இப்போது 15 வருடமாகிறது. முன்பாவது மூன்று மாதம் இடைவெளி இருந்தது. கவனிக்க முடிந்தது. இப்போதெல்லாம் தொடர்ந்து ஏதாவது ஒரு மாட்ச் நடந்து கொண்டே இருக்கிறது. 19 வயதுக்குக் கீழே உள்ளவர்களின் மாட்சுகளையாவது வேறு மைதானங்களில் வைத்துக் கொள்ளலாமே?

"ஒரு ' ஸ்போர்ட்டிங் பிட்ச்' ஹார்டாக பந்து பவுன்ஸ் ஆகிற மாதிரி, புல்லோடு, கொஞ்சம் வறண்டு இருக்கணும். அப்படி இருந்தால், ஆரம்பத்தில் வேகப் பந்து வீச்சாளர்களுக்கு உதவும். பாட்ஸ்மன் ரன்கள் எடுக்கலாம். மூன்றாம் நாள் ஸ்பின் பௌலிங்குக்கு உதவும். பந்தை பௌல் செய்த பிறகு கொஞ்சம் ஓடுகிறார்கள் அல்லவா, ஃபாலோ த்ரு என்பார்களே, அப்போது அந்த இடம் எல்லாம் சொறசொறத்துப் போய் பிளவுகள் தோன்றும்போது, சுழல்பந்து வீச்சாளர்களுக்கு உதவும்.

"நம் நாட்டில் நடைபெறும் போட்டிகளில் நாம் ஜெயிக்க வேண்டும் என்பதற்காக, போர்டு எப்படி தயாரிக்கச் சொல்லுகிறதோ அப்படித்தான் தயாரிக்கிறோம். அடியில் ஆற்று மணலை நிரப்பி, அதற்கு மேல் செங்கல்லை மூன்று தளங்களாக நீள வாக்கிலும், உயர வாக்கிலும் மாற்றி அமைத்து விட்டு, மேலே செம்மண்ணைப் போட்டுவிட்டு, அதற்கு மேலே புல் வளர்த்து, அது துளிகூட நீட்டிக் கொண்டிராமல் வெட்டி விடுவோம்.

"நம் மைதானம் இன்டர்நேஷனல் கிரவுண்டுதான். மூன்று மாதம், நேரம் கொடுத்தால் வேகப் பந்து வீச்சுக்குத் தகுந்த மாதிரி தயார் செய்து விட முடியும். எல்லா மாதமும் மாற்றி மாற்றி மாட்சுகள் நடந்து கொண்டிருந்தால், 'பிட்ச்'சில் எப்படி 'லைஃப்' இருக்கும்?"

கிரிக்கெட்டை ஒரு 'மென்ட்டல் கேம்' என்கிறார் பார்த்தசாரதி. பாட்ஸ்மென்னின் வீக் பாயின்ட் எது என்று அறிந்து அவரை 'அவுட்' ஆக்கப் பார்க்கிறார் பந்து வீச்சாளர். அவரது பாணியைப் புரிந்து கொண்டு ரன்களைக் குவிக்கப் பார்க்கிறார் பாட்ஸ்மென். இதற்கு உதாரணமாக கவாஸ்கர், ஜி.ஆர். விசுவநாத், கபில்தேவ் ஆகியவர்களின் ஆரம்ப கால பிற்கால டெக்னிக்குகளைக் குறிப்பிடுகிறார்!

— சித்தார்த்

புகைப்படம் : வெங்கடேஷ்

# பொய்யில் பூத்த நிஜம்

## 9

இவர்கள் வருவதற்கு அரைமணி முன்ன தாகத் தான் வந்திருக்க வேண்டும் என்று அடுக் கடுக்காய் எண்ணங்கள் அந்தத் தருணத்தில் சகுந்தலாவுக்குத் தோன்றின. இவர்களது வரு கைக்கு ராஜாவைத் தயார் செய்திருக்க முடிந் திருக்கும். அதைவிட முக்கியமாக தனது அடி மனத்தில் தேங்கி உறைந்து போயிருந்த பீதியும் கலக்கமும் தெளிவடைந்துபோன சந் தோஷத்தை அவனிடம் தெரிவிக்க, அந்தரங்க மான நேரம் தேவைப்பட்டது. அவன் கையைப் பிடித்துக் கண்ணீர்விட, அவனது கன்னத்தில் முத்தமிட்டுத் தாபத்தை வெளிப்படுத்த சமயம் வேண்டியிருந்தது. அதை அவர்களது வருகை யால் தான் தவறவிட்டதாகத் தவிப்பேற்பட் டது. அவளது முகம் அவனது பார்வையில் பதிவதற்குமுன் அவர்கள் நுழைந்தது அவர் களது தவறல்ல. அவள் உள்ளே அப்போது தான் நுழைந்தாள் என்று தெரிந்தும் இங்கிதமில் லாமல் அவர்களை உள்ளே அழைத்து வந்து விட்ட விவேக்கின்மேல் அவளுக்குக் கோபம் ஏற்பட்டது.

அவள் சொல்லத் தெரியாத பரிதவிப் புடன் ராஜாவைப் பார்த்தாள். ஆக்ஸிஜன் கருவி வாயையும் மூக்கையும் கவ்வியிருக்க, கண்கள் மட்டுமே திறந்திருந்தன. அவளை அந்தக் கண்கள் கவனிக்கவில்லை என்பது விநோதமாக இருந்தது. அவை அவளைத் தாண்டி பின்னால் இருந்தவர்களை மட்டுமே கவனித் தன. அந்த விழிகள் சென்ற திசை யில் அவளும் திரும்பினாள். சரவணன் சற்று பின்னாலும் அவருக்கு முன்னால் முந்திக் கொண்டு நிற்பவள் போல காமாட்சியும் நின்றிருந்தார்கள். அவர்களது பார்வை வட்டத்துக் குள்ளும் தான் இல்லாததை அவள் உணர்ந்தாள். சரவணனின் முகத்தின் இறுக்கம் தளர்ந்து வருவது நம்ப முடி யாததாக இருந்தது. காமாட்சியின் முகம் துக்கம், தவிப்பு, ஆற்றாமை என்ற பலவகை உணர்வு களைப் பிரதிபலித்தது. திடீரென்று புன்னகையில் விரிந்து கண்டத்திலிருந்து 'ராஜா!' என்ற வார்த்தை ஒலித்தது.

உச்சரிக்கப்பட்ட ஒவ்வொரு அட்சரமும் உயிர்பெற்று ஜீவாதார மந்திரம் போல ஆஸ்பத்திரியின் அந்த வார்டின் சுவர்களை முட்டி மோதி மீண்டும் மீண்டும் ஒலித்து நாடி நரம்புகளை உசுப்பிவிட்டது. சரசரவென்று ஜீவனுள் இறங்கி கருமையத்தில் உறங்கும் குண்டலினியை தட்டியெழுப்பும் சக்தி கொண் டதாக. உறைந்த நிலையிலிருந்து சகுந்தலா விழித்தெழுந்து ராஜாவின் பக்கம் திரும்பி னாள். வாயை பிளாஸ்டிக் குமிழ் மூடியிருந்தாலும் அம்மா வைக் கண்டு ராஜாவின் கண்கள் சிரிப்பதை உணர முடிந்தது. வரனை அனைத்து



'அம்மா' என்று சொன்னது தெரிந்தது. காமாட்சியின் அந்த அகண்ட புன்னகைக்கான காரணம் புரிந்தது. ராஜாவின் சுமுக வரவேற்பை எதிர்பாராத அதிர்ச்சியில் காமாட்சியின் கண்களில் நீர் ஆறாகப் பெருகிற்று. சரவணன் சற்றுத் தயங்கி முன்னால் வர, ராஜாவின் கண்களின் பரிவான பார்வை அவர் மீது படர்ந்தது. சரவணன் கனவில் நடப்பவர்போல சற்று அருகில் வந்து நின்று ராஜாவின் வலது தோளை ஆசுவாசமாகத் தட்டினார். உணர்ச்சிக் கொந்தளிப்பில் இருப்பவர் போலத் தவித்தார். ராஜா



வாஸந்தி

ஏதோ சொல்வதுபோல இருந்தது. கண் இமைகள் களைப்புடன் மூடி மூடித் திறந்தன. சகுந்தலா அருகில் செல்வதற்குள் காமாட்சி அவன் வாயருகில் குனிந்தாள்.

"என்னடா ராஜா? என்ன கண்ணு சொல்றே?" ராஜா சிரமப்பட்டு சொன்ன வாக்கியத்தைக் கேட்டபிறகு நிமிர்ந்து பாசத்துடன் அந்த மூடும் கண்களை வருடியபடி தலையை வருடியபடி சொன்னாள்.

"இப்ப அப்பாவுக்கு ஒண்ணுமில்லே. அஞ்சு வருஷமா கடவுள் புண்ணியத்திலே நல்லா இருக்காரு. நீயும் நல்லா ஆயிடுவே. ஏழுமலையான் கிட்டே பிரார்த்தனை பண்ணிண்டுதான் வந்திருக்கேன்."

"ராஜாவுக்கு அம்னீஷியா-ன்னு யார் சொன்னது? அவங்க அப்பா அம்மாவைத் தெரிஞ்சுண்டானே? உன்னை அவன் கவனிச்சிருக்க மாட்டான். நீ ஒண்ணு ஞாபகம் வெச்சுக்கணும். அவன் ரொம்ப பலவீனமான நிலையிலே இருக்கான்."

ராஜா களைப்பில் அல்லது நினைவு தப்பி கண்மூடினான். மீண்டும் நினைவு போய் விட்டதோ தன்னிடம் பேசுவதற்குள் என்று சகுந்தலா பதைத்து வெறிக்கையில், சரவணன்,

"என்ன சொன்னான்?" என்றார்.

"அப்பா ஏன் வந்தாங்க? ஹார்ட் அட்டாக் வந்த உடம்பிலேன்னான்!" கண்களை கர்சீப்பால் துடைத்தபடி பேசிய காமாட்சியின் குரலில் ஒருபிடி கொள்ளாத பெருமை தொனித்தது.

அவர்கள் அவளைக் கவனித்ததாகவே தெரியவில்லை. தான் எந்த வகையிலோ ஏமாற்றப்பட்டதாக சகுந்தலாவுக்குத் துக்கம் குமுறிற்று. ராஜாவின் முழு கவனமும் அந்த சொற்பநேர பிரக்ஞை நிலையில் அவர்கள் மீது மட்டுமே பதிந்திருந்ததாகப் பட்டது. இரண்டு ஆண்டுகாலமாக முகாலோபம் செய்யாத, செய்ய மறுத்த கோபத்தில் அவனும் அவர்களும் இருந்தது. அந்த மகத்தான தருணத்தில் மகா அற்பமாக அவனுக்குப் புலப்பட்டிருக்க வேண்டும். அது மிகப் பெரிய விஷயம் என்று அவள் தன்னைச் சமாதானப்படுத்திக் கொண்டாள். ஆனால் அந்தத் தருணத்தில் அவளையும் அல்லவா அவன் நினைத்துப் பார்த்திருக்க வேண்டும்? அவளை அல்லவா அவனுடைய கண்கள் தேடியிருக்க வேண்டும்? ஏன் தேடவில்லை? தான் எதிரில் நின்றும் அவளைக் கவனிக்காதவன் போல அவர்களையல்லவா பார்த்துச் சிரிக்கிறான், ஏதோ காலங்காலமாக அவர்களுக்காகக் காத்திருந்தது போல? தனக்கு உண்மையில் அவர்கள்மேல் எந்த மனஸ்தாபமும் இல்லை என்று வெளிப்படுத்தவா? உங்களுக்கு இவளைப்பற்றித் தெரிவிக்காததற்கு என் மேல கோபப்படாதீர்கள் என்கிற சமானிப்பா அது? அவளைப் பற்றின நினைப்பே அவனுக்கு இருந்ததாகத் தெரியவில்லை என்று அடி வயிற்றைக் கலக்கிற்று.

"கொஞ்சம் விலகி நில்லுங்கள்" என்று பரபரப்புடன் நர்ஸ் நுழைந்தாள். விவேக் அவளை அழைத்து வந்திருக்க வேண்டும் என்று சகுந்தலா நினைத்தாள். ராஜாவின் நாடியைப் பிடித்தபடி "பேஷன்டுக்குத் தொந்திரவு கொடுக்காதீர்கள். அவருக்கு ஓய்வு தேவை" என்றாள். சரவணனைப் பார்த்து, "உங்களைப் பார்த்தாரா? அடையாளம் தெரிந்ததா?" எனறாள். "ஆமாம்" என்றார் சரவணன். "ஒரு வாக்கியம்கூடப் பேசினான்."

"குட்!" என்ற நர்ஸ் விவேக்கை அர்த்த புஷ்டியுடன் பார்த்தாள். "இப்ப ஓய்வெடுக்க விடுங்கள்." சரவணனும் காமாட்சியும் அவள் சொல்லுக்குக் கட்டுப்பட்டவர்கள் என்று காண்பித்துக் கொள்ளும் விதமாக இலேசான

"டெல்லியிலிருந்து புறப்படுறப்ப இரண்டு கட்சித் தலைவர்களும் கட்டித் தழுவிக்கிட்டாங்க? சென்னையில் வந்ததும் கண்டுக்காம போறாங்களே!"

"டெல்லியில்தான் உறவாம்! இங்கே உறவு முறிஞ்சுடுச்சாம்!"

— வே. முருகேசன்

புன்னகையுடன் வெளியில் சென்றார்கள்.

சகுந்தலா தனது ஏமாற்றத்தை மறைக்க முடியாமல் நர்ஸின் தோளைப் பிடித்து,

"மறுபடியும் நினைவு போய்விட்டதா அவருக்கு?" என்றாள்.

நர்ஸ் சில விநாடிகள் மௌனமாக ராஜாவின் நாடியைப் பிடித்துப் பார்த்தபடி நின்றாள். பக்கத்தில் இருந்த மானிட்டரை நோட்டம் விட்டாள். பிறகு நிமிர்ந்து மென்மையாகச் சொன்னாள்.

"களைப்பினால் வந்த தூக்கமாக இருக்கலாம். நினைவும் வந்து வந்து போகலாம். ஆனால் கவலைப்பட வேண்டாம். மறுபடியும் நினைவு வந்து கண் திறப்பார். கொஞ்சமாப் பேசுங்க. பேஷண்டுக்குத் தொந்திரவு ஏற்படக் கூடாது."

சகுந்தலா சோர்வுடன் அவளைப் பார்த்துச் சொன்னாள்.

"என்னை அவர் பார்க்கவேயில்லை. அதற்குள்ளே நினைவு போய்விட்டது!"

நர்ஸ் சமாதானமாக அவள் கையை அழுத்தினாள்.

"இப்ப வார்டுக்கு வந்து விட்டாரே? நீங்கள் ஒருத்தர் பக்கத்திலே இருக்கலாம். நினைவு மறுபடி வரும்போது பார்த்துப் பேசுவார். டோன்ட் வொர்ரி!"

விவேக்கைப் பார்த்து, "கவலைப்படும்படியாக ஒன்றும் இல்லை" என்று சொல்லி விட்டுக் கிளம்பினாள். 'தாங்க்ஸ்' என்று முணுமுணுத்த விவேக், சகுந்தலாவின் தோளைத் தொட்டு "வா நாம வெளியில் இருப்போம்" என்று மெல்லிய குரலில் சொன்னான். சொல்லத் தெரியாத ஏமாற்றத்தில் அவனுடைய கண்களில் நீர் கோத்து விளிம்பு கட்டியது. வெளியில் வந்தபோது சரவணனும் காமாட்சியும் அங்கு இல்லாதது சற்று நிம்மதியளித்தது.

"என்னை ராஜா கவனிக்கவேயில்லை விவேக்!" என்றாள் அவள் ஆதங்கத்துடன். "அதற்குள்ளே நீ அவங்களை அழைச்சுட்டு வந்துட்டே. கொஞ்சம் பொறுத்து கூட்டிட்டு வந்திருக்கக் கூடாதா?"

விவேக் ஏதோ யோசனையில் இருப்பவன் போல மௌனமாக இருந்தான்.

சகுந்தலா தொடர்ந்தாள்.



"நீ கொஞ்சம் கூட யோசிக்கல்லே. எனக்கு உன்மேல ரொம்ப கோபம். அவன் கண் திறக்க மாட்டானா, எப்ப நினைவு வரும்னு தவிச்சுண்டிருக்கேன். அவனோட பேசணும், சிரிக்கணும்னு எத்தனை ஆசைப்பட்டு வந்தேன்! நீ எல்லாத்தையும் கெடுத்துட்டே."

"ஸாரி" என்று விவேக் முணுமுணுத்தான். "உண்மைதான். எனக்குத் தோணல்லே. அவங்க அம்மா ராஜாவை உடனே பார்க்கணும்னு அவசரப்பட்டதாலே யோசிக்காம அழைச்சிட்டு வந்தேன். ராஜா அவங்களைப் பார்த்துப் பேசினது ரொம்பப் பெரிய விஷயம் சகுந்தலா!"

"ஆமாம்" என்றாள் அவள் யோசனையுடன். "அவர்களைப் பார்த்து ராஜா எங்கே அப்ஸெட் ஆயிடுவானோன்னு பயந்தேன். எதுவுமே நடக்காத மாதிரி அவங்ககிட்டே பேசினதை என்னாலே நம்ப முடியல்லே."

"ஆச்சரியமாத்தான் இருக்கு" என்றான் விவேக் இலேசாக. "நல்லதுதானே?"

"நல்லதுதான்" என்றாள் சகுந்தலா. "என்னையும் பார்த்து ஒரு வார்த்தை பேசியிருந்தா சமாதானமாயிருந்திருக்கும்" என்று மெலிதாகச் சிரித்தாள்.

"வா கான்டீனுக்குப் போய் சூடாகக் காப்பி சாப்பிட்டுவிட்டு வரலாம்" என்றான் விவேக்.

"ராஜா முழிச்சுக்கிட்டான்னா?"

"அவ்வளவு சீக்கிரம் மாட்டான். இப்பத்தான் தூங்க ஆரம்பிச்சிருக்கான்."

"தூக்கம்தானா அது?"

விவேக் அவளை இலேசாக அணைத்தபடி நடந்தான். "கமான், இப்படி எல்லாத்துக்கும் கவலைப்படக் கூடாது."

மீண்டும் அசட்டுப் பிசட்டென்று கண்ணில் நீர் தளும்பிற்று.

"இன்னிக்குக் காலையிலே நீ என்னைப் பார்த்திருந்தா இப்படிச் சொல்லியிருக்க மாட்டே. நேத்து ராத்திரி கதிர் ஃபோன் பண்ணினான். ராஜாவுக்கு நினைவு வந்துடுத்து, கண் திறந்து 'நா எங்கே இருக்கேன்னு கேட்டான்'ன்னான். அதைக் கேட்டதிலேந்து எனக்குச் சந்தோஷத்திலே நிஜம்மாவே மூளை கிறுகிறுத்துப் போச்சு. சரியா தூங்கக் கூட முடியல்லே. இன்னிக்குக் காலையிலேந்து நா யாரைப் பார்த்தாலும் அவங்களை இழுத்து வெச்சு பைத்தியம் பிடிச்ச மாதிரி ராஜாவுக்கு இப்பத் தேவலை தேவலைன்னு சொல்லிண்டிருக்கேன்."

விவேக்கும் அவளுமாகப் பல தாழ்வாரங்களைத் தாண்டி, எதிரும் புதிருமாகச் சென்ற டாக்டர்களையும் நோயாளிகளைப் பார்க்க வந்த விசிட்டர்களையும் கடந்து சென்றார்கள்.

விவேக் சுற்று முற்றும் பார்த்து, "கான்டீன் போற ரூட்டை விட்டுட்டோம். இங்க 'நத்தூஸ்' ஒரு கான்டீன் வெச்சிருக்கு. அங்க போகலாம் வா" என்றான்.

**கா**ன்டீனில் மிதமான கூட்டம் இருந்தது. சமோசா ப்ரெட் பக்கோடா வாசனை வந்தது. இருவரும் இரண்டு காப்பி கோப்பைகளையும் ஒரு ப்ளேட் சமோசாவையும் வாங்கிக் கொண்டு காலியாக இருந்த ஒரு மேஜைக்குச் சென்றார்கள். மேஜைமேல் இருந்த டொமாட்டோ கெச்சப்பை சமோசாவில் கொஞ்சம் ஊற்றி அதில் தோய்த்து இருவரும் சாப்பிட்டார்கள். சமோசாவின் சூடு நாக்கைச் சுட்டது. அவளுக்கு வேண்டியிருந்தது. ஏமாற்றத்தை அதனுடன் விழுங்க முடிந்தது.

காப்பியை உறிஞ்சியபடி அவள் சிரித்தாள். "வேடிக்கை தெரியுமோ? நா ராஜாகிட்ட என்ன பேசணும்னு ஒத்திகையெல்லாம் பண்ணிண்டு வந்தேன்!" "போயிட்டு போகிறது" என்றாள் தொடர்ந்து சமாதானமாக. "மறுபடி அவன் கண்ணைத் திறக்கும்போது அந்தம்மா நுழையறதுக்கு முந்தி நா பேசிடணும்!" என்று சிரித்தாள்.

"உன்னை ராஜா பார்த்தானா?" என்றான் விவேக் யோசனையுடன்.

"பார்க்க ஆரம்பிச்சான். அதுக்குள்ளே அந்தம்மா முந்திக்கிட்டாங்க."

"கதிர் உங்கிட்ட என்ன சொன்னான்?"

"அதான் சொன்னேனே. ராஜா கண்திறந்தான்னான்."

"வேற ஒண்ணும் சொல்லல்லியா?"

அவள் யோசனையுடன் விவேக்கைப் பார்த்தாள். "இல்லையே? வேற என்ன? எனக்கு அதிகம் பேச முடியல்லே. பரத் அழ ஆரம்பிச்சுட்டான். என்ன விவேக்?"

விவேக் குனிந்து சமோசாவின் உள் பாகத்தை ஆராய்ந்தான். அதிலிருந்த பட்டாணியைப் பிரித்து முந்திரிப்பருப்பை வாயில் போட்டு மென்றபடி,

"ஒன்றுமில்லை" என்றான் ஆங்கிலத்தில்.

"நினைவு வந்தபோது கதிர் அங்கே இருந்தான். அவனை ராஜா அடையாளம் புரிந்து கொள்ள வில்லைன்னான்."

சகுந்தலா டொக்கென்று கையிலிருந்த கோப்பையைக் கீழே வைத்தாள். வைத்த வேகத்தில் அதிலிருந்த காபி தளும்பி ஸாஸரில் விழுந்தது.

"வாட்? இதை நீ ஏன் சொல்லலலே? ஆனால் அவனுடைய அப்பா அம்மாவை அடையாளம் தெரிஞ்சுண்டானே?"

"ஆமாம். அதனாலதான் நானும் சமாதான மாயிட்டேன். நேத்து கதிர் டாக்டர்கிட்ட சொன்னானாம், தன்னை அடையாளம் தெரிஞ்சுக்கல்லேன்னு. சில சமயம் சில ஞாப கங்கள் இந்த மாதிரி கேஸ்கள்லே மறந்து போகும். திரும்ப அது மெள்ள வரும் அதைப் பத்திக் கவலைப் படவேண்டாம்னு டாக்டர் சொன்னாராம். அவனுடைய அப்பா அம்மாவை உடனடியா தெரிஞ்சுண்டது நல்ல அறிகுறின்னு ட்யூட்டி டாக்டர் சொன்னார்."

சகுந்தலா திகைப்பு மாறாமல் அவனைப் பார்த்தாள். தான் வார்டில் நுழைந்ததும் ராஜா கண்ணைத் திறந்ததும் தான் எதிரில் நின்ற போதும் கண் விழிகள் சலனமற்று நிலைத்ததும் நினைவுக்கு வந்தது. தன்னையும் அடையாளம் தெரியாமல் போயிருக்குமா அவனுக்கு? இது நினைத்துப் பார்க்க முடியாத அபத்தமாகப் பட்டது.

"சே! ஐ கான்ட் பிலீவ் இட்!" என்று அவள் தயக்கத்துடன் சிரித்தாள். "சினிமாவிலேதான் இந்த மாதிரி கதைகள் வரும்."

"என்ன மாதிரி?"

"அம்னீஷியா அது இதுன்னு. கதைக்குச் சுவாரஸ்ய திருப்பம் கொடுக்க கதாசிரியர் களுக்கு ஒண்ணும் கிடைக்கல்லேன்னா, அம்னீஷியா கைகொடுக்கும்."

"ராஜாவுக்கு அம்னீஷியா-ன்னு யார் சொன் னது? அவங்க அப்பா அம்மாவைத் தெரிஞ்சுண்டானே? உன்னை அவன் கவனிச்சி ருக்க மாட்டான். நீ ஒண்ணு ஞாபகம் வெச்சுக் கணும். அவன் ரொம்ப பலவீனமான நிலை யிலே இருக்கான். இன்னும் முழுசா நினைவு வரல்லே. அவசரப்பட்டு எந்த முடிவுக்கும் வரக் கூடாது."

"எதை ஞாபகம் வெச்சுக்கணும்னு விருப் பம் இருக்கோ அதைத்தான் மனசு நினைவு வெச்சுக்குமாம். கதிரோட ஏதாவது அவனுக்கு மனஸ்தாபமா இருந்திருக்கும்" என்று அவள் ஜோக்கடிக்க முயன்றாள்.

"இருக்கலாம்" என்று விவேக் சிரித்தான், அவளை உற்சாகப்படுத்துகிற மாதிரி, "அநாவசி யமா குழப்பிக்காதே. இனிமே படிப்படியா ராஜா குணமாயிடுவான்."

# இரு வரங்கள்

ஒருவன் இறைவனை நோக்கிக் கடும் தவம் இருந்தான். ஆனால் அவன் அடியான மூடன். இறைவனுக்கு ரொம்ப வருத்தமாகி விட்டது.

இருந்தாலும் அவன் தவத்துக்கு இரங்கி நேரில் தரிசனம் கொடுத்தார். இறைவனை நேரில் கண்டதும் தவமிருந்தவனுக்கு சந்தோஷம் தாங்க முடியவில்லை.

இறைவன் அவனைப் பார்த்து, "என்ன வரம் வேண்டுமோ கேள் பக்தா" என்றார்.

சட்டென என்ன கேட்பது? என்று அவனுக் குப் புரியவில்லை. அவன் யோசிக்க ஆரம்பித்து விட்டான். "பக்தனே இதெல்லாம் நீ தவம் தொடங்கும் முன் யோசித்திருக்கவேண்டும். நீ யோசித்து முடிவு எடுக்கும் வரை நான் காத்தி ருக்க முடியாது. எனவே நீ நினைத்ததெல்லாம் நடக்கும்படி இரண்டு வரங்களைத் தருகிறேன். புத்திசாலித்தனமாகப் பயன்படுத்திக் கொள்" என்று கூறிவிட்டுப் புறப்பட்டார்.

"சரி கடவுளே" என மகிழ்ச்சியோடு வழி யனுப்பி விட்டு, யோசித்தவனுக்குத் தனது மூக்கு 'சப்பையாக' இருப்பதால் பலர் கேலி செய்தது நினைவுக்கு வந்தது.

"அப்படித்தான் நானும் நம்பறேன். எனக் காக வேண்டாம். அவங்க அம்மாவுக்காகவா வது பிழைக்கட்டும்னு பிரார்த்தனை பண் ணேன். எனக்குன்னு கேட்டா அந்தப் பொல் லாத கடவுள் என்னிக்குமே கொடுத்ததில்லை."

"தட் இஸ் ப்ளெயின் ஸில்லி!" என்று செல்லமாக விவேக் அவள் கையில் ஒரு அடி வைத்தான்.

"நிஜம்மாத்தான் சொல்றேன். என் கதை யைக் கேட்கறியா?"

"வேண்டாம் வேண்டாம் தாங்க் யூ" என் றான் விவேக் அவசரமாக.

அவள் சிரித்தாள்.

"எனக்கு ஒரு அவசர வேலை இருக்கு சகுந் தலா. நா கிளம்பணும். நீ வழக்கம்போல கிளம்பிப்போ. இங்க மறுபடி சாயந்திரம் நான் யாரும் வந்து பார்க்க முடியும். கதிர் வருவான். உனக்கு அடிக்கடி தகவல் சொல்வான்."

"ஓகே." என்று அவளும் எழுந்தாள்.

"டாக்டரைப் பார்க்க வேண்டாமா இன்னிக்கு?" என்றான்.

"டாக்டர் இன்னிக்கு ரொம்ப பிஸி. ரெண்டு மேஜர் ஆபரேஷன் இருக்காம். நாளைக்குத்தான் பார்க்க முடியும். அவசர தேவைக்கு ட்யூட்டி டாக்டர் இருக்கார். நீ கவலைப்படாதே."

சகுந்தலா சமாதானமாகாதவளாய் வார்டை



உடனே 'ஒரு வரத்தின் பலனாக மூக்கு நீள வேண்டும்' என வேண்டிக் கொண்டான். விளைவு! மூக்கு நீளமாகிக் கொண்டே போய் எதிர் சுவரில் முட்டி நின்றது. முகத்தை இந்தப் பக்கம் திருப்பினால் இந்தப் பக்கச் சுவரிலும் அந்தப் பக்கம் திரும்பினால் அந்தப் பக்கச் சுவரிலும் இடித்தது.

பயந்து போனான் அந்த பக்தன். 'அடடா மூக்கு இவ்வளவு நீண்டு விட்டதே, இதோடு வெளியே போனால் நிலைமை முன்பைவிட மோசமாகிவிடும்' என முடிவெடுத்து, 'கடவுளே அடுத்த வரத்தின் பலனாக மூக்கு முன்போல் ஆகட்டும்' என நினைத்து கொண்டான்.

மூக்கு பழையபடி ஆனது. அப்பாடா என்று பெருமூச்சு விட்டான் பக்தன்.

கடும் தவத்தின் பலனாகக் கிடைத்த இரு வரமும் இப்படி வீணேயானது. நோக்கமில்லா தவனின் கடும் உழைப்பும் வீணே.

நோக்கி நடந்தாள். ஏதோ ஒரு அசாதாரணம் நிகழ்ந்திருப்பதான ஒரு அச்சம் மனத்தில் புகுந்து அடி வயிற்றில் பாரமாய் இறங்கியிருந்தது. ராஜாவின் பெற்றோர்கள் நடந்து கொள்ளும் விதத்தை அவளால் புரிந்து கொள்ள முடியவில்லை. ராஜா பழசையெல்லாம் மறந்த சுமுகத்தோடு பேசியது அவர்களுக்கு அவளிடத்தில் சுமுகத்தை ஏற்படுத்தவில்லை. அவளை அவர்கள் உணர்ந்தே ஒதுக்குவது போல இருந்து. எங்கள் பிள்ளை அதிகாரபூர்வமாக உன்னை எங்களுக்கு அறிமுகம் செய்து வைத்தபிறகே நாங்கள் உன்னை ஏற்போம் என்று நினைக்கும் சம்பிரதாயக்காரர்களாகப்பட்டது.

**கா**லையில் கண் விழித்தபோது இன்றையபொழுது இப்படியாக முடியும் என்று நிச்சயம் அவள் நினைத்திருக்கவில்லை. எந்த அற்ப சந்தோஷத்தையும் பற்றின கனவோ எதிர்பார்ப்போ அவள் வரையில் பலித்ததே இல்லை என்று அவள் நினைத்துக் கொண்டாள். ஆனால் இன்றைய எதிர்பார்ப்பு அற்பமானதில்லை. அது வெறும் கனவல்ல. ஒரு பிரார்த்தனை. அல்லும் பகலும், ஒவ்வொரு விநாடியும், தூங்கும் நேரத்திலும் அவளை முழுசாக ஆக்கிரமித்த வேண்டுதல். அந்த உருவமற்ற அருவத்தின் சன்னிதானத்தில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து விடுத்த பிரார்த்தனை. அவளைச் சந்தித்தவர்கள் எல்லாம் அவளோடு கைகோத்து விடுத்த பிரார்த்தனை. பாபாக்களும் பிள்ளையார்களும் ஏழுமலையானும் அந்த உருகலுக்குக் கசிந்து இளகியதன் விளைவாக ஏற்பட்ட கண்திறப்பு. அது உண்மையாக இருக்குமா என்று அவளுக்கு இப்போது சந்தேகம் ஏற்பட்டது. உலகத்தில் ஏற்படும் மரணம் எல்லாம் போதிய அளவு பிரார்த்தனை செய்யப்படாததால் என்று நினைப்பது அபத்தம். பாட்டி நெற்றியைச் சுட்டிக்காட்டி 'இங்க என்ன எழுதியிருக்கோ அதுதான் நடக்கும்' என்பாள். அந்த ஒரு சமாதானத்தைத் தவிர நிகழும் அபத்தங்களுக்கு எந்த விளக்கமும் யாரும் கொடுக்க முடியாது என்று அவள் நினைத்துக் கொண்டாள்.

பாட்டியின் வார்த்தைகள் இன்று குரூரத்துடன் தாக்கியன. அவள் மீண்டும் ராஜா படுத்திருந்த வார்டில் நுழைந்தாள். கட்டில் அருகில் இருந்த ஸ்டூலில் அமர்ந்து அந்த மூடிய இமைகள் திறப்பதற்காகக் காத்திருந்தாள். சம்பந்தமில்லாமல் அவளுக்கு வேலைக்காரி சமேலியின் நினைவு வந்தது. சமேலி நேபாளத்திலிருந்து வந்தவள். அவர்கள் ஊர் சாலை வழியாக நேபாள ராஜா வரப்போகிறார் என்று கேள்விபட்டு சமேலியை அழைத்துக் கொண்டு ஊர் ஜனங்களோடு அவளுடைய அம்மா வெய்யிலில் நாள் முழுவதும் காத்து நின்றதையும் கடைசியில் ராஜா வராமலே போனதையும் ஏமாற்றப்பட்டது போல அவள் அழுததையும் சமேலி சொல்வாள்...

சகுந்தலா கிளம்ப எத்தனிக்கும் சமயத்தில் ராஜா கண் திறந்தான். முதலில் விட்டத்தைப் பார்த்தான். பிறகு அறையைச் சுற்றிப் பார்த்தான். அவள் துள்ளிக் கொண்டு அருகில் சென்றாள். பெரிதாகப் புன்னகைத்து அவன் கையைத் தொட்டு, 'ராஜா' என்றாள் காதல் பொங்க. அவன் அவளை வெறித்துப் பார்த்தான். அவளது ஸ்பரிசத்தால் கூசியது போல தன் கையை விலக்க முயன்றான்.

"ராஜா, நாதான் சகுந்தலா, தெரியல்லே?" எனும்போது கண்ணில் நீர் நிறைந்தது. மனத்தாங்கலுடன் குரல் வெடித்தது.

"எனக்கு உங்களைத் தெரியாது" என்றான் ராஜா ஆங்கிலத்தில் தெளிவாக.

அதிர்ச்சியில் அவளுக்கு அபத்தமாக சிரிப்பு வந்தது -- "இல்லே, இது நியாயமில்லே" என்றாள் ஆங்கிலத்தில்... தலையை அசைத்து.

ஆபரேஷன் தியேட்டருக்குள் புகுந்து டாக்டரின் சட்டையைப் பிடித்து இழுத்துவர வேண்டும் போல் இருந்தது.

(தொடரும்)





# துணுக்குகள்

## பூஜ்யம்!

பாதுஷா அக்பர், அவையினரைக் கேட்டார்.

''பன்னிரண்டில் நாலு போனால் எவ்வளவு?''

''எட்டு!'' என்றார்கள் அனைவரும்.

பீர்பால் சும்மா இருந்தார்.

''நீ என்ன சொல்கிறாய்?''

''பூஜ்யம்'' என்றார் பீர்பால்.

''அது எப்படி?''

''பன்னிரண்டு மாதத்தில் நாலு மாதம் மழைக் காலம். அதைக் கழித்துவிட்டால் என்ன மிஞ்சும்?'' எனறார் பீர்பால்.

- ஏ.கே.நாசர், லெட்சுமாங்குடி

## மூன்று சுவாசப்பை!

கேரள மாநிலம், திருச்சூரைச் சேர்ந்தவள் 'சுஜி'. 11 வயது ஆகிறது. திடீரென்று ஒரு நாள் காய்ச்சல். மருத்துவமனையில் சேர்க்கப்பட்டாள். அவளைப் பரிசோதித்த டாக்டர்கள், அவளுக்கு மூன்று சுவாசப்பைகள் இருப்பதைக் கண்டு வியந்தனர்.

- பி.எஸ்.முருகேஷ், ஈரோடு

## தடுக்காதீங்க!

ஹிட்லரும் முசோலினியும் கப்பல் பயணம் செய்து கொண்டிருந்தபோது, இருவரில் யார் பெரிய சர்வாதிகாரி என்ற போட்டி ஏற்பட்டது. முசோலினி சொன்னார். "நான் ஆணையிட்டால் இத்தாலியில் எந்த ஒரு நபரும் நாட்டுக்காக உயிரைவிடத் தயாராக இருப்பார்!"

''பூ, இவ்வளவுதானே; ஜெர்மானியர் எனக்காகவே உயிரைவிடத் தயாராயிருப்பார்கள்" என்றார் ஹிட்லர். அதை நிரூபிக்கவும் முற்பட்டு, மாலுமி ஒருவரை அழைத்தார். ''குதி'' என்று கடலைக் காட்டினார். மாலுமி, முகத்தில் சந்தோஷம் கொப்பளிக்கக் குதித்துவிட்டான். இன்னொருவனையும் கூப்பிட்டு அலைகடலைக் காட்டி ''குதி'' என்றார். ஆனந்தமாய்க் குதித்துவிட்டான்!

மூன்றாவதாக ஒரு மாலுமியையும் ஹிட்லர் குதிக்கச் சொன்னபோது, முசோலினி அவனிடம் ஓடிச் சென்று தடுத்து, "உனக்கென்ன பைத்தியமா? ஏன் கடலில் குதிக்கிறாய்?" என்று கேட்டார்.

"ஐயோ! என்னைத் தடுக்காதீங்க" என்று அலறிய அந்த மாலுமி,

''இந்த ஆளிடம் வேலை செய்யறதைவிட சாகறது எவ்வளவோ மேல்!" என்றான்.

- என். ஜரினா பானு, திருமலைராயன்பட்டினம்

## மூன்று மைல்!

உலகிலேயே மிகப் பெரிய இரயில் வண்டியைத் தயாரித்த பெருமை சோவியத்து யூனியனுக்கு (ரஷ்யா) உண்டு. மூன்று எஞ்சின்களைக் கொண்ட இந்த






# வள்ளுவர் தேன்கூடு

சரக்கு ரயிலின் நீளம் சுமார் 3 மைல். 3220 டன் எடை சரக்குகளை ஏற்றிச் செல்லக் கூடிய இந்த ரயிலில் 321 வாகன்கள்!

- ப. யோகநாதன், சென்னை

## வித்தியாசமான ஓவியம்?

பளிங்குக் கல்லிலே ஒரு சிற்பி ஒரு நாயின் உருவத்தை வடித்து வைத்தான். கல்லைக் கண்டால் நாயைக் காணோம்! நாயைக் கண்டால் கல்லைக் காணவில்லை! என்று பார்த்தவர்கள் அதிசயிக்கும் படி அந்தச் சிற்பம் அமைந்திருந்தது. இங்கே நீங்கள் பார்க்கும் ஓவியத்தில் திருக்குறளுக் குள்ளேயே அதை எழுதிய திருவள்ளுவ ரின் உருவத்தையும் மிக நேர்த்தியாக வரைந்திருப்பதைத்தான் காண்கிறீர்கள். கடலூர் மாவட்ட பாரதிதாசன் இலக்கிய மன்றம் நடத்திய ஓவியப் போட்டியில் முதல் பரிசு பெற்ற ஓவியம்தான் இது. வரைந்த ஓவியர் எஸ்.ரவி.

தகவல் : கடல் நாகராசன், கடலூர்

## தம்மாத்தூண்டு கீதை!

பெங்களூரைச் சேர்ந்த மாஜிக் நிபுணரான ஜெகதீஷ் சுக்லாவிடம் உலகி லேயே மிகச் சிறிய அளவிலான குரான், கீதை மற்றும் பைபிள் புத்தகங்கள் உள்ளன. இதை கின்னஸ் புத்தகத்தில் பதிவு செய்ய விண்ணப்பித்திருக்கிறாராம்!

- ஏ. குமார்

## இவ்ளோ புனை பெயர்கள்!

சமதர்மன், சம்மட்டி, சாவடி, சிறை புகுந்தோன், கொழு, சௌமியன், ஆணி, ஒற்றன், காலன், கிராணிகன், குறிப்போன், துரை, குறும்பன், பித்தன், நக்கீரன் பேகன், வேலன், வழிப்போக்கன், வீனஸ், வீரன், நீலன், பரதன் – இவையெல்லாம் என்ன என் கிறீர்களா?... அறிஞர் அண்ணாவின் புனைபெயர்கள் தான்!

– சி.மணி, புத்தானாம்பட்டி

## சுவர்ணலதா!

வங்க மக்கள் இலக்கிய ஆர்வலர்கள் என்பதற்கு எடுத்துக்காட்டாக ஒரு நாவலின் பெயரையே ஒரு தெருவுக்குச் சூட்டியுள்ளனர். 19வது நூற்றாண்டில் தாராநாத் கங்கூலி என் பவர் எழுதிய நாவல் 'சுவர்ணலதா' என்பது. புகழ்பெற்ற இந்நாவலின் பெயரையே ஒரு தெருவுக்குச் சூட்டியிருக்கின்றனர்.

- நாகலட்சுமி பழனி, சென்னை

# மொழி வெறி



"தமிழ்நாட்டின் பல நகரங்களில், இருபது வருடங்களாக சம்ஸ்கிருத மொழியை எளிதாகப் பேச வகுப்புகள் நடத்தி வருகிறோம். இதுவரை எந்த இடத்திலும் இது போல நடந்ததில்லை..." என்கிறார் ராமச்சந்திரன். சம்ஸ்கிருத பாரதி அமைப்பின் பொறுப்பாளர். புதுவை என்ஜினீயரிங் கல்லூரி வளாகத்தில் மே 17ஆம் தேதி இரவு, சம்ஸ்கிருத பாரதி அமைப்பைச் சேர்ந்தவர்களையும், தமிழ்நாட்டின் பல மாவட்டங்களில் இருந்தும் வந்திருந்த சுமார் 250 மாணவ - மாணவியரையும் தாக்கியிருக்கிறார்கள் புதுவை கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர்கள். முன்னாள் அமைச்சர் விசுவநாதன் தலைமையில் சுமார் 60 பேர் கொண்ட இளைஞர் பெருமன்றத்தினர், இந்தக் காட்டுமிராண்டித்தனத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

"இலவசமாகத் தான் வகுப்புகளை நடத்துகிறோம். கற்க வருகிறவர் என்ன சாதி, என்ன மதம் எதுவும் பார்ப்பதில்லை. யார் வேண்டுமானாலும் வந்து முகாமில் தங்கி பத்து நாட்களில் சம்ஸ்கிருதம் எழுத, பேசக் கற்றுக் கொள்ளலாம். இதை விளம்பரமாக முன்னதாகவே அறிவிக்கிறோம். பல முகாம்களில் கிறிஸ்துவர்களும், முஸ்லீம்களும் ஆர்வத்தோடு இந்த மொழியைக் கற்றுக் கொண்டு, நன்றி தெரிவித்துக் கொண்டிருக்கிறார்கள்" என்றார் டாக்டர் ஆர். ராமச்சந்திரன்.

"அன்று இரவு புதுவையில் அரசு என்ஜினீயரிங் கல்லூரி முதல்வர் அனுமதியுடன்தான் பத்து நாள் பயிற்சி முகாமுக்கு ஏற்பாடு செய்திருந்தோம். அப்படியும்கூட எங்களைத் தாக்கியும், பெண்களை அச்சுறுத்தியும் அவர்கள் மிக அநாகரிகமாக நடந்து கொண்டது துரதிர்ஷ்டவசமானது.

"முன்பு நடந்த முகாம் ஒன்றில் காங்கிரஸ் அமைச்சரே துவக்கி வைத்து சாதி - இன பேதம் பாராமல் எல்லோரும் இம் மொழியைக் கற்க வந்ததை மிகவும் பாராட்டினார். அ.தி.மு.க.வைச் சேர்ந்த தவக்காந்தன் ஒவ்வொரு முகாமிலும் ஆர்வத்தோடு பங்கெடுத்துக் கொள்ளுவார். (கரைவேட்டியோடு அவர் அங்குமிங்கும் சுறுசுறுப்பாக இயங்குவதை நாமும் பார்த்தோம்.) இரவோடு இரவாகக் காலி செய்யச்

சொல்லி மிரட்டினார்கள். 100 பெண்கள் இருந்தார்கள். எங்கே போவோம்? 'இந்த இரவு மட்டும் இங்கே இருக்க அனுமதியுங்கள். காலை புறப்பட்டுப் போய் விடுகிறோம்' என்ற வேண்டுகோளைக் கடைசியாக ஏற்று, புறப்பட்டுப் போனார்கள். போலீஸ் பாதுகாப்புத் தர இயலாது என்று வேறு சொல்லிவிட்டார்கள். எனவே மறு நாள் காலை பஸ்ஸை ஏற்பாடு செய்து கொண்டு, எல்லோரும் புறப்பட்டு சென்னை வந்து, இங்கே மீதிப் பயிற்சிகளைத் தொடர்ந்தோம்" என்றார் டாக்டர் ராமச்சந்திரன்.

கோவையிலிருந்து வந்திருந்த ஷேக் ஃபரீத் என்ற மாணவர், "நான் கோவையில் ஆயுர்வேதக் கல்லூரியில் நான்காம் ஆண்டு மாணவன். இந்த முகாமில் சேர்ந்த பிறகு எனக்கு சம்ஸ்கிருதம் எளிதாகிவிட்டது. இப்போது என்னால் பேசவும் முடியும்... ஆயுர்வேத பாடங்கள் சம்ஸ்கிருதத்தில் இருப்பதால், இங்கே பத்து நாட்கள் படித்த பிறகு, பாடம் ரொம்ப ஈஸியாகிவிட்டது. எங்கள் பிரின்ஸிபலிடம் கூடச் சொல்லி, அங்கேயும் இந்த முறையைக் கொண்டு வர என்னால் ஆனதைச் செய்வேன்" என்றார். இவர் தாய் மொழி உருது. ஆனாலும் சம்ஸ்கிருதம் கற்கச் சிரமமாகவே இல்லை என்கிறார். (முகாமில் இன்னொரு முஸ்லீம் பெண் மணியும் கற்றுக் கொள்ளுகிறார்.)

சேலத்திலிருந்து பிரபா, மதுரையிலிருந்து மணிகண்டன், நர்மதா, புதுவையிலிருந்து செந்தில், காவேரி, திருப்பூரிலிருந்து முருகேசன், கோவையிலிருந்து ஓர் இளைஞர் என்று நாம் சந்தித்த அத்தனை பேருமே, தங்கள் ஆர்வம் காரணமாகவே சம்ஸ்கிருத மொழியைக் கற்க முகாமில் சேர்ந்ததாகவும், ஒரே குடும்பம் போல எந்த வேற்றுமையும் பாராமல் முகாம் நடத்தப்படுவதையும் ஒரே குரலில் கூறினார்கள்.

"நன்றாகத் 'தண்ணிப் போட்டு' வந்த பலரும் கும்பலில் இருந்தனர். பெண்கள் எதிரேயே, அவர்களைச் சுற்றி வளைத்து நின்று கொண்டு, ஆபாச வார்த்தைகள் பேசியவர்கள் உண்டு."

# தாக்கிடவடி!

இதில் வேடிக்கை என்னவென்றால், வெகு சரளமாக, இவர்கள் பேச்சின் இடையே இவர்களையும் அறியாமல், சம்ஸ்கிருத வார்த்தைகள் இணைந்து இணைந்து வந்தன!

"பத்து நாட்களில் பெரிய மாற்றம் சார். அர்ச்சனையில் என்ன சொல்லுகிறார்கள் என்று எளிதாக இப்போது புரிகிறது!" என்றார் மணிகண்டன்.

"பிறப்பால் என்னை ஷெட்யூல்ட் காஸ்ட் என்பார்கள். ஆனால் நான் இங்கே சீனியர் இன்ஸ்ட்ரக்டர்!" என்று பெருமையுடன் கூறினார் உமா


• ராமச்சந்திரன்

## "நாங்கள் சம்ஸ்கிருத எதிரிகளல்ல..."

**— நல்லகண்ணு**

கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளர் ஆர்.நல்லகண்ணுவிடம் குறித்து கேட்டோம் :

"நாங்கள் சம்ஸ்கிருத மொழி கற்பிப்பதற்கு எதிராகக் கலவரம் ஏதும் செய்யவில்லை. அங்கே ஆர்.எஸ்.எஸ். அமைப்பைச் சேர்ந்தவர்கள், சம்ஸ்கிருதம் கற்பிக்கிறோம் என்ற போர்வையில், குஜராத் போல ஒரு நிலைமையை உருவாக்கப் போகிறார்கள் என்று செய்தி கிடைத்ததால்தான், அதைத் தடுப்பதற்காக விசுவநாதன் தலைமையில் இளைஞர் பெருமன்றத்தினர் அங்கே விரைந்தார்கள். அதிலும் சுந்தரராமன் என்ற, பா.ஜ.கவைச் சேர்ந்த நபர் அங்கே அதில் சம்பந்தப்பட்டிருக்கிறார் என்று தெரிந்தது. அவர் ஏற்கெனவே ஒரு சர்ச் விஷயமாகப் பிரச்னை உண்டாக்கியவர். அதனால்தான் கம்யூனிஸ்ட் கட்சி அதில் தலையிட்டது. 'தண்ணி போட்டுவிட்டு' சிலர் வந்தார்கள் என்று சொல்லுவது தவறு. அவர்கள் அப்படிப்பட்டவர்கள் அல்ல. இன்னும் சொல்லப் போனால், விசுவநாதன் திருவண்ணாமலை

மகேசுவரி. "சான்றிதழுக்கு முக்கியத்துவம் கொடுக்காமல், அநுபவத்துக்கு முக்கியத்துவம் கொடுக்கும் இந்த அமைப்பு, எனக்கு எதிர்கால நம்பிக்கையைக் கொடுத்திருக்கிறது!" என்கிறார்.



• கட்சயா

'ஆரோவில்'லிலிருந்து நிறையப் பேர் இங்கே சம்ஸ்கிருத மொழி கற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

கட்சயா என்ற ரஷ்யப் பெண்மணி, நமது கேள்விகளுக்கு எல்லாம் வெகு சரளமாக சம்ஸ்கிருதத்தில் பதில் சொன்னார்.

ராணி மேரி கல்லூரி மாணவி சீதாலட்சுமி "எனக்கு இப்போது சம்ஸ்கிருதத்தில் நன்றாகப் பேச வந்துவிட்டது!" என்றார் மகிழ்ச்சியோடு.

திருப்பூரில் முகாம் நடந்தபோது சரியாக வகுப்புகளில் பங்கெடுத்துக் கொள்ள முடியாததால், முருகேசன் மறுபடி இந்தச் சென்னை முகாமுக்கு வந்திருப்பதாகச் சொன்னார். "என் குடும்பத்தில் யாருமே சம்ஸ்கிருதம் படிக்கவில்லை. அதனால் எனக்குப் படிக்க சிரமமாக இருக்குமோ என்று முதலில் பயந்தேன். இப்போது நன்றாகவே பேச வருகிறது!" என்றார்.

"இத்தாலியரான வீரமாமுனிவர் தமிழைக் கற்க முடியும் என்றால், நம் நாட்டு மொழியான சம்ஸ்கிருதத்தைக் கற்பதில் நமக்கு என்ன கஷ்டம்?" என்றார் காவேரி.



சாதாரணமாக இதுபோன்ற அநாகரிக அடாவடித்தனங்களில் எல்லாம் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த எவரும் ஈடுபடமாட்டார்கள். ஆனால், முன்னாள் அமைச்சர் விசுவநாதன், அங்கே பா.ஜ.க. வேட்பாளர் கிருஷ்ணமூர்த்தி என்பவரிடம் தேர்தலில் தோற்றது மேற்படி பூசலுக்குக் காரணமாக இருந்திருக்கக் கூடும் என்கிறார்கள்.

• ஷேக் ஃபரீத்



தாக்க வந்திருந்த பலர் இளைஞர்கள் அல்ல. நன்றாகத் 'தண்ணிப் போட்டு' வந்த பலரும் கும்பலில் இருந்தனர். பெண்கள் எதிரேயே, அவர்களைச் சுற்றி வளைத்து நின்று கொண்டு, ஆபாச வார்த்தைகள் பேசியவர்கள் உண்டு.

புதுவை காவல்துறை ஐ.ஜி. ஜே.பி.சிங், "முன்னதாகவே அனுமதி பெற்று, விளம்பரமும் செய்து நடத்தப்பட்ட முகாமில், முறைகேடாக நடந்து கொண்டது

யில் கிரிவலம் போகிறவர். எனக்குத் தெரிந்த வரையில், மதரீதியான எந்த அசம்பாவித மும் பிற்பாடு நிகழாமல் தடுக்கத் தான் புதுவை இளைஞர் பெரு மன்றத்தினர் செயல்பட்டார் கள். நீங்கள் என்னிடம் கருத் துக் கேட்டதற்கு நன்றி.'' என்றார் நல்லகண்ணு.



• நல்லகண்ணு

நாம் விசாரித்தவரை சம்ஸ்கிருத பாரதியைச் சேர்ந்தவர்களோ, பயில வந்த மாணவ - மாணவியரோ, குஜராத் போன்ற கலவரச் செயல்களுக்கு வித்திட வந்ததாகத் தெரியவில்லை. அவர்கள் நோக்கம் பத்து நாள் பயிற்சியை முடித்துவிட்டுத் தங்கள் வேலையைப் பார்க்கப் போவதுதான். நல்லகண்ணு, நடந்துவிட்ட வன்முறையை நியாயப்படுத்த வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டதாகக் கருதவே இடமிருக்கிறது.

கண்டிக்கத்தக்கது; வருந்தத்தக்கது'' என்று கூறினார். சப் இன்ஸ்பெக்டர் ஒருவரை, தற்காலிகப் பணி நீக்கமும் செய்திருக்கிறார்.

''புதுவை போப் ஜான் பால் கல்லூரியில், ஒரு கிறிஸ்தவ கல்வி நிலையத்தில், சம்ஸ்கிரு தம் சொல்லிக் கொடுக்கிறார்கள். பல ஆண்டுகளாக மானியம் கொடுத்து வரு கிறார் ஒரு வெளிநாட்டவர். யு.ஜி.சி. மானிய மும் கொடுக்கப்படுகிறது!'' என்கிறார்கள்.

நாம் போயிருந்தபோது, டாக்டர் ராமச் சந்திரனுடன், 'இந்தியா டுடே' தமிழ்ப் பதிப் பின் முன்னாள் ஆசிரியர் மகாதேவனும் இருந்தார்.

''எங்களுக்கு அரசியல் தெரியாது. பத்து நாட்களில் ஒரு மொழியைத் தன்னம்பிக்கை யோடு பேச வைக்கக் கூடிய அளவுக்கு வகுப்புகள் நடத்துகிறோம். அவ்வளவுதான்'' என்றனர்.

''மனித வள மேம்பாட்டுத் துறையின் மான்யம், போன வருஷம் வரவே இல்லை. இந்த வருடம் வந்தது. கற்றுக் கொடுப்பவர் களுக்குக்கூட ஊதியம் இல்லை. போக்கு வரத்து, உணவு, பிரின்டட் மெடீரியல்ஸ் என்று குறைந்த பட்ச செலவுக்காகத்தான் மான்யத்தை எதிர்பார்க்கிறோம்'' என்றார் டாக்டர் ராமச்சந்திரன்.

- சாருகேசி

படம் : வெங்கடேஷ்

## பயன்

ஒரு கருமி தன்னிடமிருந்த செல்வத்தை எல்லாம் கொடுத்து ஒரு தங்கக் கட்டி வாங்கினான்.

அதை யாருக்கும் தெரியாமல் தன் வீட்டுத் தோட்டத்தில் பத்திரமாகக் குழி தோண்டிப் புதைத்து வைத்தான்.



அவ்வப்போது அதை எடுத்துப் பார்த்து சந் தோஷப்படுவான். மீண் டும் புதைத்து விடுவான்.

அந்தக் கருமியின் செயலை ஒரு வேலைக்காரன் பார்த்துவிட்டான். கருமி வெளியூர் போயிருந்த சமயம் பார்த்து தங்கக் கட்டியை எடுத்துக் கொண்டு ஓடி விட்டான்.

மறு நாள் ஊர் திரும்பிய கருமி தோட் டத்திற்குச் சென்று தோண்டிப் பார்த்தபோது தங்கக் கட்டியைக் காணா மல் கதறி அழுதான்.

அவன் அழுகுரலைக் கேட்டு ஓடி வந்த பக்கத்து வீட்டுக்காரன் என்ன ஏதென விசாரித்தான்.

கருமி சொன்னதைக் கேட்ட அவன், ''நண்பரே, அழாதீர்கள். தங்கக் கட்டி போனால் என்ன? ஒரு செங்கல்லைப் புதைத்து வைத்து அதைத் தங்கக் கட்டியாக நினைத்து தினந்தோறும் எடுத்துப் பார்த்து திருப்தி படுங்கள். உங்களைப் பொறுத்தவரை தங்கமும் செங்கல்லும் ஒன்றுதான். நீங்கள் எதையும் செலவு செய்யப் போவதில்லை'' என்று ஆறுதல் கூறினான்.

ராசிக்கல் மோதிரம் வாங்க ராசியான கடை P.R. ஜுவல்லரி

# P.R. JEWELLERY

**GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES**
**Old No. 102, New No. 138, USMAN ROAD,**
**T. NAGAR, CHENNAI - 600 017.**
**PH: 4344442, 4327764 TUESDAY HOLIDAY**

**(10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)**

**PROPRIETOR : P. RAVINDHIRAN**

**எங்கு ஜோதிடம் பார்த்தாலும் P.R. ஜுவல்லரிக்கு வந்து ரூ.400/-க்கு ராசிக்கல் வாங்கி பயன் பெறுங்கள். கல் ஒரிஜினல் என முழு உத்திரவாதம் தருகிறோம்.**

| ராசி | ராசிக்கல் | | வெள்ளி மோதிரம் விலை |
|---|---|---|---|
| மேஷம், விருச்சிகம் | பவழம் - | 2 CARAT | 400/- |
| ரிஷபம், துலாம் | வைரம் - | 5 CENT | 2250/- |
| மிதுனம், கன்னி | மரகத பச்சை - | 20 CENT | 400/- |
| கடகம் | முத்து - | 2 CARAT | 400/- |
| சிம்மம் | மாணிக்கம் - | 20 CENT | 400/- |
| தனுசு, மீனம் | புஷ்பராகம் - | 1 CARAT | 400/- |
| | கனகபுஷ்பராகம் - | ½ CARAT | 1000/- |
| மகரம், கும்பம் | நீலம் - | 20 CENT | 400/- |

தங்கத்தில் ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம் ரூ. 1800/- முதல் 5000/-ம் வரை உடனே கிடைக்கும்.

அனைவரும் அணியக்கூடியது கார்னெட் வெள்ளி மோதிரம் விலை ரூ. 400/- இதை அணிவதால் படிப்பு, ஞாபக சக்தி, வேலை வாய்ப்பு, வியாபாரம், செல்வ வளம் பெருகும்.

தபால் மூலம் மோதிரம் 1க்கு ரூ 450/-
M.O. (or) D.D. அனுப்பவும்.

தபால் எழுதினால் முழு விவர பாம்லட் இலவசமாக அனுப்புகிறோம்.

குறிப்பு : ஜெயா டீ.வி.யில் வியாழன்தோறும் மாலை 5.30 மணிக்கு சிறப்பு பேட்டியை பார்க்கவும்

மேஷ ராசி, விருச்சிக ராசி - பவழம் * ரிஷப ராசி, துலாம் ராசி - வைரம் * மிதுன ராசி, கன்னி ராசி - மரகத பச்சை

* நீலம் - கும்பராசி, மகரராசி * புஷ்பராகம் - மீனராசி, தனுசு ராசி * மாணிக்கம் - சிம்மராசி * முத்து - கடகராசி

# குளுமை, கூர்மை, பொறாமை!

ஆ... ஜில்..! பக்கங்கள் குளுமையூட்டின.
மதுரை, பெ.பொன்ராஜபாண்டி

'பிடிமண்' சிறுகதை படித்தேன். ஜாதிமத பேதத்தால் சிக்கித் தவிக்கும் சிற்றூர் ஒன்றில் நடைபெறும் ஜாதிக் கொடுமை நிகழ்ச்சியை அப்படியே நேரில் பார்ப்பது போல் அமைந்திருந்தது.
லால்குடி, இராஜேந்திரன்

நீதிபதி வி.ஆர். கிருஷ்ணய்யர் தலைமையில் இயங்கிக் கொண்டிருக்கும் தன்னார்வ நடுவர் மன்றம் குஜராத் சம்பவங்கள் பற்றிய உண்மைகளை வெளிக் கொண்டு வந்திருப்பது ஒரு பக்கம் மகிழ்ச்சியாக இருந்தாலும், இன்னொரு பக்கம் வேதனையாக இருக்கிறது. உண்மை சுடுகிறது. வி.எச்.பி., பஜ்ரங்தள் போன்ற அமைப்புகளுக்குப் பிரதமர் வாஜ்பாய் எப்போது வக்காலத்து வாங்கினாரோ அப்போதே நாட்டின் அமைதிக்குக் குந்தகம் விளையத் தொடங்கிவிட்டது. பயங்கரவாதம் நாலா பக்கமும் மக்களைச் சூழ்ந்து கொண்டுவிட்டது என்பதுதான் நிதர்சனம்.
ஈரோடு, க.நா.இராஜேஸ்வரன்

சந்தர்ப்பவாத அரசியல்வாதிகளைத் தோலுரித்துக்காட்டி, புத்தி புகட்டும் நல்ல சிறுகதை "நாவரசு நல்லதம்பி."
மேலகிருஷ்ணன்புதூர், குமரன் லிங்கேசன்

'பக்தியைப் பரப்பாவிட்டாலும் பரவாயில்லை. ஏன் தெய்வங்களின் பெயர்களை வைத்து சின்னத் திரையில் கலாட்டா செய்ய வேண்டும்?' என்ற வினோத்தின் ஒரு குறிப்பு கூர்மையானது.
சென்னை, கே.வி.ராமன்

ஆறு, இலக்கிய (அரசியல்) வாதிகளை அறிமுகப்படுத்தி விட்டுப் புகைப்படங்களில் ஐந்து பேர்களை மட்டுமே காட்டினால் எப்படி?
சென்னை,
அய்யாறு வாசுதேவன்




இருநூற்றி ஐம்பது நட்பு குடும்பங்களா? ஒன்றாகக் கூடினார்களா? நினைக்கவே அதிசயமாகவும் பொறாமையாகவும் இருந்தது.
ஒட்டன்சத்திரம், செ.ரா.ரவி

*19.5.2002* கல்கி இதழில் ஸ்ரீரங்கம் கோவில் மாடுகள் பிரச்னை பற்றி கட்டுரை வந்துள்ளது. அதில் நான் தற்பொழுது சிறைச்சாலையில் இருப்பதாகவும் மாடுகளின் கதி என்னவென்று கேட்டும் எழுதியுள்ளீர்கள். நான் முறையாகப் பதிவு பெற்ற பசுப் பாதுகாப்பு சங்கம் நடத்தி வருபவன். எங்கள் சங்கத்திற்குத்தான் நாங்கள் மாடுகளைத் தானமாகக் கேட்டுப் பெற்றோம். ஸ்ரீரங்கம் களஞ்சியம் பகுதியில் கோசாலை அமைத்தும் எமது உறுப்பினர்கள் வசம் ஒப்படைத்தும் அம்மாடுகளைப் பராமரித்து வந்தோம். சில அரசியல் காரணங்களுக்காக எங்கள்மீது வீண் புகார்களைச் சிலர் கிளப்பி நடவடிக்கை எடுக்க வைத்தார்கள். நான் 9.2.2002ல் கைதாகி 22.02.2002 அன்று ஜாமீனில் வெளியில் வந்துவிட்டேன். எங்களது கோசாலை மற்றும் உறுப்பினர்கள் வசம் வளர்ந்து வந்த மாடுகள் மற்றும் கன்றுகளை போலீசார், கோவிலுக்கே கொண்டு விட்டு விட்டனர். அவர்கள் அதை ஏலத்தின்மூலம் விற்பனையும் செய்தாகிவிட்டது.
திருச்சி, ராகவன்

**மேஷம் :** செவ்வாய், குரு, சுக்கிரனுடன் ராசிநாதன் சேர்ந்திருப்பதால், பொருளாதாரம் அபிவிருத்தியடையும். உற்சாகம் கூடும். தெய்வ பலம் கூடிவரும். திட்டமிட்ட காரியங்களில் வெற்றியே கிடைக்கும். எல்லா கிரகங்களும் ராகு கேதுவுக்குள் (சந்திரனைத் தவிர) என்பதால், எதிர்பாராத செலவுகள் ஏற்படும். வியாபாரிகள் முன்னேற்றம் அடைவார்கள். வாரக் கடைசியில் சுக்ரன் கடக ராசிக்குப் பிரவேசமாவதால், சுபகாரிய முயற்சிகள் வெற்றி தரும். ஏழரை நாட்டுச்சனி இரண்டாவது சுற்று நடப்பவர்கள், அனுகூலமான பலன் பெறுவார்கள். சித்தபுருஷர்கள் தொடர்பு நன்மை தரும்.

**ரிஷபம் :** ராசிநாதன் சுக்ரன் 2ம் இடத்தில் குரு, செவ்வாயுடன் சஞ்சாரம் என்பதால் தாராளமான பணநடமாட்டம் உண்டாகும். வாழ்க்கை, வசதி, செலவாக்கு யாவும் அமையும். சிக்கலான சூழ்நிலையிலும் வாக்கு சாதுர்யம் காப்பாற்றும். குல தெய்வ பிரார்த்தனை நிறைவேறும். ஜீவனஸ்தானாதிபதி சனி ராசியில், ராகு, புதன் சூரியனுடனும் மற்றும் ராசிநாதன் புதன் பரிவர்த்தனை பலம் என்பதால், செய்யும் காரியங்கள் யாவும் மேன்மை பெறும். குடும்பஸ்தானத்தில் குரு செவ்வாய் கூடியிருப்பதால், குடும்பத்தில் மகிழ்ச்சி நிறைந்திருக்கும். ரேஸ், லாட்டரி அளவோடு பலன் தரும்.

**மிதுனம் :** ராசிநாதன் சுக்ரன் பரிவர்த்தனையோகத்துடன் இருப்பதால், தெளிவான சிந்தனையுடன் செயல்பாடுகள் இருக்கும். தாமதமாகிவந்த காரியங்கள் வெற்றி அடையும். பண வசதி கூடும். குரு மங்கள யோகம் கூடியிருப்பதால் உத்தியோக விஷயங்கள் முன்னேற்றம் அடையும். ஜவுளி, ஆபரணம், வாகனம், இயந்திரம் சம்பந்தப்பட்ட தொழில்கள் நல்ல லாபம் கொண்டு வரும். நண்பர்கள் உறவினர்கள் உதவுவார்கள். திருமணத் தடை நீங்கி சுப காரியம் நடக்கும். ரேஸ், லாட்டரி நிதானம். ஸ்பெகுலேஷன் வேண்டாம்.

**கடகம் :** கிரக சஞ்சாரம், 2ம் அதிபதியான தனஸ்தானாதிபதி 11ம், இடமான லாபஸ்தானத்தில் புதன், சனி, ராகுவுடன் சஞ்சாரம் என்பதால் கல்வி, சொத்து சம்பந்தமான விஷயங்கள் வெற்றி கொண்டு வரும். மறைமுக எதிரிகள் மறைவார்கள். அலுவலகம், தொழிற் சாலையில் திருப்தியான சூழல் உருவாகும். உத்தியோக சம்பந்தமான பயணம் வெற்றி தரும். ரசாயனம், தோல், மருத்துவம் முதலியவற்றில் ஆதாயம் பெருகும். ஸ்தல யாத்திரை, தெய்வீகப் பயணம் போன்றவை திட்டமிட்டபடி அமையும். பங்கு மார்கெட் லாபம் கொண்டு வரும்.

**சிம்மம் :** ராசிநாதன் சூரியன் 10ல் புதனுடன் ராசியாதிபதியான சுக்ரனுடன் பரிவர்த்தனை பலத்துடன் சஞ்சாரம் என்பதால், சனி, ராகு சேர்க்கையால் ஏற்படும் மந்த நிலையை மாற்றி, அனைத்து நல்ல பலன்களையும் கொடுக்கும். உடல் ஆரோக்கியம், மனத்தெளிவு, உத்தியோகத்தில் சிறப்பான சூழ்நிலை என ஆதாயமான பலன்களே ஏற்படும். கலைத் துறைக்காரர்கள் சுபிட்சம் அடைவார்கள் குரு பலம் நிறைந்திருப்பதால் பெண்களுக்கு உற்சாகம் கூடும். பொன், பொருள் சேர்க்கை ஏற்படும். மாணவர்கள் வெற்றி நடை போடுவார்கள்.

# நடக்குமென்பார் நடக்கும்!

கிரக வழிபாடு நன்மை தரும்.

**கன்னி :** ராசிநாதன் பாக்கியாதிபதியான சுக்ரன் பரிவர்த்தனை பெற்று, 9ல் சூரியன் சனி, ராகு சேர்க்கையோடு சஞ்சாரம் செய்வதால், புனித காரியங்கள் நடைபெறும். வியாபாரிகள் வளர்ச்சியடைவார்கள். 10ம் இடத்தில் குரு / செவ்வாய், சுக்கிரன் கூடியிருப்பதால், உத்தியோகத்தில் அனுகூலம் ஏற்படும். செல்வாக்கு உயரும். வீடு, கட்டடம் போன்ற இனங்களில் அனுகூலம் ஏற்படும். திருமண முயற்சி வெற்றி பெறும். ஞான வைராக்கியக்காரன் கேது 3ல் என்பதால் தைரியம், சமயோசிதப் புத்தி, புகழ் கிடைக்கும். அரசியல்வாதிகளுக்கு நல்ல திருப்பம் ஏற்படும்.

**துலாம் :** ராசிநாதன் சுக்கிரன் 10ல் பரிவர்த்தனையுடன் குரு, செவ்வாய் சேர்க்கை என்பதால், தெய்வீகக் காரியங்களில் ஈடுபாடு உண்டாகும். ஞானிகள் தரிசனம் ஏற்படும். பொருளாதார நிலையில் அபிவிருத்தி கிட்டும். லக்ஷ்மி கடாக்ஷம் நிலைக்கும். அஷ்டம சனி ராகுவுடன் 8ல் சஞ்சாரம் என்றாலும், எந்தவிதமான பாதிப்பும்

நேராது. மற்ற கிரகங்கள் பாதுகாப்பு தரும். அலுவலகத்தில் பணி புரியும் பெண்களிடம் எச்சரிக்கை அவசியம். சக ஊழியர்களால் பிரச்னை ஏற்படும். குரு பலம் பூரணமாக இருப்பதால், குடும்பத்தில் குதூகலம் நிறைந்திருக்கும்.

**விருச்சிகம்** : ராசிநாதன் செவ்வாய் 8ல் மறைந்து, குரு, சுக்கிரனுடன் சேர்க்கை மற்றும் புதன், சுக்ரன் பரிவர்த்தனை என்பதால் குரு மகான்களின் கடாக்ஷம் கிடைக்கும். இதனால் எல்லா முயற்சிகளுமே வெற்றி பெறும். குரு, தன் வீடான தனுஷ் ராசியைப் பார்ப்பதால், செல்வம் பெருகும். நெருங்கிய உறவினர்களின் சந்திப்பும், அதனால் அனுகூலமும் உண்டாகும். சுய தொழில் செய்பவர்கள் மேன்மை பெறுவார்கள். குடும்ப ஸ்தானத்தை குரு பார்ப்பதால், குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும். மூதாதையர் சொத்து விவகாரங்களில், சிக்கல் தீர்ந்து நல்ல முடிவு ஏற்படும். நவகிரக சாந்தி ஹோமம், முக்கியமான சனி கிரகத்திற்குச் செய்வது உத்தமம்.

**தனுசு** : ராசிநாதன் குரு 7ம் இடத்தில் அமர்ந்து சுக்ரன், செவ்வாயுடன் ஜென்ம ராசியைப் பார்ப்பதால், எடுத்த காரியங்கள் திட்டமிட்டு நடத்தி, வெற்றியும் காண்பீர்கள். சூரியன், சனி, ராகு, புதன் 6ம் இடத்திலும், ஞான வைராக்கியக்காரன் கேது 12லும் என்பதால், எதிரிகள் மறைவார்கள். சரளமான பண வசதி, நிறைந்த செல்வாக்கு, மனமகிழ்ச்சி உண்டாகும். பதிப்பகம், புத்தகம், எழுத்து, அச்சகம் சம்பந்தப்பட்ட துறையினர் மேன்மை பெறுவார்கள். விருந்து, கேளிக்கை, விளையாட்டு போன்றவற்றில் குதூகலம் அடைவீர்கள். வெளிநாட்டுத் தொடர்புடைய வியாபாரம் வெற்றி தரும். நல்லவர்கள் சகவாசம் மன அமைதி தரும்.

**மகரம்** : ராசிநாதன் பூர்வ புண்ணிய ஸ்தானத்தில் அமர்ந்து புதன், ராகு மற்றும் சூரியனுடன் கூடி, சுக்கிரனுடன் பரிவர்த்தனை பலம் பெற்றிருப்பதால், உற்சாகமான மனநிலை உண்டாகும். உங்கள் சக்திக்கும் மீறிய காரியங்களில் ஈடுபட்டு வெற்றி காண்பீர்கள். உத்தியோகஸ்தர்கள் சாதனை புரிவார்கள். ராசிநாதன் சூரியனுடன் என்பதாலும் அஸ்தமன கதியில் சஞ்சாரம் என்பதாலும், உணவு, ஜவுளி, அழகு சாதனம், மரம், இரும்பு, எஃகு, இயந்திரம், ஃபர்னீச்சர் ஆகிய இனங்கள் எதிர்பாராத லாபம் கொண்டு குவிக்கும். சிலருக்குப் புதிய வீடு வாங்கும் யோகம் அடிக்கும்.

**கும்பம்** : ராசிநாதன் சனி பகவான், அஸ்தமன கதியில் சஞ்சாரம் செய்வதால், எல்லா காரியங்களிலும் எதிர்பாராத முன்னேற்றம் ஏற்படும். 10ல் ஞான வைராக்கியன் கேது இருப்பதால், செலவினங்கள் கட்டுக்கடங்காது. உடல் நலத்தில் கவனம் தேவை. அலுவலகத்தில் ஆரோக்கியமான சூழ்நிலை உருவாகும். பயணங்களால் நன்மைகளே. பூமி, மனை, வீடு, ரியல் எஸ்டேட் இனங்களில் இடையூறுகள் நீங்கி, செல்வம் தழைத்தோங்கும். குல தெய்வப் பிரார்த்தனை நிறைவேறும். பெரியோர் ஆசி கிடைக்கும். பெண்கள் மனமகிழ்ச்சி கொள்வார்கள்.

**மீனம்** : கிரக சஞ்சாரம் ராசிநாதன் குரு 4ம் இடத்தில் செவ்வாய், சுக்ரன் சேர்க்கை மற்றும் சுக்ரன், புதன் பரிவர்த்தனை பலம் பெற்றிருப்பதால், எதிலும் தெய்வ பலம் கூடி அனுகூலமான பலன்களே நடைபெறும். புதிய முயற்சிகள் வெற்றி பெறும். குரு 4ல் அமர்ந்து, 8ம் இடம் 10ம் இடம் 12ம் இடங்களைப் பார்ப்பதால், பெண்களுக்குத் திருமணம் போன்ற சுபகாரியங்கள் நடைபெறும். கமிஷன், வாகனம், இரும்பு, எஃகு, ஏற்றுமதி, இறக்குமதி சம்பந்தப்பட்ட இனங்கள் லாபம் கொண்டு வரும். தந்தையின் உடல் நலத்தில் கவனம் தேவை. சாதுக்கள் தரிசனம் மூலம் நலம் பெறலாம்.



மிதுன ராசிக்காரரான மெட்டி ஒலி இயக்குனர் திருமுருகனுக்கு தாமதமாகிவந்த காரியங்கள் வெற்றியடையுமாம்

## அக்னிசர்மா பக்கம்

## ஜூன் 5 முதல் 11 வரை

# சென்னை நகர் மேவும் சண்முகத் தெய்வமணி

குருஜி ஏ.எஸ். ராகவன்

முத்துக்குமரன் என்ற பெயரை உச்சரிக்கும்போதே மனத்திலே ஒரு குழந்தையைக் கொஞ்சி உச்சி முகரும் ஆனந்தம் ஏற்படும். அந்தத் திருப்பெயரைத் தாங்கி தருமமிகு சென்னையில் கந்தகோட்டத்தில் வளர் செல்வன் நம் மனத்துள் தோன்றும் பிம்பத்தின் பிரதிபலிப்பாகவே சின்னஞ்சிறு மூர்த்தியாகக் காட்சி தருகிறான். மூர்த்தி சிறிதானாலும் கீர்த்தி பெரிது என்று சொல்லத் தேவையில்லை! கீர்த்தியைக் காட்டிலும் பெரிது மிகப் பெரிது அவனது தனிப்பெருங் கருணை. அதனால்தானே, படிப்பு வேண்டாம் என்று ஒதுக்கி விட்டு ஆன்மத்தேடலில் இறங்கிய ராமலிங்க சுவாமிகளை ஆட்கொண்டு, உருக்கும் தமிழில் அருட்பா பாட வைத்தான். தனியறையில் கண்ணாடி முன் தீபம் ஏற்றி தியானத்தில் இருக்கையில் இளைஞன் ராமலிங்கத்தின் முன் முருகன் தோன்றியதாகவும் அதன் பின்னர் அவனருளால் ஆட்கொள்ளப்பட்டு கவிதை பாடியதாகவும் அவர் வாழ்க்கை சரித்திரம் சொல்கிறது.

***சீர்கொண்ட தெய்வ வதனங்கள்***
***ஆறும் திகழ் கடப்பந்***
***தார்கொண்ட பன்னிரு தோள்களும்***
***தாமரைத் தாள்களும் ஓர்***
***கூர்கொண்ட வேலும் மயிலுநற்***
***கோழிக் கொடியும் அருட்***
***கார் கொண்ட வண்மைத் தணிகா***
***சலமும்என் கண்ணுற்றதே***

என்று முருகனை தரிசித்த கணம் முதல் வள்ளலார் தீந்தமிழ்க்கவி பாடலானார்.

வள்ளலார் வரிந்து வரிந்து பாடிய ஷண்முகத் தெய்வமணி எப்படித்தான் இருக்கிறான் என்று நாமும் பார்த்து விடுவோமே! (பழைய?) பூக்கடை பஸ் ஸ்டாண்ட் - அங்கிருந்து பிரியும் இராசப்பா செட்டி வீதி. முத்துக்குமாரஸ்வாமி தேவஸ்தானம் என்ற பெயருடன் கம்பீரமாக நிற்கிறது பழம்பெரும் கோயில். வடதிசை நோக்கிய ஐந்து நிலை ராஜகோபுரம். உள்ளே போய் விநாயகரை வணங்கிவிட்டு முன்னேறினால், கிழக்குப் பிராகாரத்தில் ஒரு பெரிய பக்தர் கூட்டமே கொலுவிருக்கிறது. பக்தர் என்றால் சாமானிய பக்தர் அல்ல! சிதம்பர சுவாமிகள், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், பாம்பன் சுவாமிகள், இராமலிங்க அடிகளார் என்று பண்ணால் முருகனை அர்ச்சித்து மகிழ்ந்தவர்களின் சந்நிதிகள். கொடிமரத்தையும் கடந்து போனால் இந்த அடியார்க் குழாத்தின் மிக மூத்த முன்னோடியாம் அருணகிரிநாதர், தமக்குரிய சன்னிதியில் இருக்கிறார்.

அர்த்த மண்டபம் - இங்கே, வள்ளலார் பாடிய சித்தி விநாயக வள்ளல், இளவலை முந்திக் கொண்டு அடியார்களுக்கு அருள் செய்யக் காத்திருக்கிறார். சூரியனார், வீரபாகுத் தேவர் என தனித்தனி சன்னிதிகளில் பரிவார தேவதைகள். அம்மையப்பர்கள் மீனாக்ஷி - சுந்தரேஸ்வரராகக் காணப்படுகிறார்கள்; வள்ளி - தெய்வானையருக்குத் தனித்தனி சன்னிதிகள்.

மூலஸ்தானத்து கந்தஸ்வாமியின் அழகு நம்மை ஆட்கொண்டு விடுகிறது. வள்ளி தெய்வானை சமேதராக பாதாதி கேசம் அழகு சிந்த நிற்கிறார். ஒன்பதாவது வயதிலேயே இவரிடம் ஈர்க்கப்பட்டு வள்ளலார் கவியாகி 'தெய்வமணி மலை' பாடினார் என்றால் அதில் ஆச்சரியப்பட என்னவிருக்கிறது என்று தோன்றுமளவுக்கு ஒரு பொலிவு, பிரகாசம்.

மூலஸ்தானத்து மூர்த்தி திருப்போரூரிலிருந்து வந்தார் என்பதற்கான கதை இருக்கிறது. சுமார் 500 வருடங்களுக்கு முன்பு நடந்த கதை.

மராட்டியர்களுக்கும் பாளையக்காரர்களுக்குமிடையே மோதல். கலவரம் உச்சத்தை அடைந்தபோது கலகக்காரர்கள் வீடுகளையும் கோயில்களையும் தரைமட்டமாக்கினர்; கொள்ளையடித்தனர். திருப்போரூரில் முருகன் கோயில் பொன்னம்பலத் தம்பிரானின் நிர்வாகக் கட்டுப்பாட்டில் இருந்தது. கலகக்காரர்கள் கண்ணில் படாதபடி மூர்த்தியை பத்திரப்படுத்த எண்ணி, மூல விக்ரஹத்தை கல் சுவர் எழுப்பி மறைத்து விட்டார் தம்பிரான்.

## யார் பணக்காரன்?

**வ**ழிப் போக்கன் ஒருவன் களைப்பு மிகுதியால் ஒரு மரத்தடியில் படுத்தான். அந்த மரத்தில் இருந்த பூதம் அவனுக்கு ஏழு ஜாடி பொன் தருவதாகச் சொன்னது.

அவன் அதை வாங்கிக் கொண்டு வீட்டுக் குப் போய்த் திறந்தான். ஆறு ஜாடிகளில் வழிய வழிய பொன். ஏழாவது ஜாடியில் கொஞ்சம் குறைந்திருந்தது.

அட, குறை ஜாடியாய்ப் போயிற்றே என்று வருந்தி னான். அதை எப்படியாவது நிரப்பி விட வேண்டும் என்று கடுமையாக உழைத்துப் பொருள் சேர்த்தான். பசி, பட்டினி கிடந்து பொருளை மிச் சம் பிடித்துச் சேர்த்து ஏழாவது



ஜாடியில் போட்டான்.

கடும் உழைப்பால் உடல் நலம் கெட்டது. நோய்வாய்ப்பட்டபோதும் சலிக்காமல் காசு சேர்த்து ஜாடியை நிரப்புவதில் குறியாக இருந்தான்.

ஊர்க்காரர்கள். 'உன்னிடம் ஏழு ஜாடி பொன் இருந்தும் பயன் என்ன? பிச்சைக் காரனைப் போல் அல்லவா திரிகிறாய்' என்றனர்.

செலவு செய்யப்படாத செல்வம் வைத் திருக்கும் பணக்காரன் பிச்சைக்காரனைப் போன் றவனே!

கலகமெல்லாம் ஓய்ந்து அமைதி திரும்பிய காலகட்டத்தில் கல் திரையை உடைத்து எடுத் தார்கள். ஆனால், அதிசயத்திலும் அதிசயம் - அதன் பின்னேயிருந்த முருகனைக் காண வில்லை! அதிர்ச்சியும் துயரும் தாளாமல் உயிர்நீத்தார் தம்பிரான்.

அதன் பிறகு ஆட்சியாளராக வந்த அம்பல வாணத் தம்பிரானின் கனவில் அடிக்கடி முருகப் பெருமான் தோன்றலானார். தாம் ஒரு மரத்தடியில் புற்றில் மறைந்திருப்பதாகவும் தம்மை வெளிக் கொணர்ந்து கோயில் நிறுவும் படியும் தெரிவித்து வந்தார். ஆனால் தம்பிரான் அக் குறிப்பைக் கட்டளையாக ஏற்காமல் விட்டு விட்டார்.

கிருத்திகைக்குக் கிருத்திகை சென்னையி லிருந்து திருப்போரூர் சென்று வழிபடும் வழக்கம் கொண்டிருந்தனர் மாரி செட்டியார், கந்தப்ப ஆசாரி என்ற இரு நண்பர்கள். ஒருமுறை களைப்புத் தீர, கோயில் வாசலி லிருந்த வேப்பமர நிழலில் சற்று உறங்கினர். அருகேயிருந்த புற்றில்தான் முருகப்பெருமான் மறைந்திருந்தான். அம்பலவாண தம்பிரானின் கனவில் தோன்றியது போலவே மாரி செட்டி யாரின் கனவில் தோன்றி, தான் வெளிப்பட விரும்புவதை உணர்த்தினான். விழித்தெழுந்த செட்டியார், நடந்ததைத் தம் நண்பரிடம் தெரிவிக்க, இருவரும் திருப்போரூரில் வழிபாடு முடித்துத் திரும்புகையில் புற்றின் அருகே நின்று வேண்டிக் கொண்டனர். தங்களால் சுமந்து செல்லக்கூடிய அளவுக்கு முருகன் சிறிய உருவமாக மாறி உதவ வேண்டும் எனக் கேட் டுக் கொண்டனர். அதேபோல் முருகனும் சிற்றுரு கொண்டான். புற்று மலர்ந்தது; அப்படியே மாரி செட்டியாரின் கைக்கு அடக்கமாக அமர்ந்தான் முருகன். இருவரும் சென்னை நோக்கிப் புறப்பட்டனர்.

சென்னையில், சரவணப் பொய்கை என்ற குளத்தருகில், தாங்கள் ஏற்கெனவே வணங்கி வந்த சித்தி விநாயகர் கோயிலில் முருகனைப் பிரதிஷ்டை செய்தார்கள் நண்பர்கள். வள்ளி தேவசேனா சமேதனாக முருகன் அக் கோயிலில் மூலஸ்தானத்தில் குடியேறினான்.

சிறிது காலம் சென்று, கந்தகோட்டம் என்றே கோயில் வழங்கலாயிற்று. அப் பகுதி யில் வாழ்ந்த வணிகப் பெருமக்கள், முருகனுக் குப் பிரம்மோத்ஸவம் நடத்த விரும்பி உற்சவ மூர்த்தியைப் பஞ்சலோகத்தில் செய்வித்தனர். அத் திருவுருவில் சில இடங்களில் பிசிறுகள் அமைந்து விட்டன. அவற்றை நீக்க, திருவுருவின் முகத்தில் செதுக்கியபோது தீப் பொறிகள் தெறிக்கக் கண்டு பயந்து போய், சிற்பிகள் சிலைகளை அப்படியே வைத்து விட்டனர். இரண்டு வருடங்கள் கழித்து அங்கே வந்த அந்தணர் ஒருவர் சில மந்தி ரங்களை ஓத, குறைபாடுகள் மறைந்து முழுப் பொலிவுடன் உத்ஸவ விக்கிரகம் ஜொலிக்க ஆரம்பித்தது.

இப்படியாக, கட்டம் கட்டமாக பக்தர் களைத் தூண்டி இயங்கச் செய்து, கந்த கோட் டத்தில் வந்தமர்ந்தான் முத்துக்குமார சுவாமி. கும்பாபிஷேகமும் பிரம்மோத்ஸவமும் கோலா கலமாகக் கொண்டாடப்பட்டன.

அதிசயம் அனேகமுற்ற இத் திருத் தலத்தின் நிர்வாகம் இன்றும் நித்யோத்ஸவம் போல் குறைவின்றி நடைபெற்று வருகிறது. சூழும் பக்தர்கள் மனம் குளிர முத்துக் குமாரசுவாமி அருளைக் குளிர் நிலவெனப் பொழிந்து கொண்டிருக்கிறான்.

செல்வமுத்துக்குமாரசுவாமி என்ற பெயருக்

செல்வ மகிமை - வெள்ளிக் கதவுகள் கொண்ட வெள்ளி விமானம், பொன்னாலான பிரபை; உத்ஸவருக்குத் தங்கக் கவசம் என பொன்னிழைத்த திருமேனியனாய் காட்சி தருகிறான். உலகின் அத்தனை ஐச்வர்யங்களுக்கும் உரிமையாளன் அவனன்றி வேறு யார் என எண்ணும் அளவுக்கு அழகு!

தருமமிகு சென்னை என வள்ளலார் பாடிய தலைநகரம் அறத்துக்கு எடுத்துக்காட்டாக இன்று இருக்கிறதா? என்று யோசிக்க ஆரம்பித்தால் சோர்வுதான் வரும். ஆனால், கலியும் அதர்மத்திடையேயும் ஏழைக்கும் அக்கிரமங்களுக்கிடையேயும் நாம் நன்னெறியாளர்களைப் பார்க்க முடிகிறது; பக்தியும் சிரத்தையும் உள்ள மெய்யன்பர்கள் இருக்கவே செய்கிறார்கள். வேறொன்றும் இல்லாவிட்டாலும் தருமமிகு சென்னையில் தினந்தோறும் பிரவசனங்களும் ஆன்மிகச் சொற்பொழிவுகளும் மூலைக்கு மூலை முழங்கிக் கொண்டிருக்கின்றன. பகவத் கீதை உபநிஷத்தில் ஆரம்பித்து ராமாயணம், பாரதம், பாகவதம், கந்தபுராணம் என ஒன்று விடாமல் எங்கேனும் ஒரு பகுதியில் செவிக்குணவும் சிந்தைக்கு உரமும் பரிமாறப்பட்டு வருகிறது. இவற்றுக்கெல்லாம் அதிபதியாயிருந்து கலியுக தெய்வமாய் ஆட்சி செலுத்தி நம்மைப் பரிபாலனம் செய்து வருபவன் கந்தகோட்டத்து முருகன்தான்.

அவனை நோக்கி ராமலிங்க சுவாமிகள் பாடியது இன்றளவும் எத்தனை பொருத்தமாயிருக்கிறது! வாழ்க்கை நெறியை வேண்டும் அப்பிரார்த்தனையை நாமும் செல்வமுத்துக்குமாரசுவாமியின் முன் வைப்போமே :

ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற<br>
உத்தமர்தம் உறவு வேண்டும்<br>
உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்<br>
உறவுகல வாமை வேண்டும்<br>
பெருமைபெறும் நினதுபுகழ் பேச வேண்டும் பொய்மை<br>
பேசாது இருக்க வேண்டும்<br>
பெருநெறி பிடித்தொழுக வேண்டும் மதமானபேய்<br>
பிடியாது இருக்க வேண்டும்<br>
மருஷபெண் ணாசையை மறக்கவே வேண்டும்உனை<br>
மறவாது இருக்க வேண்டும்<br>
மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டும் நோயற்ற<br>
வாழ்வில்நான் வாழ வேண்டும்<br>
தரும மிகு சென்னையிற் கந்தகோட்டத்துள் வளர்<br>
தலமோங்கு கந்த வேளே<br>
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி<br>
சண்முகத் தெய்வ மணியே

முத்துக்குமாரசாமியிடம் 'வேண்டும் வேண்டும்' என வள்ளலார் வேண்டுகின்ற விஷயங்களின் பட்டியல் இதோடு முடிந்து விடவில்லை. இன்னும் நீண்டுகொண்டே தான் போகிறது. கேட்பவையெல்லாம் தரவா போகிறான் என்ற கேள்விக்கிடமளியாமல், கேட்பதையே அழகிய நெறியாக்கினார் வள்ளலார். அவன் கருணை நிதியினிடத்து அவர் கொண்ட நம்பிக்கை நம்மையும் பற்றிக்கொள்ளப் பிரார்த்திப்போம். ○

## நெல்லைக்கு அழைத்துச் சென்ற மரகதம்!

✸ 'தாமிரபரணி ஆறு போன்ற நடையில் இருந்தது 'மேலத் தெரு மரகதம்' தொடர் கதை! கிராமத்துக் காதல் என்றாலும் ஊரில் உள்ள விஷயத்தையும் பின்னிப் பிணைந்திருந்தது ரசிக்கும்படி இருந்தது.

பெங்களூர், என்.கே.ஈசுவரி

✸ ஒரு கிராமத்திற்கு அழைத்துச் சென்று மனத்தை ரிலாக்ஸ் செய்து கொள்ள வைத்து விட்டாள் மரகதம்.

தஞ்சாவூர், வெங்கட் முருகானந்தம்

✸ எங்கே நெகட்டிவ்வாக முடிந்து விடுமோ? எனப் பரிதவித்த மனத்தை, மங்களமாக முடித் ததை வாசித்த பின்னரே சமாதானம் கொள்ள முடிந்தது. நெல்லைத் தமிழும் சேகரின் ஓவியங்களும் மேலத் தெரு மரகதத்தை ஒளிரச் செய்தன!

நெய்வேலி, எஸ். இந்துமதி



✸ நெல்லையிலிருந்து பிழைப்புத் தேடி சென்னைக்கு வந்துள்ள எங்களை மீண்டும் நெல்லை மண்ணுக்கே அழைத்துச் சென்று விட்டாள் மரகதம்.

சென்னை — 24, இளங்கோ

# கால்

**வாதூலன்**

இனிமேலும் இந்த வீட்டில் இருக்கக் கூடாது என்று நந்தகோபால் முடிவு செய்து விட்டான். பின்னே என்ன? நாள் தோறும் நிறைய வசவுகள், கேலிகள், இண்டல் பார்வைகள், ஏளனச் சொற்கள். கேட்டுக் கேட்டுப் புளித்துப் போன, ''சொந்தக் காலில் நிக்கணும்'' என்கிற வாக்கியம்.

அவன் மீது தப்பில்லை. படிப்பு சரியாக வராததால், பிளஸ் டூ முடிந்தவுடன் ஏதோ பக்கத்திலுள்ள தொழிற்சாலையில் சேர்ந்து விட்டான். என்ஜினீயரிங் உதிரிப் பாகங்கள் தயாரிக்கும் சிறு தொழிற்சாலை. வீட்டில் சும்மா இருக்க வேண்டாம் என்றெண்ணி வேலையில் சேர்ந்தது தவறா? இல்லை. ஆனால் கூடப் பிறந்த சகலரும் மேல் படிப்புப் படித்து, கைநிறைய சம்பளமும், வாய் பூரா ஆங்கிலமும் பேசி நடமாடுவதற்கு அவன் என்ன செய்ய முடியும்?

ஒரே தமையன். பி.எச்.டி. படித்து புரொபசர். (அண்ணியும் இன்டீரியர் டெகரேஷன் நிபுணி) இன்னொருத்தன் எம்.பி.ஏ. படித்து கணினி நிறுவனத்தில் ஆலோசகர். தங்கை வெறும் பட்டப் படிப்பு மட்டுமே முடித்தாலும், அவள் கணவர் இரண்டு மாதத்துக்கு ஒரு முறை வெளிநாடு சென்று வரும் மெத்தப் படித்த அறிவு ஜீவி.

கடைசித் தம்பி பயோடெக் ஜீவி. ப்ராஜக்டுக்காக டெல்லி போனவுடன், இவனைப் பற்றிய விமரிசனக் கணைகள் அதிகக் கூர்மையாயின. தங்கையின் கேலி!

"என்னடா இது! பான்ட் சட்டை. எல்லாம் அழுக்கு... என்ன வேலைடா?"

"சம்பளமாவது ஒழுங்கா நிறைய தர்றாங்களா? உனக்குத் தெரியுமோ... ஒவ்வொருதரம் பொங்கல் தீபாவளியென்றால் என் போனஸில் 20 சதவீதம் கட்!"

"ஏன்?" - வேண்டுமென்றே கேட்கப்பட்ட கேள்வி.

"ஏனா? நந்துவுக்குப் புது டிரஸ் வாங்கித் தரணுமே? அன்னையின் ஆணை!"

ஹா ஹா, ஹாஹ்ஹாவென்ற உரத்தச் சிரிப்பு... கேலிப் பார்வை.. அந்தச் சூழலில், தான் மட்டும் தனித்து ஒதுக்கப் பட்டவன் போல் உணர்ந்தான். அதுவும், அம்மாவும் இப்போது கூடச் சேர்ந்து, ''உன்னால நான் பேச்சு கேட்க வேண்டியிருக்கு! சொந்தக்காலில் நிற்க வேண்டாமோ?'' என்று சொன்னதும், நந்த கோபாலுக்கு ரோசம் உண்டாயிற்று.

கால்! சொந்தக் கால்!

தீர்மானித்து விட்டான். இந்த வீட்டில் யாரையும் மாற்ற இயலாது. இருந்தவும் முடியாது. ஆனால் நான் மாறலாம். வேற்றிடத்துக்குப் போய்ச் சம்பாதிக்கலாம். கையில் தொழில் இருக்கிறது. எந்த வகை யந்திரமானாலும் கண்ணால் பார்த்துக் கிரகித்துக் கையால் செய்யும் திறமை.

எண்ணத்தை ஒட்டின மாதிரி ஒரு விளம்பரம் வந்தது. அம்மாவுக்கு மட்டும் கடிதம் எழுதி விட்டுக் கையில் சொற்பப் பணத்துடன் ரயிலேறி விட்டான்.

இரண்டு வருடம் ஓடிப் போனதே தெரியவில்லை. இப்போதுதான் திரும்பு கிறான் நந்தகோபால். மும்பை புறநகர்ப் பகுதியில் வேலை கிடைத்தது. செய்தொழில் நுணுக்கமும், கவனமும் சேர்ந்து வேலையில் கெட்டிக்காரன் என்ற நற்பெயர் வாங்கி யாயிற்று.

ஆனால் வேலையின் தன்மை பற்றி வீட்டில் சொல்லலாமா? அவ னுக்கு யோசனையா யிருந்தது.



நினைத்தபோதே, கூடப் பிறந்தவர்களின் உதட்டு கர்வமும், கண் அலட்சியமும் ஞாப கத்துக்கு வந்தன. அம்மா, பாவம் எப்படி இருக்கிறாளோ? வேலைக்குச் சேர்ந்த ஏழெட்டு மாதம் ஆன பிறகு அவன் கடிதம் போட்டான்.

வீடு மாறவே இல்லை. கடைசித் தங்கையின் கல்யாணம் நிச்சயமாகி விட்டதாம். மாப்பிள்ளைக்கு ஆஸ்தி ரேலியாவில் வேலையாம். எம்.டி. எஸ்ஸாம்! தேவலை... சிடுசிடுப்பான தங்கை இனிமேல் பல்லைக் காட்டிப் புன்னகை செய்து கொண்டே இருப் பாள்!

வேடிக்கையாக நினைத்துக் கொண் டான்.

நந்தகோபால் பார்த்துப் பார்த்து வாங்கி வந்த பொருட்கள் அலட்சிய மாகப் புறக்கணிக்கப்பட்டன. மீண்டும் கேள்விக் கணைகள்... குத்தல்.

''உனக்கு இப்பவாவது உலகம் புரிஞ்சுதா?''

"என்ன வேலை? நல்ல சம்பளம் தருகிறார்களா?"

ஏற இறங்கப் பிள்ளையைப் பார்த் தார் அப்பா. "வாயைத் திறந்துதான் சொல்லேன்! சொந்தக் காலில் நிற்கத் தைரியம் வந்ததா?''

நந்தகோபாலின் உதடுகள் துடித்தன. 'இல்லை அப்பா! இப்போதும் பிறத்தியார் காலில்தான் நிற்கிறேன்!' என்று சொல்ல வேண்டும் போலிருந்தது. உடல் ஊனமுற்றோர்க்குச் செயற்கைக் கால்களும், பிற தேவையான உபகரணங் களும் தயார் செய்யும் தொழிற்சாலையில் பணிபுரிவதைச் சொல்லலாமா? அரைகுறை யாக வளைய வருபவர்கள் முழுசாக நட மாடத் துணைபுரிகிறேன் என்பதைத் தெரிவிக்கலாமா?

சொன்னால் புரிந்து கொள்ளு வார்களா?

பி.எச்.டியும் எம்.பி.ஏயும், எம்.டி.எஸ்ஸும் உலவும் மெத் தப் படித்த குடும்பம் இது!

''இல்லை! இப்போதும் மற்றவர் காலில்தான் நிற்கிறேன்'' என்றான் அவன்.

புரியாமல் அவனைப் பார்த் தார் அப்பா. ''எல்லாம் என் தலை யெழுத்து'' என்று நெற்றியில் அடித் துக் கொண்டார். ○

# அன்புக்கும் அரவணைப்புக்கும்



• 'ஆசிரம்' குழந்தைகள்



• ஸ்ரீராம் பள்ளி மாணவர்கள்

"முடிவு தேதிக்கு இரண்டே நாள் இருக்கும்போதுதான் தேர்வுக்கான விண்ணப்பத்தை அனுப்ப முடிந்தது. 'நீங்கள் விருதுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறீர்கள்' என்று ஃபேக்ஸ் செய்தி வந்ததும் மகிழ்ச்சியாக இருந்தது'' என்கிறார் அகிலா.

அகிலா...?

ஸ்ரீராம் இன்வெஸ்ட்மென்ட்ஸின் மேலாண்மை இயக்குனர்.

விருது..?

'மிகச் சிறந்த தொழில் துறைப் பெண்மணி விருது'. அகில இந்திய தொழில்கள் கூட்டமைப்பின் மகளிர் பிரிவு வழங்கியுள்ள வருடாந்தர விருது. சமுதாய நோக்குடன் கூடிய தொழில் துறை நிர்வாகிகளுக்கான விருது.

**"உங்கள் நிறுவனம் மேற்கொண்ட சமூகப் பணி என்ன?"**

"1992ல், நான் ஜி.எம்.மாக இருந்தபோது, ஸ்ரீராம் சமூக நல அறக்கட்டளை துவங்கினோம். ஆழ்வார்பேட்டை சிதம்மா காலனியில் 'ஆசிரம்' என்ற பெயரில் அறுபத்திரண்டு அநாதைக் குழந்தைகளைப் பராமரித்து வருகிறோம். கல்வி, தொழிற் பயிற்சி எல்லாம் இங்கே கொடுக்கிறோம். இது தவிர, திருநீர்மலை, பள்ளிக்கரணை, மூவரசன்பேட்டை ஆகிய இடங்களிலும், ஆந்திராவிலுள்ள குண்டூரிலும் பள்ளிக்கூடங்கள் நடத்தி வருகிறோம். முழுக்க முழுக்க ஸ்ரீராம் குரூப்தான் இவற்றுக்கு நிதி உதவி செய்கிறது. பிற்பட்ட பகுதியான தெலுங்கானாவில் இரண்டு பள்ளிக் கூடங்கள் விரைவில் தொடங்கப் போகிறோம். ஐம்பத்தைந்து ஆசிரியர்கள் இருக்கிறார்கள். இரண்டாயிரத்து ஐநூறு மாணவ - மாணவிகள் இந்தப் பள்ளிகளில் படிக்கிறார்கள்."

**"வேறு எந்த வகை உதவிகள்?"**

"சிட் ஃபண்ட், சேமிப்பு, ட்ரக் ஃபைனான்ஸ் என்று சமுதாயம் சார்ந்து வளர்ந்தது எங்கள் நிறுவனம். கிராமப்புறப் பொருளாதாரத்தைப் பெண்கள் அளவில் உயர்த்த ஐம்பத்தைந்து கிராமங்களில் சுய உதவிக் குழுக்கள் உருவாக்கினோம். அவர்களின் சொந்த சேமிப்புடன், வங்கியில் கடனுதவி ஏற்பாடு செய்து கொடுத்து, எங்கள் நிறுவனத்திலிருந்து மானியம் வழங்கி, கடைகள் வைக்கவும், எம்ப்ராய்டரி, மெழுகுவர்த்தி - அகர்பத்தி தயாரிப்பில் ஈடுபடவும் உதவினோம். ஆந்திராவில் கர்னூலில் இருபத்திமூன்று கிராமங்களிலும், கர்

* சுயவேலை வாய்ப்பு பயிற்சியில்...



நாடகாவில் ஐம்பது கிராமங்களிலும் முயற்சிகள் எடுத்தோம். கர்னல் அசோக் என்பவர் இந்தத் துறையில் புகழ்பெற்ற நிபுணர். அவரை மேற்பார்வை செய்யக் கேட்டுக் கொண்டோம். வறுமைக் கோட்டுக்குக் கீழேயுள்ள ஆயிரக் கணக்கான பெண்களைக் கைதூக்கிவிட முடிந்தது. இதனால் குழந்தைகளுக்கு உணவும், கல்வியும் கிடைக்கலாயிற்று."



* அகிலா

''சமுதாயம் சார்ந்த நிறுவனம் என்றால்...?''

''எங்கள் சிட் ஃபண்டில் சுமார் பதினைந்து லட்சம் குடும்பங்கள் உறுப்பினர்கள். ட்ரக் ஃபைனான்ஸுக்கு உதவும் வகையில், பன்னிரண்டு லட்சம் டெபாஸிட்தாரர்கள். எல்லாருமே மத்திய தரக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களின் நம்பிக்கையில்தான் எங்கள் வளர்ச்சி அமைந்தது. ஒவ்வொரு கார்ப்பரேட் நிறுவனத்துக்கும், சமுதாயத்துக்கு ஏதேனும் ஒரு வகையில் திருப்பிச் செய்யும் கடமை இருக்கிறது. இந்த விஷயத்தில் ஜே.ஆர்.டி. டாடா எனக்கு ஆதர்ச மனிதர். எங்கள் ஸ்ரீராம் குரூப் தலைவர் தியாகராஜன், இதே சிந்தனை உள்ளவர். தலைவியாக இருந்து கொண்டு ஒரு நிறுவனத்தின் பொறுப்புக்களைக் கவனிப்பது ஒரு புறம் இருந்தாலும், என் மனசுக்கு மிகப் பிடித்த விஷயமாக சமூக சேவையும் இருந்து வருகிறது. ஸ்ரீராம் குரூப் அதற்கு உறுதுணையாக இருப்பது என் அதிர்ஷ்டம்!''

> "வறுமைக் கோட்டுக்குக் கீழேயுள்ள ஆயிரக் கணக்கான பெண்களைக் கைதூக்கிவிட முடிந்தது. இதனால் குழந்தைகளுக்கு உணவும், கல்வியும் கிடைக்கலாயிற்று."

# அகில இந்திய விருது!

கல்லூரியில் பேச்சுப் போட்டியில் 81, 82, 83ஆம் ஆண்டுகளில் தொடர்ந்து, ஆர்.கே. சண்முகம் சுழற் கோப்பை பரிசு. அகில இந்திய அளவில் 'மக்கள் தொகை கட்டுப்பாடு' பற்றிய ஆய்வுக் கட்டுரைக்காக அன்றைய நிதி அமைச்சர் எச்.எம். படேலின் பரிசு என்று பல விருதுகள் பெற்றவர் அகிலா. கல்லூரி நாட்களில் கர்நாடக இசைப் போட்டிகளில் பரிசுகளும், மாவட்ட அளவில் டேபிள் டென்னிஸ் போட்டிகளில் பரிசுகளும் வாங்கியிருக்கிறார்.

பணியில் சேர்ந்து, பதவிகளில் உயர்ந்தாலும், பரிசுகள் வாங்குவது என்னவோ தொடர்ந்து கொண்டேதான் இருக்கிறது!

— சாருகேசி



# அரை தம்ளர் + அன்பு!

அனுராதா சேகர்

"பூ வாங்கிட்டு வாங்க" என்று கணேசனை ஏவிவிட்டு, 'என்ன புடைவைக் கட்டலாம்' என்ற ஆராய்ச்சியில், பீரோவைத் தலைகீழாகக் கவிழ்த்துப் போட்டிருக்கும் அமுதாவுடன் கை குலுக்கிக்கொள்ளுங்கள்... நம் தொடரின் இந்த வார கதாநாயகி. கல்யாணத்துக்குப் புறப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள்.

பௌதிக, ரசாயன, பொருளாதார, ஜோதிட, கலாசார காரணிகளுக்குப் பொருந்தக்கூடிய ஒரு புடைவையை அவள் தேர்ந்தெடுத்து முடிப்பதற்கும், கணேசன் பூ கொண்டு வருவதற்கும் சரியாக இருந்தது.

"ஐயோ... என்னது?"

'இனிமேல் வீணா பாத்திரத்தில், சங்கீதா நடிப்பார்' என்று ஒரு வரி போட்டு, கம்ப்யூட்டர் கிராபிக்ஸில் ஆளை மாற்றி விட, மெகா சீரியல் நேயர்கள் ஒரு நிமிஷம் திகைத்துப் போய் நிற்பார்களே... அது போல அமுதா பதறிவிட்டாள்.

"மல்லிப் பூ!"

"இது காக்கடாங்க! மல்லி கிடைக்கலையா?"

"மைசூர் மல்லினு சொல்லித்தானே கொடுத்தான்."

"அது சரி... இதுக்குப் பதிலா, ஒரு கட்டு கொத்துமல்லித் தழையை வைச்சுக்கிட்டுப் போகலாம்... அதுவே வாசனையா இருக்கும்."

இரண்டு முழ வாசமில்லா மலருக்காக, இரண்டு பாரா பாசமில்லாத வார்த்தைகள் இரண்டு பக்கமும் சங்கநாதம் முழங்க...

ஒரே கச்சா... முச்சா...! முச்சா...கச்சா...!

'ஜுராசிக்பார்க்'கில் ஒரு பெரிய டைனோஸர் கீழே விழுந்து சாயும்பொழுது, இன்னொரு குட்டி டைனோஸர் மெள்ள கால் பதித்து எட்டிப் பார்க்குமே... அது மாதிரி அடுத்த பத்தாவது நிமிஷம் இன்னொரு கச்சா முச்சா...

"இந்த ஷர்ட்டா போட்டுக்கிட்டு வரப் போறீங்க!"

"ஏன்?"

"ரசிகர் மன்றத் தலைவர் மாதிரி... மஞ்ச மஞ்சேல்னு... கண்ணெல்லாம் கூசுது..."

"நல்லாதான் இருக்கு..." அவன் விடாக்கண்டனாய் அதை 'இன்' செய்து கொள்ள...

"நீங்களும் உங்க டேஸ்ட்டும்...முதல்லே கழட்டுங்க..." அமுதாவும் கொடாக்கண்டியாக...

"தோ பாரு... நான் இப்ப கல்யாணத்துக்கு வரணுமா...வேண்டாமா?" சொல்லிக்கொண்டே சட்டையை மடித்து, தோள் பட்டைக்கு ஏற்றிக்கொள்ள, அவள் முகத்தைத் தூக்கி வைத்துக்கொள்ள, கணேசன் 'பைக்'கை ஸ்டார்ட் செய்தான், ஆத்திரத்தோடு உதைத்து.

அடுத்த கச்சாமுச்சா... கல்யாண மண்டபம் தேடும் படலத்தில் தொடங்கியது. அரும்பாக்கத்திலிருந்து அருண் ஹோட்டல் வரை, சல்லடை போட்டுத் தேடி விட்டார்கள். அறுபது நிமிடம் அலைந்த பிறகு, வைஷ்ணவா கல்லூரி அருகே ஒரு சின்ன சந்தில் ரொம்ப அடக்கமாக இருந்தது கல்யாண மண்டபம்.

"ஏண்டி லேட்...?" வாசலிலேயே அமுதாவின் அம்மா வரவேற்க...

"இந்த ரோட்டிலேயே ஒரு மணி நேரம் அலைஞ்சிருக்கோம். உன் மாப்பிள்ளைக்குப் பவுசு கிடையாது..." என ஆரம்பித்தவள்தான். விருந்து முடியும்வரை வாயே ஓயாமல், கணேசன் பற்றி புகார் பட்டியல் வாசித்தாள்.

எப்போ சந்தர்ப்பம் கிடைத்ததோ, அப்போதெல்லாம் மட்டம் தட்டி சந்தோஷப் பட்டுக்கொண்டாள்.

"என்ன, கணேசன் சிரிக்கவே மாட்டேங்கிறீங்க?"... யாரோ ஜோக்காளி ஒருவர் கேட்க,

"ஐயோ... சித்தப்பா... இவங்க நரசிம்மராவுக்குப் பங்காளி குடும்பம். ஜோக் அடிச்ச கையோட, விளக்கவுரை, பதவுரை எல்லாம் கோனார் நோட்ஸா போட்டுத் தரணும். அப்ப தான் புரியும்."

'பாவம்... கணேசன்!' என்று நாமும் ஒரு வார்த்தையில் முடித்துக் கொண்டு விடலாம்... வெந்த புண்ணில் ஆசிட் ஊற்றுவானேன்!

பிரம்மாண்டமான அரசியல் கூட்டத்தின் நாகரிகத்துக்கு, ஒரே ஒரு மைக் பேச்சு பதம் என்பது போல, அமுதா கணேசனின் தாம்பத்திய வாழ்க்கைக்கு சாம்பிள் இது. அமுதா போன்ற பெண்களின் மனநிலையை, 'ஹாஃப் எம்ட்டி; நாட் ஃபுல்' என்று மனோதத்துவ இயல் விளக்குகிறது.

ஒரு கண்ணாடி தம்ளரில், அரைத் தம்ளர் தண்ணீர் இருக்கிறது. அதை அமுதா போன்றவர்கள் பார்த்தால், "அரைத் தம்ளர் காலியாக இருக்கிறது" என்பார்கள். அதுவே பாசிடிவ்வான கண்ணோட்டம் கொண்ட பெண்கள் விமர்சித்தால், "அரைத் தம்ளர் தண்ணீர் இருக்கிறது" என்பார்கள்.

'முதலில் நிறைகளை மட்டுமே பெரிதாக்கிக் காட்டும் பூதக் கண்ணாடி அணியப் பழகுங்கள்!' என்று இதே மனவியலார் செய்முறை குறிப்பும் தருகிறார்கள். குறைகளும் இருக்கத்தான் செய்யும். அதுவும் உறுத்தத்தான் செய்யும். ஆனால் நிறைகளை பிளஸ் ஆக்கிக்கொண்டே போகும்போது, மனரீதியாக குறைகளும் மைனஸ் ஆகிக் கொண்டே போய் விடும் என்கிறார்கள். மனசில் அன்பிருந்தாலோ அரை டம்ப்ளரையே அது முழு டம்ளராகக் காட்டி விடும்!

'இப்படிச் செய்யாதே' என்று சொல்வதைவிட, 'இதைச் செய்யலாமே' என்று யோசனை சொல்வது மனதைப் புண்படுத்தாது. அதையும் கால் மேல் கால் போட்டுக் கொண்டு, தோரணையாக, சொடுக்குப் போட்டுப் பேசாமல், ரொம்ப மிருதுவான குரலில், வேண்டுதல் போல சொல்வது நூறு சதவிகிதம் பலனளிக்கும் என்கிறார்கள்.

சரி, இந்த மந்திர வார்த்தைப் பிரயோகம் சரிதானா..? கணவனை நம் பாதைக்குக் கொண்டு வர, உபயோகப்படுமா?

டெஸ்ட் பண்ணிப் பார்த்துவிடலாமா?

"ஏங்க... இந்த மஞ்சள் கலர் ஷர்ட்டையா போட்டுக்கிட்டு வரப் போறீங்க?"

"ஆமா, ஏன்?"

"இது நல்லாதான் இருக்கு... ஆனா, அந்த 'வெஸ்ட் மினிஸ்டர்' கிரே ஷர்ட் போட்டா, இன்னும் ஸ்மார்ட்டா இருக்குங்க... கரெக்ட் ஃபிட்டிங் வேறே! "அமுதா உன்னன் போடு பாராட்டிப் பேச, கணேசன், 'அமுதா சொல் மிக்க மந்திரமில்லை' என கண்டு கொண்டான்.

மறுபேச்சே இல்லாமல் சட்டையை மாட்டிக்கொண்டு, புது யூனிஃபார்ம் போட்ட ப்ரீகேஜி குழந்தை போல நிற்கிறான்.

"பாருங்க... யு லுக் கிரேட்..."

"இந்த காக்கடாவோ, காக்கி நாடாவோ.. இதை வைச்சுக்காதே அமுதா. வேறே பூ வாங்கிக்கலாம்..." கணேசன் தன் பங்குக்குச் சொல்ல...

"யக்கோவ்... என் வூட்டுக்காரர் பத்தியும் எழுதுக்கா" என்கிறாள் பூக்காரி லட்சுமி...!

(தொடரும்)

தியாகு: காங்கிராட்ஸ்டா! லதா உன்னை லவ் பண்றாளாமே! அவள் உன்னைக் காதலிக்க காரணம் என்ன?

பாலாஜி: நான் ரொம்ப புத்திசாலி. வசீகரமானவன். நல்ல ரசனையுள்ளவன்'னு லதா நினைக்கிறா.

தியாகு: சரி. நீ அவளை விரும்பக் காரணம் என்ன?

பாலாஜி: என்னைப் பற்றி இப்படியெல்லாம் நினைத்துக் கொண்டிருப்பதால்தான் எனக்கு அவளைப் பிடித்திருக்கிறது.

# ஐ.நா.வில் ஒரு புதுமுகம்

ஐ.நா. சபையில் சேர்ந்து கொள்ள ஸ்விட்சர்லாந்து எடுத்திருக்கும் முடிவு சரித்திரத்தில் ஒரு முக்கிய திருப்பு முனை. ஐ.நா. சபைக்கு இது தொடர்பாக ஸ்விட்சர்லாந்து விண்ணப்பிக்கவிருக்கிறது.

சமீபத்தில் நடைபெற்ற வாக்கெடுப்பில் அந்த நாட்டின் பாராளுமன்ற உறுப்பினர்களில் 55 சதவீதம் பேர் ஐ.நா. சபையில் உறுப்பினராவதற்கு ஆதரவு தெரிவித்திருக்கிறார்கள் - முக்கியமாக பிரெஞ்சு பேசும் மக்கள் பிரதிநிதிகள்.

1986ல் இதே போன்ற ஒரு ஆலோசனை ஓட்டெடுப்புக்கு விடப்பட்டபோது முக்கால் வாசி அங்கத்தினர்கள் ஒத்துக்கொள்ளவில்லை. இப்போது ஏற்றுக் கொள்ளத் தயாரானதற்கு அழுத்தமான பின்னணி இருக்கிறது.

இரண்டு உலகப் போர்களிலும் எந்தப் பக்கமும் சாராமல் நடுநிலையாக நின்ற நாடு ஸ்விட்சர்லாந்து.

முதலாம் உலகப் போரின்போது தன்னை நடுநிலை நாடு என்று வெளிப்படையாகவே ஸ்விட்சர்லாந்து அறிவித்துக் கொண்டது. இதனால் அந்த நாட்டுக்கு எந்தப் பிரச்னையும் ஏற்பட்டுவிடவில்லை. மாறாகப் பெருமையே சேர்ந்தது. இதன் விளைவாகத்தான் உலக அமைதியை லட்சியமாகக் கொண்டு லீக் ஆப் நேஷன்ஸ் என்ற (ஐ.நா. சபைக்கு முன்னோடியாக விளங்கிய) அமைப்பு உருவானபோது, அதன் தலைமையகமாக ஸ்விட்சர்லாந்தில் உள்ள ஜெனிவா தேர்ந்தெடுக்கப்பட்டது.

ஆனால் இரண்டாம் உலகப் போரில் ஸ்விட்சர்லாந்து தன்னை நடுநிலை நாடாக அறிவித்துக் கொண்டபோது பலருக்கும் வியப்பு. ஜெர்மன் ராணுவம் ஸ்விட்சர்லாந்தை ஆக்ரமிக்கும் என்று பலர் கருதினார்கள். ஆனால் அப்படி எதுவும் நடக்கவில்லை. காரணம் ஜெர்மனிக்கும் அதன் நட்புநாடான இத்தாலிக்குமிடையேயான வர்த்தகம், ஸ்விட்சர்லாந்தின் வழியாகவே நடைபெற்று வந்தது. இந்த நிலையில் தான் ஸ்விட்சர்லாந்ததை ஆக்ரமிக்கத் தொடங்கினால், அது ஆல்ப்ஸ் பகுதியிலுள்ள போக்குவரத்துப் பாதையை இடித்து மேற்படி வர்த்தகத்தைத் தடை செய்யுமோ என்ற பயத்தின் காரணமாகவே ஜெர்மனி, ஸ்விட்சர்லாந்திடம் வாலைச் சுருட்டிக் கொண்டது.

காலப் போக்கில் ஐ.நா.சபை உருவான பிறகும் அதில் உறுப்பினராக ஸ்விட்சர்லாந்து மறுத்துவிட்டது.

என்றாலும் உலக அளவில் அமைதிக்கான சில முயற்சிகளை ஐ.நா. மேற்கொண்டபோது அதற்கு ஆதரவை அளித்து வந்திருக்கிறது ஸ்விட்சர்லாந்து. உதாரணமாக 1996ல் போஸ்னியாவில் கலவரத்தை அடக்க ஐ.நா. தனது ராணுவத்தை அனுப்பியபோது, தனது ராணுவத்தினரையும் அதில் பங்கேற்க வைத்தது ஸ்விட்சர்லாந்து. இதே போல 1999ல் கொசாவாவுக்கு ஐ.நா. அமைதிப்படை சென்றபோதும் ஸ்விடசர்லாந்து தனது படையில் ஒரு பகுதியை அனுப்பி உதவியது.

இன்றைய நிலையில் ஸ்விட்சர்லாந்து ஐ.நா. சபையில் சேர முன் வந்ததற்கு முக்கியமான காரணங்களாக மூன்றைக் குறிப்பிடலாம்.

அமெரிக்கா, சோவியத் யூனியன் என்று இரு பெரும் வல்லரசுகள் தங்களுக்கிடையே பனிப்போரை வளர்த்துக் கொண்டு பகைமையின் உச்சக்கட்டத்தில் இருந்த காலம் ஒன்றுண்டு. இவர்களுக்கிடையே போர் மூண்டால் (மூன்றாவது உலகப் போர்!) அப்போது ஒரு சாராரை ஆதரிக்க ஸ்விட்சர்லாந்து தயாராக இல்லை. ஐ.நா. சபை ஒரு சாராரை ஆதரித்தால் சங்கடமாகிவிடுமே! இப்படி யோசித்த ஸ்விட்சர்லாந்து ஐ.நா.வில் சேராமல் தன் தனித்துவத்தைத் தொடர்ந்தது.

ஆனால் இப்போது நிரந்தரப் பகை என்று எந்த இரு நாடுகளிடையேயும் இல்லை. கொரியாவும் ஜப்பானும் எதிர் துருவங்கள் என்றாலும் இரு நாட்டுத் தலைவர்களும் மற்ற நாட்டுக்கு விஜயம் செய்வதோடு, இணைந்து கால்பந்து உலகக் கோப்பைப் பந்தயத்தையும் நடத்த சம்மதித்திருக்கிறார்கள். அமெரிக்க அதிபர் புஷ்ஷும், ரஷ்ய அதிபர் புடினும் நட்புடன் சந்திக்கிறார்கள். ஆப்கானிஸ்தானில் குண்டு மழை பொழிந்தாலும் அங்கு உருவான அரசுக்கு ஆதரவு கொடுத்துக் கொண்டிருக்கிறது அமெரிக்கா.

ஆக எந்த இரு நாடுகளுமே தங்களை நிரந்தரப் பகைவர்கள் என்று சொல்லிக் கொள்

ளாதபோது, பிற நாடுகள் இரண்டு அணிகளாக வெளிப்படையாகப் பிரிந்து நிற்கும் சாத்தியக் கூறு வருங்காலத்தில்கூட இருப்பதாகத் தெரியவில்லை. இந்த நிலையில் ''அணி சேராக் கொள்கை'' என்பதை உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டிருப்பதில் அர்த்த மில்லை என்பதைப் புரிந்து கொள்ளத் தொடங்கியிருக்கிறது ஸ்விட்சர்லாந்து.

தெருவில் இரண்டு பேர் சண்டையிட்டுக் கொண்டால் "எனக்கு வேண்டாம் உங்கள் வம்பு" என்று நகர்ந்து செல்பவனைவிட, அவர் கள் சண்டையை விலக்கிவிடும் தார்மீகத் துணிவு உள்ளவனுக்குத் தான் மதிப்பு அதிகம். அந்த வகையில் உலகின் பல்வேறு நாடுகளுக் கிடையே உள்ள பிணக்குகளைத் தீர்க்க முன்வரும் அமெரிக்கா, நார்வே, ஸ்வீடன் போன்ற நாடுகளுக்கு (ஸ்விட்சர் லாந்தைவிட) மதிப்பு அதி கரித்திருக்கிறது. அதுவும் சுயநலம் என்பதைக் கருதா மல் செயல்படுவதால் நார் வேக்கும் ஸ்வீடனுக்கும் கூடுதல் மதிப்பு. எனவே ''ஊருக்கெல்லாம் ஒரு வழி, எனக்குத் தனி வழி'' என்கிற போக்கு ரொம்ப நாள் உதவாது என்பதைப் புரிந்து கொண்டிருக் கிறது ஸ்விட்சர்லாந்து.



இவை இரண்டை யும்விட வேறொரு முக் கிய காரணம் உண்டு. பயங்கரவாதம், போதை மருந்துக் கடத்தல் போன்றவை இன்று கிட்டத்தட்ட எல்லா நாடுகளை யுமே ஆட்டிப் படைக்கின்றன. வெளிநாட்டு சக்தி களைவிட, இந்த உள்நாட்டு அவ லங்களை அடக்கு வது பெரும் சவா லாக விளங்குகிறது. உள் நாட்டு வெறியர்களுக்கு வெளிநாட்டுத் தீய சக்தியின் ஆதரவுக் கரம் நீண்டால் அது மேலும் பேராபத் தாக உருவாகிறது. இதையெல்லாம் இரும்புக்கரம் கொண்டு அடக்க வேண்டுமென்றால் சம்பந்தப்பட்ட பிற நாடுகளின் உதவியும் தேவைப்படும். ஆக யுத்தகாலத்தில் என்றில்லை; அமைதி நேரங்களி லும் பிற நாடுகளின் நேசம் அவசியமாகிறது. ஐ.நா.சபையின் உறுப் பினரானால் ஒரே சமயத்தில் பல்வேறு நாடுகளுடன் கைகுலுக்குவது சுலபமானதாகிவிடும்.

ஐரோப்பிய யூனியன் எனும் ஜோதியில் கலந்து கொள்ளும் ஆர்வம் ஸ்விட்சர்லாந்துக்கு உண்டாகியிருக்கிறது என்றும் இதற்குப் பொருள் கொள்ளலாம். விரைவில் ஸ்விட்சர்லாந்திலும் யூரோ நாணயம் புழக்கத்துக்கு வரலாம்!

— அருண் சரண்யா

> "எந்த இரு நாடுகளுமே தங்களை நிரந்தரப் பகைவர்கள் என்று சொல்லிக் கொள்ளாதபோது, பிற நாடுகள் இரண்டு அணிகளாக வெளிப்படையாகப் பிரிந்து நிற்கும் சாத்தியக் கூறு வருங்காலத்தில்கூட இருப்பதாகத் தெரியவில்லை."



# பேசாத கண்ணும் பேசுமே

ஒரு புதிய இயக்குனருக்கு முதல்படம், வரம் என்றால், இரண்டாவது படம் வேள்வி. முரளிகிருஷ்ணா விஷயத்தில் முதல் முயற்சி பரணியின் இசையால் தப்பித்துக் கொண்டது. இரண்டாவது முயற்சியில், இதை உணர்ந்து விழித்துக் கொண்டிருப்பார் என்ற நம் எண்ணம் முதல் பதினைந்து நிமிடங்களிலேயே புஸ்...!

முட்டாள்கள் தினத்தன்று தனது காதலி மோனலுக்கு விளையாட்டுக் காட்ட முடிவு செய்கிறார் குணால். இதற்காக அலுவலகத் தோழி மம்தாவைப் பொய்க் கல்யாணம் செய்து கொண்டுபோய் மோனல் முன்பு நிற்க, அவரும் அதை நம்பிவிட, பிள்ளையார் பிடிக்க, குரங்காகிவிட்டதே என்று, "இல்லையில்லை பொய். வேண்டுமானால் மம்தாவைக் கேட்டுப்பார்!" என்று குணால் அலற, மம்தாவோ திருமணம் நிஜமென்று அதிர்ச்சி தருகிறார்! ஆனால் ரசிகர்களுக்கோ துளிக்கூட அதிர்ச்சியில்லை. தவிர அடுத்து வரும் பழி வாங்கும் படலம், புதுமையேதுமில்லாத க்ளைமாக்ஸ். விட்டால் கேமரா கோணங்களையும் கூட சுலபமாய் ஒப்பித்துவிடும் நிலையில் காயலான்கடை நெடியோடு கதை. அதற்கொரு பயின்கம் திரைக் கதை.

கமர்ஷியல் படங்களின் நீளத்திற்குத் துணிச்சலாய்க் கத்திரிவைக்கும் எடிட்டர் சாய்சுரேஷ், தூங்கி விட்டதுகூட இழுவைக்குக் கூடுதல் காரணம்.

சரி காட்சிகளாவது கொஞ்சம் புதிய 'டச்'சோடு இருக்கிறதா? என்றால் பிரேம் பை பிரேம் தலைவலி ரகம்.

அரை டஜன் படங்களைத் தாண்டிய பிறகும் குணால் நடிக்க கற்றுக் கொள்ளாதது கொடுமை. காலமாகிவிட்ட மோனலின் கவர்ச்சியான நடிப்பை ரசிக்க முடியாமல் முதல் பெஞ்ச் ரசிகர்களே நெளிகிறார்கள்.

அறிமுக நாயகி மம்தா மட்டும் தேறிவிடுகிறார். கர்ணாஸ், சாப்ளின் பாலு, பாலாஜி கூட்டணியின் காமெடியில் புதுச் சரக்கு இல்லையென்றாலும் டைமிங் சென்ஸ் ரசிக்க வைக்கிறது.

கதைக்கும், படத்தின் தலைப்பிற்குமான தொடர்பு பற்றி க்ளூ ஏதேனும் கண்டுபிடித்தால் பத்து சவரன் பரிசு என்று போட்டி அறிவிக்கலாம்; ஏமாளி ரசிகர்கள் கலந்து கொள்ளக் கூடும். மற்றபடி தியேட்டருக்கு வெளியேதான் என்றில்லை உள்ளேயும் கத்திரிவெயில்.

— விஷுவல்தாசன்

● ஜஸ்ட் பாஸ்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)



உ

ஸ்ரீ ராமஜெயம்

ஸ்ரீ விகனஸ மஹா குருவே நம :

# ஸ்ரீ சுதர்ஸன ஜெயந்தியை முன்னிட்டு

## ஸ்ரீ சுதர்ஸன மஹாயக்ஞ்யம் (ஒரு லக்ஷம் ஆவ்ருத்தி)

**(17.6.2002 திங்கள் முதல் 20.6.2002 வியாழன் வரை)**

**ஸ்ரீ சுதர்ஸன மஹாயக்ஞ்யம் நடைபெறும் இடம் :**

**டி.வி.ஆர். சுப்பி செட்டி வசந்த மண்டபம்**

எண் : 14, மேற்கு சித்திரகுளம் தெரு, மைலாப்பூர், சென்னை – 600 004.
போன் : 4950453

கட்டணம் **ரூ.100/- ரூ. 250/- ரூ.500/- ரூ.1000/ ரூ.5000/-**

பிரதிதினம் காலை 7 மணி முதல் பகல் 12 மணிவரையிலும் மாலை 5.00 மணி முதல் இரவு 9 மணி வரை மஹாயக்ஞ்யம் நடைபெறும்.

20.6.2002 **ஸ்ரீ சுதர்ஸன ஜெயந்தி** அன்று பகல் 12.00 மணிக்கு மஹாபூர்ணாஹுதி நடைபெறும்.

குறிப்பு: 1) **ரூ.100/-** செலுத்தும் பக்தர்களுக்கு **ஸ்ரீ சுதர்ஸன செப்பு டாலர்** வழங்கப்படும்.

2. **ரூ. 250/-** செலுத்தும் பக்தர்களுக்கு **ஸ்ரீ சுதர்ஸன யந்திரம்** மற்றும் **ஸ்ரீ சுதர்ஸன செப்பு டாலர்** வழங்கப்படும்.
3. **ரூ. 500/-** செலுத்தும் பக்தர்களுக்கு **ஸ்ரீ சுதர்ஸன யந்திரம், ஸ்ரீ சுதர்ஸன ரக்ஷை** வைத்து வெள்ளி தாயத்து வழங்கப்படும்.
4. **ரூ. 1000/-** செலுத்தும் பக்தர்களுக்கு **ஸ்ரீ சுதர்ஸன யந்திரம், ஸ்ரீ சுதர்ஸன ரக்ஷை** வைத்து வெள்ளி தாயத்து மற்றும் வெள்ளி டாலர் வழங்கப்படும்.
5. **ரூ. 5000/-** செலுத்தும் பக்தர்களுக்கு யாக சாலை உள் விசேஷ சங்கல்பமும் **ஸ்ரீ மஹா சுதர்ஸன யந்திரமும்** மற்றும் **ஸ்ரீ சுதர்ஸன ரக்ஷை வைத்த 1 கிராம் தங்க தாயத்தும்** பூர்ணாஹுதி முடிந்தவுடன் ஒரு தம்பதிகளுக்கு ஸ்ரீ சுதர்ஸன கலச தீர்த்தம் சேர்க்கப்படும். ஒரு கலசமும் கொடுக்கப்படும்.

குறிப்பு : மேற்கண்டவை அனைத்தும் ஸ்ரீ சுதர்ஸன மஹாயக்ஞ்ய பூஜையில் வைத்து கொடுக்கப்படும். இப் பூஜையில் கலந்து கொள்ளும் பக்தர்கள் அனைத்து நபர்களுக்கும் தனித்தனியாக சங்கல்பம், ரக்ஷாபந்தனம், ஸ்ரீ சுதர்ஸன படம் முதலியவை கிடைக்கும்.

இங்ஙனம்

**ஸ்ரீ சுதர்ஸன மஹாயக்ஞ்ய கமிட்டி,**

**S.** ஸ்ரீரங்கராஜ பட்டாசாரியார், **T.** சம்பத்குமார், **V.** நந்தகுமார், **M.** பிரவீன்குமார், **T.** சுதர்ஸன்.

**M.O.** அல்லது **D.D.** அனுப்பும் விலாசம் மற்றும் டிக்கெட் கிடைக்கும் இடம்

**ஸ்ரீ சுதர்ஸன மஹாயக்ஞ்ய கமிட்டி,**
**ஸ்ரீ ரங்கராஜபட்டாசாரியார்,**
**டி.வி.ஆர். சுப்பி செட்டி வசந்த மண்டபம்,**
**நெ. 14, மேற்கு சித்திரகுளம் தெரு, மைலாப்பூர்,**
**சென்னை - 600 004. ஃபோன் : 495 0453**

